# நீலி யட்சகானம்




ஆசியவியல் ஆய்வு நிறுவனம்,
சென்னை - 600 041

# நீலி யட்சகானம்


பொதுப்பதிப்பாசிரியர்கள்

டாக்டர் ஷு ஹிகோசகா

டாக்டர் ஜி. ஜான்சாமுவேல்

பதிப்பாசிரியர்

டாக்டர் பூ. சுப்பிரமணியம்






ஆசியவியல் ஆய்வு நிறுவனம்

சென்னை 600 041

நீலி யட்சகானம்
ஆசியவியல் ஆய்வு நிறுவனம்.

முதற்பதிப்பு - டிசம்பர், 1994.

வெளியீட்டு எண்- 32

விலை ரூபாய். 150. US $ 20.

## தமிழ்நாடு அரசின் சிறந்த தமிழ் நூலுக்கான பொருளுதவியுடன் வெளியிடப்படுகிறது.

நூல் கிடைக்குமிடம்
நூல்வெளியீட்டுத்துறை,
**ஆசியவியல் ஆய்வு நிறுவனம்,**
திருவான்மியூர், சென்னை 600 041. இந்தியா.
தொலைபேசி: அலுவலகம் 416728, 418962, 419866, 4925085
தொலைவரி (Fax) 91-44-419866.

# பொருளடக்கம்

# பாட்டு முதற்குறிப்பு

(எண் — பாட்டுஎண்)

# பதிப்புரை

'நீலியட்சகானம்' என்னும் இந்நூல் ஒரு சுவடிப்பதிப்பாகும். சென்னை, அரசினர் சுவடி நூலகத்தில் டி.எண் 505 இல் பாதுகாத்து வைக்கப் பெற்றுள்ள ஓலைச் சுவடியை அடிப்படையாகக் கொண்டது. இந்தச் சுவடியில் 26, 27, 28, 29, 30 ஆகிய எண்களையுடைய ஐந்து ஏடுகள் காணப்படவில்லை. இதே சுவடி நூலகத்தில் ஆர் எண். 2665 இல் பாதுகாக்கப்பட்டு வரும் சுவடியில் இந்தப் பகுதிகள் கிடைத்தன. அவற்றை எடுத்து எழுதி விடுபட்ட பகுதிகள் முழுமையாக்கப்பட்டுள்ளன. அதாவது,

'பேய்ப்பந்தலென் றறியாமல்பெருந்தாகத்தால்'... என்று தொடங்கும் (பாட்டு - 70 இல் அடி - 3) அடிமுதல், 'கொத்தந்தை செட்டி குமாரத்தி நானென்ன (பாட்டு. 82) என்னும் அடிமுடிய உள்ளவை ஆர். 2665 எண்ணுள்ள சுவடியிலிருந்து எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. இதனால் நூல் முழுமைபெற்றதாகிறது.

இந்தச் சுவடி எழுதத் தொடங்கிய நாளைக் குறிக்கும் செய்தி தொடக்க ஏட்டில் காணப்படுகிறது. அந்த ஏட்டுக்கு எண் கொடுக்கப்பெறவில்லை.

...இதுகளை எழுதத் தொடங்கியது - ருத்திரோத்காரி வருஷம், ஆவணி மாதம், 29 ஆம் தேதி, சோம வார நாள் சாயந்திரம் என்றறியவும் என்னும் அந்தச் செய்தியால் இந்தச் சுவடி படியெடுக்கப்பட்டிருக்கிறது என்பது மட்டும் புலனாகிறது. நூல் இயற்றப்பெற்ற காலம், ஆசிரியர் பெயர், அவருடைய ஊர்ப்பெயர் முதலான வரலாறுகள் எதுவும் கிடைக்கவில்லை.

இந்த சுவடியைப் படியெடுத்தவர்,

1. அரிச்சந்திர நாடகம்
2. ஆதிமூலர் நொண்டி நாடகம்
3. கள்ள நாடகம்
4. குசலவ நாடகம்

5. சாரங்கதர நாடகம்
6. சாளுவராய நொண்டி நாடகம்
7. தேரூர்ந்த நாடகம்
8. நீலி நாடகம்
9. நொண்டி நாடகம்
10. பழநி நொண்டி நாடகம்
11. பழனிப் பள்ளு
12. மதிகெட்டான் நாடகம்
13. மதியுள்ளார் நாடகம்
14. மார்க்கண்ட நாடகம்
15. முக்கட்டுப் பள்ளு நாடகம் - என்னும் பதினைந்து நாடகங்களைப்

படியெடுத்திருக்கிறார் என்ற குறிப்பும் முதல் ஏட்டில் காணப்படுகிறது. நாடக ஆர்வமும் அனுபவமும் பெற்ற இவர்தம் வரலாறு பற்றியும் அறிய இயலவில்லை.

நூலின் தொடக்கத்திலும் முடிவிலும் காணப்பெறும்,

"தாந்தோணிய பிள்ளையார் ரட்சிக்க வேண்டியது;
தாந்தோணியார் ரட்சிக்கவும்;
ஆறுமுகம் துணை;
தேவி சகாயம்;
திருமுருகர் திருவடிகள் துணை"

என்பன போன்ற தொடர்கள் படியெடுத்தோர் எழுதியவையாகக் கொண்டால், அவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பது புலனாகிறது.

"காராளர் நீலிபழி கழிவினத்தைச் சொல்ல
நாராயணா பிழைகள் வாராமல் காரும்" (8)

என்னும் அடிகள் மட்டும் திருமால் வணக்கமாக நூலில் அமைகின்றன. இவற்றைத் தவிர, கணபதி, கந்தன் ஆகியோர் வணக்கங்கள் தொடக்கத்தில் அமைகின்றன.

"திருமால் மருகன் முருகே சுவரன் பத
முளரியைப் பணிவாம்," (5)

"திருவல்லை - கொத்தநந்த நாதரிட
பத்தி மறவேன்", (6)

"திருவலத்தே வள்ளி நாயகி கருணை
வாருதி யுண்டாமே" (8)

நூலினுள் அமையும் இத்தகு அடிகள் பலவற்றால் நூலாசிரியரும் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்று கருத முடிகின்றது. ஆனால், கதை நிகழும் இடமான பழையனூர், திருவாலங்காடு ஆகிய திருத்தலங்கள் சைவத்தலங்கள் ஆகும். நூலின் உட்பொருள் கருத்தால் இறைவணக்கம் முதலிய தொடக்கப் பாடல்கள் சைவ சமயத்தைத் தழுவி எழுதப்பட்டன என்று கொள்ளுவதற்கும் இடமுண்டு.

**பாட்டுவகை**

சுவடியில் 130 பாடல்களும் 29 வசனங்களும் அடங்கியுள்ளன. அவற்றுள்,

நான்கு வகையான தாள அமைப்பில் 97 பாடல்களுக்குத் தாளப் பெயராலேயே தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. யட்சகான நாடகத்திற்குரிய இராகத்தைப் பற்றிய நடைமுறைப் பயிற்சிகள் குறைந்து விட்டதால் பாகவதர்கள் தங்கள் விருப்பமான இராகத்தில் பாடிக் கொள்ளலாம் என்னும் நோக்கில் அவற்றிற்குரிய இராகங்கள் கொடுக்கப்பெறவில்லை என்பது புலனாகிறது.

அர்த்த சந்திரிகை, ஏலச்சிந்து, சிந்து, தரு, தாலாட்டு, திபதை, நட்டகத்தரு, பத்தியம் போன்ற பாடல் அமைப்பில் 27 பாடல்கள் இடம் பெறுகின்றன. ஒரே ஒரு பாடலுக்கு மட்டும் மாளவிராகம் (67) என்று இராகத்தின் பெயர் தலைப்பில் கொடுக்கப் பட்டுள்ளது. மங்களம், வாழ்த்து, சோபனம் ஆகியவை அடங்கிய பாடல்கள் இறுதியில் அமைந்து நூலை நிறைவு செய்கின்றன.

**பதிப்புமுறை**

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவர் பொற்புலவர் - அன்னோர்
நடையிடையத் தம்வழியே நாட்டி மொழிமாற்றல்
கடையிடையர் மாட்டுவினை காண்"
(கலித்தொகை - பதிப்புரை)

என்னும் செய்யுளில் கூறியபடி சுவடிகளில் காண்பதைத் தம் விருப்பம்

போல் திருத்துதல் பதிப்பாசிரியருக்கு உரிய செயலன்று என்பதை அறிவோம் என்றாலும் சுவடிகளில், படியெடுப்போரால் நிகழ்ந்துள்ள பிழைகள் ஏராளமாகக் காணப்படுகின்றன என்பதையும் உணர்ந்து பதிப்புப் பணியை மேற்கொள்ள வேண்டிய கடமையும் பதிப்பாசிரியருக்கு உண்டு. சுவடிப்பதிப்பு திருத்தமானதாக, எளிமையாக உணரக்கூடியதாக அமைய வேண்டும் என்ற கருத்தோடு சுவடியில் காணப்பட்ட பல பிழைகளைத் திருத்திப் பதிப்பிக்கும் முறை இப்பதிப்பில் கையாளப்பட்டுள்ளது. திருத்தப்பட்ட சொற்கள் சுவடியில் எவ்வாறு இருந்தன என்பது அடிக்குறிப்பில் தரப்பட்டுள்ளது. சான்றாக, சுவடியில் நூலின் தலைப்பு 'நீலி அஷ்ட்டகாண்டம்' என்றே காணப்படுகிறது. இது நூலாசிரியரின் பிழையன்று. அது முறையாக 'நீலியட்சகானம் என்று பதிப்பிக்கப்பட்டது.

| | |
|---|---|
| னாராயணா பிழைகள் | 8 |
| வல்லினாயகி கறுணை | 8 |
| பெரியதுரையாய்வீத்திருந்திடும் | 17 |
| வுயித்தியமதுபுரிந்தார் | 21 |
| பெண் குலை செய்தான் இந்த | 31 |
| நெத்திதனில் சுட்டி தொங்க | 59 |

என்னும் தொடர்களில் உள்ள எழுத்துப் பிழைகள், கொச்சைச் சொற்களாகப் பிழைபட அமையும் சொற்கள் போன்றவை முறையே நாராயணா, வல்லிநாயகி, கருணை, வீற்றிருந்திடும், யுத்தமது, கொலைசெய்தான், நெற்றிதனில் என்பனவாகத் திருத்திப் பதிப்பிக்கப்பட்டன. இப்படித் திருத்தம் பெற்றவை ஆங்காங்கு சுட்டப்பட்டுள்ளன.

யட்சகானம் என்னும் நூல்பெயர் வடசொல்லால் ஆனது. அதையே பொழிப்புரை, பதிப்புரை, ஆய்வுரைகளில் கையாள வேண்டியது முறை. அதே அடிப்படையில் எளிமையான பொருள் புலப்பாடு கருதி இராகம் (பண்), வாகனம் (ஊர்தி), நிமிஷம் (மணித்துளி), சுயரூபம் (உண்மை வடிவம்) போன்ற பல வட சொற்கள் உரைப்பகுதிகளில் அப்படியே கையாளப்பட்டன.

பாடல்களின் பொருளுக்கேற்பச் சுருங்கிய முறையில் தலைப்புகள்

கொடுக்கப்பட்டன. அவை . அடைப்புக்குறிக்குள் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு பாடலுக்கும் வரிசை எண் கொடுக்கப்பட்டது. வசனங்களின் முடிவில் வசனங்களுக்குரிய வரிசை எண் கொடுக்கப்பட்டது. இவ்வாறு எண் கொடுத்து நூலில் அமைவன 130 பாடல்கள் எனவும் 29 வசனங்கள் எனவும் முதலில் சுட்டப்பட்டது. சொல்லடைவில் சொற்கள் இடம்பெறும் பாடல்களின் எண்கள் கொடுக்கப்பட்டன. வசனங்களில் இடம்பெறும் சொற்களாயின் வ 17, வ 36 என 'வ' என்ற எழுத்துடன் சேர்த்து எண்கள் காட்டப்பட்டன.

நீலியின் வரலாறும், திருவாலங்காட்டுத் திருத்தலமும், பழையனூர் வரலாறும் மிகப்பழமை வாய்ந்தவை என்பதற்குச் சான்று பகரும் காரைக்காலம்மையார் பாடியருளிய திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், மூத்த திருப்பதிகம் ஆகிய பதிகப் பாடல்களும், திருத்தொண்டர் புராணம், சேக்கிழார் புராணம், சம்பந்தர் தேவாரம் ஆகியவற்றில் ஒவ்வொரு பாடலும் தொகுத்து இணைப்பில் தரப்பட்டுள்ளன.

திருவாலக்காட்டிலுள்ள, 'பழையனூர் திருவாலங்காடு - சாட்சி பூதேசுவரர்' திருக்கோயில் மண்டபத்தில் சேரன், சோழன், பாண்டியன் பாடிய பாடல்கள் என்பதாகப் பொறிக்கப்பட்டுள்ள பாடல்களும் இணைப்பில் தரப்படுகின்றன.

நூலின் ஆய்வுரைக்குப் பல செய்திகள் திரட்டப்பட்டன. அரசின் கட்டளைகளை நிறைவேற்ற வேண்டிய கட்டாயத்தினால், போதிய காலமில்லாமற் போயிற்று. எனவே, மிகச்சுருங்கிய ஆய்வுரை மட்டுமே இடம் பெறுகிறது.

தமிழில் சுவடிவடிவில் கிடைக்கும் ஆறு யட்சகான நூல்களையும் தொடர்ந்து வெளியிட வேண்டும் என்பது நிறுவனச் சுவடித்துறையில் எடுக்கப்பட்டுள்ள முடிவு. அதன்படி நீலியட்சகானம் என்னும் இந்நூல் முதலாவதாக வெளிவருகிறது. சுவடிப் பதிப்புகளை ஆங்கில மொழிபெயர்ப்புடன் இணைத்து வெளியிடுவதே நிறுவனத்தின் குறிக்கோள். இதுவரை அவ்வாறே வெளியிடப்பட்டு வந்தன. அரசின் ஆணையின்படி இந்நூல் மட்டும் தமிழில் தனிமையாக வெளியிடப்படுகிறது. இதன் மொழிபெயர்ப்பு தனித்தொகுதியாக வெளியிடப்பட்டுள்ளது. அடுத்த நூல்கள் முறையாக மொழிபெயர்ப்புடன் இணைந்து வெளியாகும்.

# நன்றி

பழையனூர் 'நீலியட்சகானம்' என்னும் சுவடியைப் பதிப்பிக்கும் பணியை அளித்து என்னை ஊக்கி வந்தவர்களாகிய நிறுவன இயக்குநர்கள், வணக்கத்திற்குரிய,

***டாக்டர் ஜி. ஜான்சாமுவேல், டாக்டர் ஷு உறிகோசகா*** ஆகியோருக்கு என்றும் நன்றியுடையேன்.

யட்சகானம் பற்றிய செய்திகள் பலவற்றைத் தேடித்தந்து உதவியவர்கள் டாக்டர் எம். ஹேமப்பிரபா அவர்கள். பல நூல்களைத் தாமே கொண்டு வந்து கொடுத்து ஆர்வமூட்டியவர்கள் டாக்டர் ஸ்ரீ கிருஷ்ணபட் அவர்கள். பழையனூர், திருவாலங்காடு ஆகிய தலங்களுக்கு உடன்வந்து செய்தி திரட்டும் பணியில் முழு உழைப்பையும் தந்து உதவியவர்கள் புலவர் பா. கண்ணையன் அவர்கள். பழையனூர் பற்றிய செய்திகள் பலவற்றைத் தொகுக்க, நேரில் செய்திகளைக் கூறி உதவியவர்கள், காஞ்சிபுரம் புலவர் சம்பந்த முதலியார், பழையனூர் திரு. ந. வடிவேல் முதலியார், சண்முக முதலியார் ஆகியோர். இலவசமாகப் புகைப்படத் தயாரிப்பில் உதவியவர்கள் திருவாளர்கள் சு. இளங்கோ, சு. இளவரசு, சு. இளம்வேள் ஆகியோர்.

அச்சுப்படி திருத்தம் போன்ற பணிகளில் தங்கள் உழைப்பை நல்கியவர்கள் திருவாளர்கள் த. பூமிநாகநாதன், டாக்டர் கி. ஜெயக்குமார், எம். மருதமுத்து, எம். பரிமணம், சி. அருணாசலம், செல்வி இராதா. ஜெயலட்சுமி ஆகியோர். சுவடிகளையும் நூல்கலையும் பயன்படுத்திக்கொள்ள்ள உதவியவர்கள் அரசினர் சுவடி நூலகம், உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூலகம் ஆகியவற்றின் பொறுப்பிலுள்ள அன்பர்கள். தட்டச்சுப் பணியில் முழு உழைப்பையும் அளித்தவர்கள் திருமதி நே. உமாராணி அவர்கள். அட்டைப் படத்தை உருவாக்கி அழகுபடுத்தியவர் திரு. அ.செ. நடராசன் அவர்கள்.

அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன். அழகுற அச்சிட்டு உதவியவர்கள் **அக்ஷரா நிறுவனத்தினர்.**

பூ. சு.

# ஆய்வுரை

***யட்ச கானம்***

யட்சர், யட்சர்கானம் அல்லது யட்சகானம், யட்சகான நாடகம் என்பன ஆய்வுக்குரியன.

***யட்சர்*** — கந்தருவர், கிம்புருடர், கின்னரர், சாரணர், யட்சர், வித்தியாதரர் போன்றோர் தேவ வகுப்பினர். நேப்பாலில் கந்கருவர் (காந்தருவர்) என்ற ஒரு இனத்தவர் வாழ்ந்து வருகிறார்கள். மார்வார் நாட்டு வைசியர்களும் தங்களைக் கந்தருவர் என்றே கூறிக்கொள்ளுகின்றனர். இவர்கள் இசையில் தேர்ச்சி பெற்றுப் பாட்டுப் பாடுவதையே தங்கள் தொழிலாகக் கொண்டவர்கள். இவர்கள் பாடும் பாடல் 'கந்தருவகானம்' என்றே வழங்கப்படுகிறது.

கந்தருவரைப் போன்று யட்சர் என்போரும் தேவ வகுப்பினருள் ஒரு பகுதியினர் ஆகிறார்கள். பிரம தேவரால் சிருஷ்டிக்கப்பெற்ற இவர்களுள் சிலர் ஒன்று கூடித் தங்களை இரட்சிக்க வேண்டும் என்று வணங்கி வேண்டினர். அவர்களை 'யட்சர் ஆகுக' என்று அருளினார். மற்றொரு பகுதியினர் நாங்கள் உடனே பட்சிக்க வேண்டும் (உட்கொள்ள வேண்டும்) என்று கேட்டனர். அவர்களை 'இராக்கதர் ஆகுக' என்று பணித்தார். இவர்களே இயக்கரும் இராக்கதருமாயினர் என்பர். இயக்கர், யக்கர், யட்சர் என்பன ஒரு பொருட் சொற்கள்.

காசிபன் சுரையிடத்துப் பெற்ற மக்கள் குபேரன் முதலானோர். இவர்கள் தேவ சபையில் யாழ்வாசிப்போர். இவர்களே இயக்கர் எனப்பட்டனர். இயக்கர் தலைவன் குபேரன் எனப்பட்டான். இயக்கராசன் என்பதும் குபேரனுக்குரிய பெயர்களுள் ஒன்று. இயக்கர்கள் குபேரனுடைய தொண்டர்கள். குபேரனுடைய செல்வத்தைக் காக்கும் பொருட்டு, இசைபாடி இலக்குமியை வணங்கி, அவள் அருள் பெற்றுக் குபேந்திரனின் செல்வத்தைக் காக்கும் தொண்டர்களாயினர்.

சௌராஷ்டிர நாட்டில் வாழும் ஒரு இனத்தவர் 'சாரணர்' என்றே வழங்கப்படுகின்றனர். தமிழ்நாட்டின் தென்மாவட்டங்களில் வாழும் ஒரு இனத்தவர் 'தேவர்' என்று வழங்கப்படுகின்றனர். கந்தருவர், சாரணர், தேவர் என்னும் பெயர்களைப் போன்று தேவ வகுப்பினர் பெயர்களுள் ஒன்றான 'யட்சர்' என்ற பெயரையும் ஒரு குழுவினர் பெற்றிருக்கிறார்கள். கன்னடம், ஆந்திரம். ஆகிய நாடுகளில் இந்த இனத்தவர் வாழ்ந்து வருகிறார்கள். கன்னட நாட்டின் கனரா மாவட்டம், பிற கடற்கரை மாவட்டங்கள் ஆகிய பகுதிகளில், சிறிய கிராமப் பகுதிகளில் வாழும் இந்த இன மக்கள் '**ஜக்கினி**' என வழங்கப்படுகின்றனர். ஆந்திர நாட்டின் சில கிராமப் பகுதிகளில் வாழும் இவர்கள் '**ஜக்குலு**' என்று வழங்கப்படுகின்றனர். கர்னூல் மாவட்டம், பத்தி கொண்டாவட்டத்தில் உள்ள ஜக்கசானி குண்ட என்ற பகுதியும், அனந்தப்பூர் மாவட்டத்தில் உள்ள '**ஜக்கல செருவு**' என்ற பகுதியும் ஜக்குலு இன மக்கள் வாழும் பகுதிகளாகவே பெயர் பெற்றவையாகும். இன்று 'ஜக்குலு' இன மக்கள் 'பலிஜா' எனவும் வழங்கப்படுகின்றனர்.

***யட்சகானம்*** — இந்திய இசைகளாகிய இந்துஸ்தானி, கர்னாடகா ஆகிய இரண்டினும் வேறுபட்ட ஒன்று யட்சானம். மிகப்பழைய இசையாகிய 'மத்திய கிரமா' என்பதிலிருந்து கர்னாடக இசை தோன்றியது. 'சட்ஜகிரமா' என்பதிலிருந்து இந்துஸ்தானி இசை தோன்றியது என்பது இசையறிஞர் பலரும் கூறும் கருத்தாகும். இதே போல, கந்தருவ கானத்திலிருந்து தோன்றியது யட்சகானம் என்றும் கூறுவர்.

கந்தருவ கானத்தை ஒத்தது யட்சகானம்; ஆனால் கந்தருவ கானம் மார்க் இசையையும், யட்சகானம் தேசி இசையையும் சார்ந்தவை; . . . . கந்தருவர் யட்சரிடமிருந்து பாடலைக் கற்றனர்; பிறகு யட்கானத்தைவிட கந்தருவ கானமாகிய மார்க் இசை மிகவும் சீர்திருத்தம் அடைந்து முழுமையான மாற்றம் பெற்றுவிட்டது என்பதும் ஒருசார் அறிஞர்களின் கருத்தாகும்.

கந்தருவர் பாடும் இசை கந்தருவ கானம் என்றாற் போல யட்சர் பாடிய பாடல் யட்சகானம் எனப்படுகிறது. யட்சர் தங்கள் தலைவனாகிய குபேரனுடைய செல்வமானது நிலைக்க வேண்டும்; மேலும் பெருக வேண்டும் என்பதற்காக இலக்குமியைப் புகழ்ந்து பாடி வணங்கும் தொழிலை மேற்கொண்டவர்கள். அவ்வாறு அவர்கள் பாடிய பாடல்

யட்சகானம் எனப்பட்டது. மந்திர சாத்திரங்களில் காணப்படும் 'யட்சணி வித்யா' எனப்படுவது யட்சகானத்தைக் குறிப்பதாகும். அது மக்கள் சந்ததி வளர வேண்டும், அவர்களுடைய செல்வம் பெருக வேண்டும் என்று வேண்டி யட்சர்களால் பாடப்பட்டதாகும். வாத்ஸ்யாயனருடைய காம சூத்திரம், ஹேமசந்திரருடைய தேசிநாமமாலா ஆகிய இரண்டு நூல்களிலும் 'யட்சராத்திரி' என்னும் தொடர் எடுத்துக் காட்டப்படுகிறது. அது 'தீபாவளி' என்னும் பொருளில் விளக்கப்படுகிறது. அந்த இரவு முழுவதும் பாடியாடும் மரபு இருந்திருக்கிறது. அந்த யட்சராத்திரி நாளில் மக்கள் மரபு தழைக்கவும், செல்வம் கொழிக்கவும் வேண்டி யட்ச தேவதை பூசை செய்யப்படுவது உண்டு. அந்தப் பூசை காலத்தில் இரவு முழுவதும் யட்சர்கள் பாடுவது உண்டு. அது யட்சகானமேயாகும். இன்றும் தெலுங்கு அந்தணர்கள் 'யக்க தேவதாபூஜை' நடத்தி வருகிறார்கள். அது 'அக்க தேவதல பூஜா' என வழங்கப்படுகிறது. அப்பூசையிலும் யட்சகானப் பாடல் யட்சர்களால் பாடப்படும் வழக்காறு இருந்து வருகிறது. கன்னட நாட்டில் 12ஆம் நூற்றாண்டிலேயே பாடப்பட்டு வந்த இப்பாடல் 'எட்சகானா' எனவும் 'யக்கலகானா' எனவும் வழங்கப்படுகிறது.

காமவல்லி (காமபல்லி) என்பவர் ஊர் தெய்வமாக விளங்கிவரும் ஈஸ்வரியாவார். அந்தக் காமவல்லியாருக்குப் பரம்பரையாகத் தொண்டுசெய்யும் பணியை அருள்செய்து சில யட்சர்களை அனுப்பினார் சிவபெருமான். அவர்களுக்கு உரிய இசைக் கருவிகளையும் சிவபெருமானே கொடுத்தருளினார். இறைவன் கட்டளைப்படி தேவியின் அருகிலிருந்து பாடித்தொண்டு செய்து வந்த அந்த யட்சர்கள் தேவியின் முன் பாடிய பாடல்களே 'யட்சகானம்' எனப்பட்டன. அந்த யட்சர்கள் காமவல்லியின் தொண்டுக்கு அனுப்பப்படுவதற்கு முன் சிவபெருமான் அவர்களைச் சுக்கிராச்சாரியாரிடம் அனுப்பி இசைகற்கச் செய்தார். அவர் கற்பித்த இசையே யட்சகானம் எனப்பட்டது என்பது ஒரு கருத்து. காமவல்லியின் அருகிருந்து அந்தத் தேவியைப் புகழ்ந்து பாடிய யட்சகானப் பாடல்களைப் பற்றிய செய்திகளைக் '**காமேசுவரிபாடா**' என்னும் பழம்பெருந் தெலுங்குநூல் எடுத்துக் காட்டுகிறது.

யட்சர், கந்தருவர் என்போர் தேவசாதியினர் என்பது வேதம். அந்த யட்சர் பாடிய பாடல் யட்சகானம் எனப்பட்டதா?

'யட்ச' என்ற சொல் ஜைன மரபிலும் இருக்கிறது. அந்த யட்சர் பாடிய பாடலா?

கிராம மக்கள் 'யட்சா' என்னும் ஆண் தேவதையையும், 'யட்சி' என்னும் பெண் தேவதையையும் பூசை செய்வார்கள். அப்பூசையின்போது அந்தக் கிராம மக்கள் பாடும் பாடல் யட்சகானம் எனப்பட்டதா?

மிக இனிமையான இசையைக் கந்தருவகானம் என்று கூறுவது போல யட்சகானம் என்பதும் பாட்டுகளில் ஒருவகைப் பாட்டா?

என்பன போன்ற வினாக்களை எழுப்பிக்கொண்டு 'ஒருவரே வந்து பாடுவது' என்னும் பொருளில் 'யக்கல கானா' என்னும் பெயர் கன்னட மொழியில் வழங்கி வருகிறது என்பர் சிராமகாரந்தா அவர்கள்.

ஆந்திர நாட்டிலுள்ள 'அகோபில க்ஷேத்திரம்' என்னும் பகுதிகளில் வாழும் மலைவாழ் மக்கள் 'ஜக்கு' என்று அழைக்கப்படுகின்றனர். அந்த ஜக்குலர் பாடும் பாட்டு 'ஜக்குல பாட' என்று வழங்கப்பட்டது. பிறகு வடமொழித்திரிபால் 'யட்சகானம்' என்றாயிற்று என்பதும் சிவராம காரந்தா அவர்களின் கருத்தாகும்.

ஆந்திர நாட்டில் நடனம் ஆடும் பெண்கள் யட்சர்களைப் போன்று வேடமணிந்து விழாக்காலங்களில் கோயில்களிலும், அரசவைகளிலும் பாடியாடி வருவார்கள். அவர்கள் யட்ச வேடத்துடன் பாடுவதற்காக உருவாக்கப்பட்ட பாடல்களே 'யட்சகானம்' என்று வழங்கப்பெற்றன என்பதும் ஒரு கருத்து. ஆனால் யட்சர்களைப் போல வேடமணிந்து ஆடத்தொடங்கிய காலத்திற்கு முன்பே, கிராம தேவதைகளையும் இலக்குமியையும் வணங்கும் இசைப்பாடலாக மட்டுமே பாடப்பட்டு வந்த காலத்திலேயே யட்சகானம் என்ற பெயர் தோன்றியுள்ளது என்பது கருத்தில் கொள்ளத்தக்க ஒன்றாகும்.

கனரா மாவட்டக் கிராமங்களில் உள்ள பழங்காலக் கோயில் சடங்குகளிலும், காலை, மாலை பூசை நேரங்களிலும், பழையமுறைத் திருமண ஞானப்பாடல்கள் பாடுவதிலும் யட்சகானப் பாடல்கள் பாடப்பட்டு வருகின்றன. அந்தக் கிராமப் பகுதிகளில் இன்றும் யட்சகானப் பாடலுக்கு மிகுதியான வரவேற்பு இருந்து வருகிறது. மக்களால் பெரிதும் விரும்பப்படுவதோடு, இன்றும் யட்சகான இசையில் பாடப்பட்ட பாடல்களைக் காலை நேரத்தில் உதய ராகத்தில் பாடி வரும் பரம்பரைப் பழக்கம் இருந்து வருகிறது. பாகவதக்கதை பற்றிய பாடல்கள் நீண்ட

பாடல்களாக அமைந்தவை. இறையுணர்வையும் நல்ல கருத்துகளையும் நிலைக்கச் செய்யும் நோக்கத்தினாலும், யட்சகான இசையின் ஈடுபாட்டினாலும், மன அமைதியைத் தரும் பாகவதக்கதை பற்றிய பாடல்களைக் காலை நேரத்தில் பாடும் பழக்கத்தைக் கொண்டுள்ளனர்.

பூபதி ராகம், மோகன ராகம் ஆகிய இரண்டும் யட்சகான இசையில் மிகவும் புகழ்பெற்றவை. திருவிழாக்களிலும், திருமணங்களிலும் நாதசுர வித்துவான்கள் இந்த இருவகை இசைகளையே பெரிதும் விரும்பி இசைத்து வந்தனர்.

யட்சகானப் பயிற்சி மிகுந்த உழைப்பினால் பெறக்கூடிய ஒன்று. அதனாலேயே அது சிறப்பானதாகவும் உயர்வானதாகவும் கருதப்பட்டது. அதாவது மாணாக்கருக்கு முறையான பயிற்சி யளிக்கப்பட்டது. மழைக்காலத்தில் வீட்டிலும், இசை நிகழ்ச்சிகள் நடைபெறுங்காலத்தில், அந்த நிகழ்ச்சிகள் நடைபெறும் இடங்களிலுமாக அப்பயிற்சிகள் அளிக்கப்பட்டன. பயிற்சியளிக்கும் பாகவதர்கள் தங்களுடனேயே மாணாக்கர்களை அழைத்துச் செல்லுவார்கள். மிகுதியான வாய்ப்புகளையும் உண்டாக்கித் தருவார்கள். இசை நிகழ்ச்சிகளில் இடையிடையே தாங்கள் ஓய்வு பெறும் முறையில் மாணாக்கருக்கு இடமளிப்பர். இவ்வாறான பயிற்சி முறைகள் மிகவும் உழைத்துப் பெற வேண்டியவையாயின.

சந்திர பிரபபுராணம் என்னும் கன்னட இலக்கியம் (கி.பி.1105) யட்சகானத்தை 'எக்கலகானம்' என்று குறிப்பிடுகிறது. அன்றைய மன்னர் அஜிதசேனா என்பவர் இனிய யட்சகான இசையை மிக மகிழ்ச்சியோடு கேட்டு ரசிப்பார் எனவும் குறிப்பிடுகிறது அந்நூல்.

நாகசந்திரர் (அபிநவபம்பா) எழுதிய மல்லிநாத புராணம் (கி.பி.1187) என்னும் நூல், 'எக்கல கானம்' போன்றவை தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமியின் உள்ளத்தைத் தொடுபவை என்று குறிப்பிடுகிறது.

சாரங்கதேவா என்பவர் (கி.பி.1210-1244) எழுதிய சங்கீத ரத்னாகரா என்னும் நூல் யட்சகானத்தைப் பற்றி குறிப்பிடுகிறது. அந்நூல் யட்சகானத்தை 'ஜக்கா' என்னும் சொல்லால் ஆளுகிறது. மகாபாரதமும் வேதநூல்களும் 'யட்சகானம் தெய்வீகத் தன்மையுடையது' எனக் குறிப்பிடுகின்றன எனவும் அந்நூல் எடுத்துக்காட்டுகிறது.

கன்னடக் கவிஞர் ரத்னாகரவர்ணி என்பவர் தம் பரதேசவைபவம் என்னும் நூலில் (கி.பி.16. நூ.ஆ) எக்கலகானம் என்னும் இசைப்பாடலை 'எக்கடிகா' என்னும் குழுவினர் பாடுகிறார்கள் என்று குறிப்பிடுகிறார்.

யட்சகானம் என்பது தனித்தன்மை வாய்ந்த ஒரு பாநடை என்பர் கோவிந்த தீட்சதர் (கி.பி.1620).

கன்னடத்தில் எக்கலா, எக்கடிகா, ஜக்கா என்னும் பெயர்களும், தெலுங்கில் 'ஜக்குலு' என்னும் பெயரும் தெய்வீகத் தன்மையும், தெய்வக் கொள்கையும் உடைய இனத்தவருக்குப் பெயர்களாக வழங்கி வந்துள்ளன. அவர்களுடைய கலைகள் தெய்வீகத்தன்மை வாய்ந்தவையாதலின் யட்சா என்னும் சொல் இசைவல்லுனருக்குரிய சிறப்பினை எடுத்துக்காட்டுவதாக அமைந்தது.

'ருக்மணி சுயம்வரம்' என்னும் கன்னட மொழிச்சுவடி ஒன்று கி.பி. 1678இல் படியெடிக்கப்பட்டதாகக் கிடைத்துள்ளது. 'கந்தருவ இசை நடையில் எழுதியிருக்கிறேன்' என்னும் தொடர் அச்சுவடியில் காணப்படுகிறது என்கிறார் சிவராம காரந்தா அவர்கள்.

பாலபாப்பாம்மா என்னும் அம்மையார் (16 நூ.ஆ) 'அக்கமாதேவி சரித்திரம் என்னும் யட்சகானம் ஒன்றினை எழுதியிருக்கிறார்கள். இவர்களே தெலுங்கில் யட்சகானம் எழுதிய முதல் ஆசிரியை ஆவார்.

பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளில் யட்சகான நூல்கள் மிகுதியாக எழுதப்பட்டன. கன்னட மொழியில் சுமார் முந்நூறுக்கும் மேற்பட்ட யட்சகான நூல்களும், தெலுங்கு மொழியில் சுமார் 500 நூல்களும் வழக்காற்றில் இருந்து வந்தன. இவற்றுள் சில வரலாற்றுக் கருப்பொருளையும், ஒருசில சமூக நடைமுறைக் கருப்பொருள்களையும் அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டவையாகும். இவை புராண, இதிகாசக் கருத்துக்களை மட்டுமே யட்சகானத்தில் உருவாக்குவது என்ற நோக்கத்திலிருந்து மாறுபட்டவையாகும். மொத்தத்தில் பதினேழு, பதினெட்டாம் நூற்றாண்டுகளை 'யட்சகானத்தின் சுவர்ணயுகம்' என்று கூறுவர்.

மிகுதியாகப் பூபதி, மோகனம் போன்ற ராகங்களில் யட்சகானப் பாடல்கள் பாடப்பட்டு வந்தன; நாதசுரங்களும் இசைக்கப்பட்டு வந்தன.

ஆனால் கி.பி. 1950க்குப் பிறகு இந்துஸ்தானி, கர்நாடக இசைகள் நுழையத் தொடங்கிவிட்டன. கிராமத்திலிருந்த பாட்டு ஆசிரியர்கள் தங்களிடம் வரும் மாணாக்கருக்கு கர்நாடக இசையில் பயிற்சியளிக்கத் தொடங்கி விட்டார்கள். யட்சகானப் பாகவதர்களும் இந்த நிலையைப் பின்பற்றத் தொடங்கினர். இந்த இரண்டு நடைகளும் இணைய யட்சகான நடையே மாறிவிட்டது.

ஆரோகண, அவரோகணம் முதலாய சுர பேதங்களாகிய கமகம் என்பது யட்சகானத்தில் தனி நடையும் தனிச் சிறப்பும் உடைய ஒன்று. பிறவாகிய இந்துஸ்தானி, கர்நாடக இசைகளுக்குரிய கமகங்களிலிருந்து வேறுபட்டது. ஆனால் பிற்காலத்தில் ஒன்றையொன்று தழுவி விட்டன. இதேபோல யட்சகானத்திற்குரிய மோகனராகம், கர்நாடக இசையில் கர்நாடிகி எனவும், இந்துஸ்தானியில் பூப் எனவும் பெயர்பெற்று ஒரு தன்மையினவாயின. இவ்வாறு தனித்தன்மையும், சிறப்பு நடையும் பெற்றிருந்த யட்சகான நடை மன்னர்கள் காலத்தில் கர்நாடக இசை வளர்ச்சி பெற்று அதற்கு முக்கியத்துவமும் கொடுக்கப்பட்ட பிறகு சிறிது சிறிதாகக் குறையலாயிற்று.

### யட்சகான நாடகம்

மக்கள் மரபு தழைக்கவும், செல்வம் கொழிக்கவும் வேண்டி இலக்குமியையும் யட்ச தேவதைகளையும் வணங்கி வந்தபோது அவர்களைப் புகழ்ந்துபாடும் பாடலாகத் தோன்றிய யட்சகானப் பாடல். கோயில்களில் நடைபெறும் காலை, மாலை பூசை காலங்களிலும், திருவிழாக் காலங்களிலும் பாடப்பட்டு வந்தது. தொடர்ந்து திருமணம் போன்ற சடங்குகளில் பாடலாகவும் நாதசுர இசையாகவும் பாடப்பட்டது.

நாளடைவில் இறைவனது கலியாண குணங்களடங்கிய பொருள்களை விளக்கிச் சொல்ல யட்சகான வடிவம் கையாளப்பட்டது. இராமாயணம், மகாபாரதம் பாகவதம் ஆகியவற்றிலிருந்து மிக உயர்ந்த கருத்துகளடங்கிய பகுதிகள் பாடற்பொருள்களாக எடுத்துக் கொள்ளப்பட்டன. இவ்வாறு உயர்ந்த செய்திகளையும் கதைகளையும் விளக்கிச் சொல்லும் யட்சகானப் பாடல்களைக் 'கதாகாலட்சேபம்' என்னும் முறையில் நடத்தினர். இதை யட்சகானப் பிரசங்கங்கள் என்றே கூறி வந்தனர்.

யட்சகானப் பாகவதர்கள் சுருதியைத் துணைக் கருவியாக வைத்துக் கொண்டு அந்தச் சுருதி பொருந்தப்பாடிக் கதையை விளக்கி வந்தனர். பெரிய கூட்டத்தில் உள்ள அனைவருக்கும் கேட்குமாறு உரத்த குரலில் பாட வேண்டிய கட்டாயம் அவர்களுக்கு ஏற்பட்டது. கிராம மக்களும் அவ்வாறு உரத்த குரலில் பாடுவதைப் பெரிதும் விரும்பி வரவேற்றனர். பாகவதர் பாடும் போது ஒருவரோ இருவரோ துணையாகப் பாடுவர். இராக ஆலாபனையில் துணைப்பாடகர் ஆலாபனை செய்யும் போது பாகவதருக்குச் சிறிது ஓய்வு கிடைப்பதாக அமையும்.

ஒரு கதையை யட்சகான நடையில் பிரசங்கம் செய்யும் போது. . . . என்னும் கதையை யட்சகான நடையில் பாடுகிறேன் என்று கூறித் தொடங்குவதே எல்லா ஆசிரியர்களும் (பாகவதர்கள்) கையாண்ட முறையாக இருந்து வந்தது. 10, 11, 12ஆம் நூற்றாண்டுகளில் கன்னடநாட்டு, வட, தென் கனரா மாவட்டக் கிராமப் பகுதிகளில் இந்தப் பிரசங்கங்கள் மிகுதியாக நிகழ்த்தப்பட்டன. புராணக்கதைகளைத் தவிர பிற பொருள்களும் இந்த நடையில் எழுதி நிகழ்த்தப்பட்டன.

பூசைக் காலத்திலும் விழாக்காலங்களிலும் கதைகளை யட்சகானப் பாடலாகப் பாடிப் பிரசங்கம் நிகழ்த்தும் போது கருத்துக்கேற்ப ஆடவும் தொடங்கினர். இந்த ஆடல் முறை வளர்ச்சியடைந்து யட்சகானப் பிரசங்கம் என்பது யட்சகான இசை நாடகம் என மாறியது.

இந்த வகை இசை நாடகங்கள் பாட்டும் நாட்டியமும் இணைந்து நடிக்கப்படுவதாக உருவாயின. அந்தப் பாட்டும் நாட்டியமும் ஒரு கதைப் பொருளை அடிப்படையாகக் கொண்டு உருவாக்கப்பட்டன. இவ்வகை இசை நாடகங்கள் வடமொழியில் சங்கீத நாடகம் எனப்பட்டன. இசை நாடகங்களுக்குச் சதிகளைச் சேர்த்து நடனமாக ஆடக்கூடிய வகையில் நடன ஆசிரியர்கள் மாற்றி அமைத்தபோது அவை 'நாட்டிய நாடகம்' என்னும் பெயர் பெற்றன. இவ்வகை நாட்டிய நாடகங்களில் இசைப்பாடல்கள் மட்டுமின்றி இடையிடையே விருத்தம், திபதை, கந்தபத்யம், அர்த்த சந்திரிகை போன்ற நடைகளும் சேர்க்கப்பட்டன.

தமிழ் நாட்டில் நடைபெறும் தெருக்கூத்து, ஆந்திர நாட்டில் நிகழும் குச்சுபுடி, வீதி நாடகம், கேரள நாட்டில் நடத்தப்பெறும் கதகளி, கடியாட்டம், ராமனாட்டம், கிருஷ்ணனாட்டம், கன்னட நாட்டில்

நடைபெறும் பயலாட்டா ஆகியவற்றைப் போன்ற ஒரு நிகழ் கலையாக உருவானது யட்சகான நாடகம். தெருக்கூத்து முதலான அனைத்து ஆட்டங்களும் பாட்டு, இசை, பழக்கம், நடத்துமுறை, நடத்துமிடம், கருத்து ஆகியவற்றால் ஒன்றுபட்டவையாகும். கதகளியில் கைச்சாடைகள் மட்டுமே இடம்பெறும். யட்சகான நாடகத்தில் வாய்ப்பேச்சும் இடம்பெறும்.

"யட்சகானம் என்பது மைசூர் முதலான கருநாடகப் பகுதிகளில் நடைபெறும் நாட்டிய நாடகம்; நாட்டுப்புற நடனவகையைச் சார்ந்தது. தமிழ், மலையாளம் ஆகியவற்றிலுள்ள உயர்ந்த நாட்டியக்கலைமரபைப் பின்பற்ற முயன்றுள்ளது" என்னும் கருத்தைத் தருகிறது கலைக்களஞ்சியம். மேலும் அது நாட்டியமாடி நடிப்பதோடு இதில் உரையாடலும் பாட்டும் உண்டு என்கிறது.

சிறந்த இலக்கியங்களை, இலக்கியக் கருத்துகளை மக்களிடையே பரப்ப யட்சகான நாடகத்தை முழுமையாகப் பயன்படுத்தியதால் கர்நாடக நாட்டில் யட்சகான நாடகம் அல்லது யட்சகான பயலாட்டா என்பது ஒரு செம்மை வாய்ந்த கலை என்று புகழ் பெற்று விளங்கியது.

யட்சகானம் நாடக நிலையை அடைந்தபிறகு புராண இதிகாசங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் நாடகக் கருத்துக்கள் பெரும்பாலும் வீரம் நிறைந்த பகுதிகளாகவே இருந்தன. போர்க்கலை சார்ந்த நாட்டியத்தை ஆடிக்காட்டுவதில் நடிகர்கள் ஈடுபாடு கொண்டனர். கிராம மக்களும் அதை விரும்பி வரவேற்றனர். போர் உணர்வுடைய பாடலடிகள் கன்னடத்தில் ரகலே மீட்டர் என்று வழங்கப்பட்டுப் பெரிதும் போற்றப்பட்டது. கதைத் தேர்வாளர்களும், எழுத்தாளர்களும் வீரம், கோபம் முதலான உணர்வுகளடங்கிய பகுதிகளையே தேர்ந்தெடுத்து நாடகங்களை உருவாக்கி வந்தனர்.

யட்சகான நாடகத்தைத் தயாரித்துப் பயிற்சியளிப்பவர் பாகவதர் என்றே அழைக்கப்படுகிறார். அவர் தலைமையில் பாடுவோரும் ஆடுவோரும் இன்சக்கருவிகளை இசைப்போரும் அடங்கிய குழு ஒன்று அமைக்கப்படும். அந்த யட்சகானக்குழுவுக்கு 'மண்டலி' என்று பெயர்.

மண்டலி எனப்படும் யட்சகானக்குழுவின் உறுப்பினர் அனைவரும் ஆடவரேயாவார். பெண் பாத்திரத்தையும் ஆடவர்களே பெண் வேடமணிந்து நடிப்பர். நடிகர்கள் ஆடம்பரமான உடைகளை அணிவர்;

பலவகை நகைகளை அணிவர்; பாத்திரங்களுக்கு ஏற்றவாறு முடி (கிரீடம்) முதலியனவும் அணிந்து நடிப்பர்.

ஆனால் ஆந்திர நாட்டில் நடனமாடும் மகளிர் யட்சர்களைப் போன்று ஆடம்பரமாக வேடமணிந்து விழாக்காலங்களில் கோயில்களிலும், சில சந்தர்ப்பங்களில் அரசவைகளிலும் பாடியாடுவார்கள்.

நாடகம், நாட்டியம், நடிகர், என்பன பற்றிய செய்திகளைப் பற்றித் தெலுங்கில் எழுதிய மகாபாரதத்தில் நன்னய்யா அவர்கள் (கி.பி.11. நூ.ஆ) குறிப்பிடுகிறார்கள். அவர் எழுதிய ‘கருடாசல யட்சகானம்’ என்பதே முதல் யட்சகான நாடக நூலாகும் என்பர்.

இசைப்பாடல், பிறசெய்யுள் வகைகள், உரைநடை ஆகியவை அடங்கிய நடையிலேயே யட்சகான நாடகங்கள் இயற்றப்பட வேண்டும் என்று ‘சித்திரகவி பெத்தண்ணா’ என்னும் அறிஞர் (கி.பி.16. நூ.ஆ.) இலக்கணம் வகுத்தார்.

சௌபரி என்னும் யோகி ஒருவரின் விருப்பத்தை விளக்கிக்கூறும் கதையாக ‘சௌபரி சரிதை் என்னும் யட்சகான நாடகம் ஒன்று தெலுங்கில் எழுதப்பட்ட்து. அது சௌபரியின் விருப்பமாகிய மக்கட்சந்ததி வளர வேண்டும்; செல்வம் செழிக்க வேண்டும் என்னும் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டது; ‘சௌபரிசரித ஜக்குல கதா’ என்னும் பெயரிலேயே எழுதப்பட்டது. இந்நூல் விசயநகர மன்னர், சாளுவ நரசிம்மய்யா அவர்கள் காலத்தில் (கி.பி.1485-1491) பொல்லுகண்ட சன்ன சௌரி (ரங்கண்ணா) என்பவரால் இயற்றப்பட்டது.

கிருஷ்ண தேவராயர் காலத்தவராகிய ‘கந்து கூரி ருத்திரகவி’ என்பவரால் கி.பி.1570இல் சுக்கிரீவ விஜய யட்சகானம் என்னும் நூல் எழுதப்பட்டது. விப்ர நாராயண சரித்திரம் என்பது அக்காலத்திய யட்சகான நூலாகும்.

ராமபத்ராம்பா என்பவர் எழுதிய ‘ரகுநாதாப்யுதய் என்னும் யட்சகானம் (கி.பி.1625இல் எழுதப்பட்டது) தஞ்சையை ஆண்டு வந்தவரும், சிறந்த பாடற்கலைஞருமாகிய மன்னர் ரகுநாத நாயகரின் வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டது.

**யட்சகான நாடக இலக்கணம்** யட்சகான நாடகம் இரவு முழுமையும் நடைபெறுவதால் ஏறத்தாழ நானூறு முதல் ஐநூறு பாடல்கள் வரை பலவகையான இசையில் பாடி ஆகவேண்டிய கட்டாயம் ஏற்படுகின்றது. அப்பாட்டுகளை வேகமாக, உரக்க, உச்ச ஸ்தாயியில் பாட வேண்டும். ஏனெனில் நாடகம் காணும் மக்கள் அமர்ந்துள்ள மிகப் பரந்த பகுதிகளுக்கு நன்றாகக் கேட்க வேண்டும்.

யட்சகான நாடகங்களில் நாட்டியம் சிறப்பிடம் பெறுகிறது. நாட்டிய அடைவுக்கு ஏற்ப தாளம் முக்கியத்துவம் பெறுகிறது. இந்த அடிப்படையில் பாகவதரின் பாட்டு, நாட்டிய அடைவு, தாளஒலி, தப்பட்டை ஒலி, ஆகியவை இணைந்து வரவேண்டும். பாட்டுநடைகளுக்கு ஏற்ப தாளம் முதலியன மாற்றப்படும். இந்த வேறுபாட்டால் நாடகத்தில் இனிமை தோன்றுகிறது.

பாடலில் தொடக்கப் பகுதியாகிய பல்லவியில் பாட்டின் அமைப்பும் தன்மையும் வெளிப்படும் பல்லவியை அடுத்து சுமார் பத்து பாடல்கள் வரை இடம்பெறலாம். நீண்டு அமையின் வெறுப்பு ஏற்பட்டுவிடும்.

ஒவ்வொரு நாடகத்திலும் முதல்பாடல் சவுராஷ்டிர இராகத்தில் அமைய வேண்டும். உணர்ச்சிகளுக்கு ஏற்ற இராகங்களை அமைத்தல் வேண்டும். அவை மாறினால் இராகத்திற்கேற்பத் தாளமும் மாறுபட்டு உணர்ச்சி கெடுவதற்கு வாய்ப்பு ஏற்படும். வீரம், சோகம், மகிழ்ச்சி, கோபம் முதலான கருத்துகளை அழுத்தமாகப் பின்பற்றுவதால் நடிகர்களின் சொந்த உணர்ச்சிகளுக்கு இடம் ஏற்படுவதில்லை. பாட்டின் ஒவ்வொரு வார்த்தையும் தெளிவுபெற அமைதல் வேண்டும். மக்களுக்கு எளிமையாகப் புரிதல் வேண்டும். அந்த வார்த்தைகள் தெளிவாகக் கேட்கும் அளவிற்குச் சதங்கை முதலான இசைக்கருவிகளில் ஒலியைக் குறைத்து இசைக்க வேண்டும்.

பாடல்கள் மிகுதியாக அமைவதால் மக்கள் தம்மை மறந்து கேட்கும் நிலை உருவாகும்.

பாகவதர்கள் மட்டும் நாட்டியத்திலும் இராக தாளங்களிலும் பயிற்சி பெற்றிருத்தல் போதாது. நாடகத்தை இயற்றும் ஆசிரியர்களும் இவற்றில் முழுமையான புலமை பெற்றிருத்தல் வேண்டும் என்பன போன்றவை யட்சகான நாடகத்திற்குரிய சிறப்பு இலக்கணங்களாகும்.

ஆனால் இன்றைய யட்சகான நாடகங்களில் முதற்பாடலை மோகன இராகத்தில் பாடிவிடுகின்றனர். மற்றப் பாடல்களும் பழைய முறை தகுதியான, உணர்ச்சிக்கு ஏற்ற இராகத்தில் அமைக்கப்படுவதில்லை. அவ்வாறு அமைத்து இசைப்போரும் அருகி வருகின்றனர். பாட்டின் வார்த்தைகளை உடைத்துப் பாடிவிடுகின்றனர். அதனால் இசைத்தன்மையும் பாட்டின் கருத்தும் மாறுபட்டு விடுகின்றன.

பெரும்பாலும் பாட்டுகள் வெளிப்படுவதில்லை; அவற்றின் கருத்தும் சரியாகப் புரிவதில்லை. காரணம் சதங்கை ஒலியும் பிற இசைக்கருவிகளின் சத்தமுமே மிகுதியாக அமைந்து விடுகின்றன. நடிகர்களுக்கு நல்ல குரல் அமைப்பு இருந்தாலும் நடனத்திற்கும், தாளம் முதலிய இசைக்கருவிகளுக்கும் முதலிடம் அளித்து நாடகத்தின் கருப்பொருளைப் புறக்கணித்து விடுகிறார்கள். சொந்த உணர்ச்சிகளுக்கு மிகுதியாக இடம் கொடுத்து விடுவதால், நாடகத்தில் அமையும் வீரம், சோகம் முதலான உணர்ச்சிகள் சிறப்பாக வெளிப்படுவதில்லை. வார்த்தைகளில் தெளிவு வேண்டும். பொருள்புலப்பாடு வேண்டும் என்பனவற்றையும் ஆடுவோர் புறக்கணித்து விடுகிறார்கள்.

இன்றைய யட்சகான நாடகங்களில் உரைநடை மிகுதியாக அமைவதால் தம்மை மறந்து கேட்கும் நிலையிலும் நிறைவு காண முடியவில்லை.

மத்தளம் (மிருதங்கம்), தட்டு (தப்பட்டை) போன்ற கருவிகளைச் சண்டைக் காட்சியில் மிகுதியாகப் பயன்படுத்துவர். மகிழ்ச்சிக் காட்சியில் சண்டே எனப்படும் டிரம்மைப் பயன்படுத்துவர். இக்கருவிகள் உரத்த சத்தத்தை உண்டாக்கத் துணைபுரிந்தன. இவற்றுள் தப்பட்டை ஒலி அடைவுகளுக்கு ஒத்து வருவது மிகவும் சிறப்பாக அமையும். வேகத்திற்கும் ரிதத்திற்கும் ஏற்றதாகவும் அமையும். முகவீணையும், சகனாய் எனப்படும் ஷெனாய் என்னும் கருவியும் இனிமையை உண்டாக்குவனவாக இசைக்கப்படும்.

இவையனைத்துக் கருவிகளும் மகிழ்ச்சி முதலான கருத்துக்களைக் கெடுக்கின்றன; வீர உணர்ச்சிக்கு மட்டுமே பெரிதும் துணைபுரிகின்றன; மிகுதியான சத்தத்தை உண்டாக்கிப் பாட்டின் தெளிவைக் கெடுக்கின்றன. எனவும், வயலின் என்னும் கருவிதான் இனிய, குறைந்த ஒலியை

உண்டாக்கிப் பாட்டின் கருத்தைத் தெளிவாகக் கேட்கத் துணைபுரியும் எனவும் இக்கால யட்சகான பாகவதர்கள் கருதுகிறார்கள்.

இசை நுணக்கத்தை அறியாத நாட்டுப்புற மக்கள் உரத்துப்பாடும் நடிகர்களின் நடிப்புக்கும், பாட்டுக்கும் கைதட்டி ஆரவாரம் செய்கிறார்கள். உண்மையான, நுணுக்கமான இசைப்பயிற்சி அவர்களிடையே ஏற்படுவதில்லை. பாகவதர்களும் ரசிப்போருக்கு ஏற்ப இசையின் நுணுக்கங்களைப் பொருட்படுத்தாமல் விட்டுவிடுகிறார்கள்.

யட்சகானம், யட்சகான நாடகம் ஆகியவை மிகப்பழமை வாய்ந்தவை என்றாலும் இன்று வழக்கு இழந்து வருகிறது. உணர்ச்சி மிக்க பாட்டுகளுக்காகவும் நாடக நடைக்காகவும் அன்றைய நாடகம் என்ற முறையில் இப்பொழுதும் ஆங்காங்கு நடைபெற்று வருவது குறிப்பிடத்தக்கது. பெரும்பாலும் நாட்டுப்புற மக்கள் விரும்பிக் காண்பதில் ஆர்வம் உடையவர்களாக இருந்து வருகிறார்கள். பாகவதர்களாகிய சூத்திரதாரர்கள் (நாடகம் இயக்குவோர்) இராகத்திற்கு முக்கியத்துவம் தருவதில் நம்பிக்கை இழந்து வருகிறார்கள். இராகங்களின் நுட்பமான வேறுபாடுகளைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

யட்சகான நாடகத்திற்குச் சுமார் 150 இசைகள் உண்டு என்பதைப் பட்டியலிட்டுக் காட்டுகிறார்கள் சிவராம காரந்தா அவர்கள். ஆனால் இன்றைய பாகவதர்கள் இருபது இராகங்களை மட்டுமே நடைமுறையில் கையாண்டு வருகிறார்கள். இராகம், தாளம் ஆகியவற்றிற்குரிய பழமைச் சிறப்பு மறைந்து வருகிறதெனலாம். தாளத்தை மட்டுமே நினைவில் கொண்டுள்ளனர். நாடகத்தின் அடைவுகளுக்கு இன்றியமையாதது தாளம் ஆதலின் அதை மட்டுமே கையாண்டு வருகின்றனர்.

யட்சகான இசை என்பது மாறி இன்று முழுமையாக நாடகம் என்ற நிலையைப் பெற்று விட்டதால், நாடகக் கருத்துகளுக்கு ஏற்ற பாடல்களை மட்டும் உருவாக்கிக் கொள்ளுகிறார்கள். சிறப்பாக மகிழ்ச்சி, கோபம், பயம், வெறுப்பு, சிரிப்பு, வீரம், போன்ற உணர்ச்சிகளுக்கு ஏற்ற பாடல்களை உருவாக்கிக் கொள்ளுகிறார்கள். இத்தகு பாடல்களாலும் அவற்றிற்கேற்ற நடிப்புகளாலுமே இன்றைய யட்சகான நாடகங்கள் முழுமை பெறுகின்றன; நிறைவையும் தருகின்றன.

இக்கால யட்சகான நாடக ஆசிரியர்கள் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடுபவர்கள் போல கதை மாந்தர்களின் உணர்ச்சிகளை எளிமையாக எடுத்துக்காட்டி விடுகிறார்கள். இராகத்தில் ஆழ்ந்த கவனம் செலுத்துவது இல்லை என்றாலும் கருத்து நிறைந்த பாடல்களால் கதையை அழகாக விளக்கி விடுகிறார்கள். இது நாட்டுப்புற மக்களை மிகவும் திருப்தியடையச் செய்து விடுகிறது. நாடகத்திற்கு ஏற்ப இசைகளை அமைத்தல் வேண்டும் என்னும் முன்னோர் இலக்கணம் இன்றைய நாடகங்களில் முழுமையாக அமைவதில்லை.

## தமிழில் யட்சகானம்

### தமிழில் நாடகம்

தொல்காப்பியம் தொடங்கி இலக்கியங்கள் பலவற்றிலும் நாடகம், நாட்டியம், கூத்து போன்றவற்றின் நடைமுறைகள் தமிழில் இருந்ததாக அறிய முடிகிறது. அவை அகக்கூத்து, புறக்கூத்து என்ற பாகுபாட்டில் சாந்திக்கூத்து, வினோதக்கூத்து என ஆடிய நிலைகள் அனைத்தும் தெளிவாகக் கிடைக்கின்றன.

அடுத்த நிலையில் நாடகக்கலை சிறப்புற்று இருந்ததோடு கலைக்குரிய முறையான இலக்கணங்களும் தமிழில் இடம்பெற்றிருந்தன. நாடகக் கருவும் கட்டுக்கோப்பும் சாதிகளும் தலைமகன் முதலான நாடக உறுப்பினர்களும் என்ற நிலையில் பலவகை இலக்கணங்கள் வரையறுக்கப்பட்டன. அவற்றுள்,

**1. கரு** 1. தெரிந்தது 2. கற்பனையானது 3. இரண்டும் கலந்தது எனக் கருப்பொருள் மூன்று பெரும் பிரிவுகளாகக் கொள்ளப்படும்.

அக்கருப்பொருள் 1. தலைக்கதை 2. இணைக்கதை என்ற இரண்டு அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படும்.

**2. கட்டுக்கோப்பு** 1. காலடி - அடைவு (பீசம்) 2. பின்னிடுதல் (பிந்து) 3.இணையா இணைக்கை (பதாகம்) 4. அடித்தல் (பிரகரி) 5.செய்கை (காரியம்) என்னும் ஐந்து கூறுகளில் நாடகக் (நாட்டிய) கட்டுக்கோப்பு அமையும்.

**3. நாடக நிலை** 1.தொடக்கம் 2.முயற்சி 3. நம்பிக்கை 4.தடைநீக்கம் 5. பலன்துய்த்தல் என்ற ஐந்து நிலைகளில் நாடகக் கூறுகள் அமையும்.

**4. தலைமகன்** 1.உயர்ந்த குணமும் உறுதியும் உடையவன் (தீரோதத்தன்) 2.உறுதியும் ஆவலும் உடையவன் (தீரஉதாத்தன்) 3. உற்சாகமும் நகைச் சுவையும் உடையவன் (தீரலலிதன்) 4.இரக்கமும் நற்குணமும் பெற்றவன் (தீரசாந்தன்) என்னும் நான்கு வகைச் சிறப்புக் குணங்களை உடையவன் நாடகத் தலைமகன்.

**5. தலைவி** 1. பேதை 2. மங்கை 3. மடந்தை என மூன்று வகைப் பருவத்தினளாகத் தலைமகள் காட்டப்படுவாள்.

மேலும் முகம், பிரதிமுகம், கருப்பம், விமரிசகம், கிர்வாகம் என்ற ஐந்து அங்கங்களில் அறுபத்து நான்கு சிறு பிரிவுகள் பேசப்படும் இவையனைத்தும் தமிழில் நாடகக் கலைக்குரிய உயர்ந்த இலக்கணங்களாகக் கொள்ளப்பட்டவையாகும். நடைமுறையிலும் இவ்விலக்கணங்கள் கையாளப்பட்டு வந்தன.

சேர மன்னாகிய செங்குட்டுவன் தேவி இளங்கோவேண்மாளுடன் மலைவளம் காணச் சென்று பேரியாற்றுக் கரையில் தங்கியிருந்த பொழுது குறவர்கள் குரவை ஆடியும், கொடிச்சியர் வேலன் பாணி முதலான பாடலைப் பாடியும் மலைபடு பொருள்களைச் சுமந்து வந்து மன்னனைக் காணுகிறார்கள். கண்ட அவர்கள் மதுரையை எரித்து வந்த கண்ணகியைக் கண்டதையும் கணவனொடு அவள் விண்ணுலகு அடைந்ததையும் எடுத்துக் கூறுகிறார்கள். கண்ணகியைத் தங்கள் குல தெய்வமாக ஏற்றுக் கொண்ட அவர்கள் தெய்வம் பரவும் நோக்கொடு குரவை ஆடித்துதிக்கிறார்கள். இது குரவைக் கூத்து நிகழ்த்தப் பெற்ற செய்தியை எடுத்துக் காட்டுவதாகும். இந்தக் குரவை முதலான தெருக்கூத்து கதை தழுவிய நாடக வகைகள் ஆகியவை மிகச் சிறப்பாகத் தமிழில் நிகழ்த்தப்பட்டன.

கன்னடத்திலும், தெலுங்கிலும் உள்ள நிகழ்கலையாகிய யட்சகானத்தைப் போன்றது தமிழில் உள்ள தெருக்கூத்து என்னும் நாடகவகையாகும். ஆனால் சிறுத்தொண்டர் யட்சகானம், வல்லாளராசன் யட்சகானம் என்பன போல சிறுத்தொண்டன் தெருக்கூத்து, வல்லாளராசன் தெருக்கூத்து என்ற அமைப்பில் ஈற்றில் தெருக்கூத்து என்ற சொல்லோடு தமிழ் நாடகங்கள் பெயர் பெறுவதில்லை.மாறாகக்கீர்த்தனை,

சரித்திரம், நாடகம், மாலையீடு, வாசகப்பா, விலாசம் என்னும் பெயர்களைப் பொருளுக்கு ஏற்ப ஈற்றில் பெற்று அமைவதே தமிழ் நாடகப்பெயர்களின் அமைப்பாகிறது. மேலும் கலியாணம், சம்மாரம், தபசு, தூது, போன்ற பெயர்களும் நாடகத்தின் பொருளுக்கு ஏற்ப ஈற்றில் அமைகின்றன. இவ்வாறு நாடகம் பண்பட்ட நிலையில் நிகழ் கலையாகவும், நாட்டுப்புறக் கலையாகவும், செம்மை பெற்ற கலையாகவும் நடைபெற்று வந்துள்ளன. இக்காலத்தே தமிழில் யட்சகான நாடகக் கலையும் வந்து கலந்துள்ளன.

**தமிழில் யட்சகானம்**

"ஆட்டங்கள் முதலில் தோன்றியவை; அதன் பின் ஆட்டத்திற்கேற்ற பாட்டுப் பாடினர் . . . . . ஆட்டத்தைக் கதைப்பாட்டோடு இணைத்துப் பாடினர். பாட்டை ஆட்டத்தை இணைக்கும் கானமாக்கினர்; அப்போது அது நாட்டியத்தை இயக்கும் கானமாகிறது. தெருக்கூத்து ஒரு நாட்டிய நாடகமாகும். ஆகவே தெருக்கூத்தை இயக்கும் தெருக்கூத்து இயக்க கானமாகிறது. கூத்தும் கானமும் இணைந்தது தெருக்கூத்து இயக்ககானம்.

இந்தத் தெருக்கூத்து இயக்க கானம் தான் வேற்றுமொழித் தொடர்பால் - கன்னடம், தெலுங்கு மொழித்தொடர்பால் யட்ட கானமாகியிருக்கிறது. தமிழிலிருந்து எடுத்தாளும்போது மொழி புரியாததால் யட்சகானமாக்கி விட்டனர். நாட்டுப்புற வழக்கு மக்கள் வழக்கு கால மாறுபாட்டால் - இடமாறுபாட்டால் இக்கோலமாகியிருக்கிறது. இயக்ககானம் யக்ககானமாகி பின் உருமாற்றம் பெற்றிருக்கிறது."[1]

" . . . . . . . . இயக்ககானம் யட்சகானம் என்று திரிந்து வழங்கி வருகிறது என்பது தெரிகிறது. தென்னிந்தியக் கூத்துக் கலைகளின் மரபிற்கு யட்டகானம் என்பது பொதுப்பெயர் என்று தெரிகிறது. இத்திராவிட மரபே வட்டார வழக்கிற்கேற்ப யட்சகானத் தெருக்கூத்து என்றும், யட்டகான பயலாட்டம் என்றும், யட்சகான வீதி நாடகம் என்றும் வழங்கி வந்திருக்கிறது என்பதும் தெளிவாகிறது.[2]

பலவகைப் பிழைகளோடு கூடிய இந்தத் தொடர்கள், தெருக்கூத்து

1. தமிழகக் கலைச் செல்வங்கள் ப303
2. கூ நூல் ப318



தெருக்கூத்து



தமிழ் யட்சகானம்

இயக்க கானம் என்னும் தமிழ்த் தொடரே யட்சகானமாகியிருக்கிறது என்று கூறுகின்றது. 'இயக்ககானம்' என்பது ஒரு அர்த்தநாரி வடிவமுடையது. தனித்தமிழ்த் தொடர் அன்று. தெருக்கூத்து யட்சகானம் என்னும் வழக்காறு இருந்ததாக, இருப்பதாக எடுத்துக்காட்டவும் முடியாது. வட்டார வழக்கிற்கேற்ப யட்சகானத் தெருக்கூத்து, என்று வழங்கி வந்திருக்கிறது என்பதற்கும் சான்று இல்லை. தெருக்கூத்து இயக்ககானம் தெருக்கூத்து யட்சகானமாயிற்று என்று கூறி யட்சகானத் தெருக்கூத்து என்று வழங்கி வந்திருக்கிறது என்று சுட்டுவதும் முரண்பட அமைகிறது.

வட்டார வழக்கு என்பதே ஒரு மொழிக்குள் வழங்கும் வேறுபட்ட தொடர்களைச் சுட்டுவதாகும். வெவ்வேறு மொழிகளினிடையே வட்டார வழக்கு என்பதற்கு இடமில்லை. மொழி புரியாததால் யட்சகானமாக்கிவிட்டனர் என்பதும் பொருந்துவதாகத் தெரியவில்லை.

வெற்றிநகர் என்னும் பொருளில் விஜயநகரத்தை உருவாக்கித் தங்கள் தலைநகராகக் கொண்டு கி.பி.1336 முதல் அரசாண்டவர்கள் ஹரிகரரும் புக்கரும் ஆவர். இவர்கள் சங்கம வமிசத்தைச் சார்ந்தவர்கள். இவர்கள் காலம் முதலே விஜயநகர அரசு தமிழ்நாடு உட்பட விரிவடைந்து வந்தது. சங்கம வமிசத்தினரை அடுத்து வந்த சாளுவ நரசிம்மர், துளுவ பரம்பரை கிருஷ்ண தேவராயர், மராட்டியப் படைத்தலைவன் ஏகோஜி (கி.பி.1676) போன்றோர் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு அரசாண்டு வந்தனர். இவர் காலத்தில் தஞ்சைப் பகுதியிலும் கன்னடநாடு, ஆந்திரநாடு ஆகியவற்றை அடுத்துள்ள தமிழ் மாவட்டங்களிலுமே சிறிது சிறிதாக கன்னட, தெலுங்கு ஆகிய மொழிகளின் நாட்டுப்புறக் கலைத் தாக்கம் ஏற்படத் தொடங்கியது.

கன்னடம், தெலுங்கு யட்சகான நாடகங்கள் ஆங்காங்கே நடைபெறத் தொடங்கின. நாளடைவில் நாடகப் பாடல்களிலும், உரைநடைகளிலும், பேச்சு மொழியிலும் பல தமிழ்ச் சொற்கள் கலக்கப்பட்டன. அதனால் தெலுங்கு, கன்னட நாடகப் பொருட்கள் தமிழ் மக்களுக்கு நன்றாக விளங்கின.

இரகுநாத நாயக்கர் தஞ்சை மன்னராக இருந்தபோது (கி.பி.1600-1634) இராமபத்திராம்பா என்பவரால் 'இரகுநாதாப்யுதயா' என்னும் வரலாற்றுப் பிரசங்கம் எழுதப்பட்டது. அதை அரண்மனைப் பாடகி

ஒருவர் இராவண அஸ்தா என்னும் வீணையை மீட்டிக் கொண்டு திபதை நடையில் பாடிக்காட்டுவார். கவியரசரும் இசைக் கலைஞரும் நாடக ஆசிரியருமான இரகுநாத நாயக்கர் அப்பாட்டைக் கேட்டு ஆனந்தம் அடைவார்.

தியாகராச சுவாமிகளின் நௌகசரித்திரம், பிரகலாத பக்த விஜயம் ஆகிய யட்சகான நாடகங்கள் தமிழ் நாட்டில் நடத்தப் பட்டுள்ளன. ஹொய்சள மன்னரான வல்லாளராசன் வரலாறு யட்சகானமாகத் தமிழ்நாட்டில் வட மாவட்டங்களில் நடத்தப்பட்டது. அதன் பயனாய்த் தமிழில் வல்லாளராசன் யட்சகானம் என்னும் நாடகம் உருவாகியிருக்கிறது. வீரசைவத்தைத் தழுவிய சிறுத்தொண்ட நாயனார் வரலாறு பற்றியும் யட்சகான நாடகம் அக்காலத்தில் உருவாகி இருக்கிறது.

தெலுங்கு, கன்னட யட்சகான நாடகங்கள் தமிழ்நாட்டில் பரவிய நிலையில் அந்நாடகப் பாடல்களில் தமிழ்வரிகள் பல இடம்பெற்று நாளடைவில் முழு நாடகங்களே தமிழில் உருவாகியிருக்கின்றன. அவற்றுள் சுவடி வடிவில் ஆறு நாடகங்கள் கிடைத்துள்ளன.

1. சாரங்கதாரன் யட்சகானம்

2. சிறுத்தொண்டர் யட்சகானம்

3. தேரூர்ந்த சோழர் யட்சகானம்

4. நரசிங்க விஜய யட்சகானம்

5. நீலி யட்சகானம்

6. வல்லாளராசன் யட்சகானம் - என்னும் இந்த ஆறு நாடகங்களும் சுவடி வடிவில் சென்னை, அரசினர் சுவடி நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வருகின்றன.

அவற்றுள் ஒன்றே இந்தப் பதிப்பிற்குரிய நீலியட்சகானம்.

"மாபால மன்னர்க்கு உறவுசொலி
நீலிபழி தான்தொலைத்த வகை சொல்லுவன்" (3)

"நீலிகதை யட்சகான வியலாய்
நினைத்துச் சொல..." (4)

"பழையனூர் நீலிகதை மொழியவே" (6)

நுதலிப்புகுதல் என்னும் உத்தியைக் கையாண்டுள்ள இவ்வடிகள், பழையனூர் நீலி பழிவாங்கிய கதையை யட்சகான நடையில் கூறுவதாகப் புலப்படுத்துகின்றன. ஆனால் தெருக்கூத்து, வீதிநாடகம் போன்ற அமைப்பில் நாடகமாக அமையவில்லை. மாறாக,

"சீதனம் பலபணியும் தந்துதன்
சிறுமிதனை மணம் செய்து கொடுத்தான்" (38)

"வேளனைய சுதன்காஞ்சி வீதிவலம் வந்தான் (39)

செப்பின மொழியெலாம் தரிசனன் கேட்டு...
எல்லவரும் இன்பம் எய்தினர் தாமே" (40)

என்பன போன்று நாடக மாந்தரைத் தவிர்த்த மூன்றாமவர் கதையை எடுத்துச் சொல்லும் முறையிலேயே நூல் முழுமையும் அமைகிறது. எனவே இந்நூல் இராகம், தாளம், பாட்டுநடை ஆகியவற்றால் யட்சகான நடையைத் தழுவிய ஒரு இசை நாடகம் அல்லது வில்லுப்பாட்டு என்ற தன்மையைப் பெறுகிறது எனலாம்.

யட்சகான நடையில் ஏழுவகைத் தாளங்கள் இடம்பெறும் என்பர். அவை: அடதாளம், ஏகதாளம், சம்பை, திரிபுடை, துருவம், மத்தியம், ரூபகம் என்பனவாகும். ஆனால் இந்த நூல் முழுமையும் அடதாளம், ஏகதாளம், சம்பை, திரிபுடை என்னும் நான்கு வகைத் தாளங்களே இடம் பெறுகின்றன. அவைமுறையே,

1. **அடதாளம் - 14 மாத்திரைகளையுடையது.**

1,4,6,8,9,11,13 ஆகிய மாத்திரைகளில் தாளத்தட்டும், பிற மாத்திரைகளில் வெற்று எண்ணிக்கையும் உடையது.
அதாவது மாத்திரை: 1,2,3,4,5,6,7,8,9,10,11,12,13,14.

அடி (தட்டு) : 1 - - 4 - 6 - 8, 9 - 11 - 13 -

ஒரு தட்டு - 2 எண்ணிக்கை; ஒரு தட்டு - ஒரு எண்ணிக்கை; ஒரு தட்டு - ஒரு எண்ணிக்கை; 2 தட்டுகள் - ஒரு எண்ணிக்கை; ஒரு தட்டு - ஒரு எண்ணிக்கை; ஒரு தட்டு - ஒரு எண்ணிக்கை என அமைவது. இதேபோல,

2. ஏகதாளம் - 4 மாத்திரைகளையுடையது. முதல் மாத்திரை மட்டும் தட்டுதலும் பிற மூன்று மாத்திரைகளும் எண்ணுதலும் உடையது.

3. சம்பை - 5 மாத்திரைகளையுடையது. 1,3,4, ஆம் மாத்திரைகளில் தட்டுதலும் 2,5 ஆம் மாத்திரைகளில் எண்ணுதலும் உடையது.

4. திரிபுடை - 7 மாத்திரைகளையுடையது. 1,4,6 ஆம் மாத்திரைகளில் தட்டுதலும், 2,3,5,7 ஆம் மாத்திரைகளில் எண்ணுதலும் உடையது. பிறதாளங்கள் நூலுள் இடம் பெறவில்லை.

**கருப்பொருள் சுருக்கம்**

காஞ்சியைச் சேர்ந்த ஞானாபதியின் மகன் புவனபதி; திருமணமானவன். நண்பருடன் காசிக்குச் சென்று திரும்பும்போது அவிநாசியில் தங்குகிறான். அவிநாசியில் வாழ்ந்துவந்த மெய்க்கியானி என்பவர் புவனபதியின் ஒழுக்கத்தைக் கண்டு தம் மகள் நவக்கியானியைத் திருமணம் செய்து வைக்கிறார். சிலநாள் கழித்து காஞ்சிக்குப் புறப்படுகிறான் புவனபதி. மாமனார் தம்மகன் சிவக்கியானி\யை வழித்துணையாக அனுப்பிவைக்கிறார். மூவருமாகத் திருவாலங்காட்டை அடைகிறார்கள். காஞ்சியில் உள்ள முதல் மனைவியின் னினைவுவருகிறது புவனபதிக்கு. சிவக்கியானி தங்களுடன் இல்லாத நேரத்தில் நவக்கியானியைக் கொன்று அவள் கருவிலிருந்த ஆண் குழந்தையை எடுத்து ஒரு கள்ளிச் செடியின் மீது வீசிவிட்டுக் காஞ்சியை நோக்கி நடக்கத்

தொடங்குகிறான். சிறிது நேரத்தில் வந்த சிவக்கியானி தன் தங்கையின் நிலையைக் கண்டு தன் உயிரை மாய்த்துக் கொள்ளுகிறான். குடும்பத்தை அடைந்த புவனபதி சிலகாலம் வாழ்ந்து மறைகிறான். சிவக்கியானியும் நவக்கியானியும் திருவாலங்காடு காட்டில் பேய்களாய் அலைந்து வருகிறார்கள்.

திருவாலங்காட்டில் மக்கள் தலைவனாக வாழ்ந்துவந்த புரிசைக்கிழான் பிள்ளைப்பேறு இல்லாதவனாக வருந்தி இறைவனை வேண்டிவந்தான். பேய்களாய்த் திரிந்துவந்த அண்ணன் தங்கைகளைப் புரிடைக்கிழானின் மக்களாகப் பிறக்கச் செய்கிறான் இறைவன். இரட்டைக் குழந்தைகளாய்ப் பிறந்த பிசாசுகள் நள்ளிரவில் பிசாசு வடிவாகிச் சுடலையில் வேகும் பிணங்களையும், ஊரில் ஆட்டுமந்தைகளில் இருந்த ஆடுகளையும் தின்று பழையபடி வந்து தொட்டிலில் படுத்துக் கொள்ளுவார்கள்.

ஆடுகளை இழந்தவர்கள், புரிசைக்கிழானிடம் முறையிடுகிறார்கள். உண்மையைச் சோதித்தறிந்த புரிசைக்கிழான் மனம் நொந்து இறைவன் ஆலயத்திலேயே குழந்தைகளைக் கொண்டுபோய் விட்டு விடுகிறான்.

இருவரும் சுய வடிவத்தோடு நீலன், நீலி என்ற பெயரோடு காட்டில் திரிந்து வருகிறார்கள். நீலன் ஆண் பேய்களின் தலைவனாகத் திருவாலங்காட்டில் தங்குகிறான். நீலி பெண் பேய்களின் தலைவியாகத் திருச்செங்காடு அடைகிறாள்.

நீலன் தங்கியிருந்த வேப்ப மரத்தைக் கோயில் கொடிக்கம்பத்துக்காகப் பழையனூரார் வெட்டி விடுகிறார்கள். செய்தியறிந்த நீலன் பழையனூர் மக்களைப் பழிவாங்க வேண்டுமென்று எண்ணுகிறான். எதிரில் வந்த கோயில் அர்ச்சகராகிய ஓர் அந்தணரை அடித்துத் துன்புறுத்துகிறான். அந்த அந்தணர் இறைவனிடம் முறையிட இறைவன் குண்டோதரனை அனுப்பி நீலனைக் கொல்லச் செய்கிறான்.

அண்ணன் இறந்த செய்தி யறிந்த நீலி பழையனூர் மக்களைப் பழிவாங்கச் சபதம் எடுத்துத் திருவாலங்காட்டில் திரிந்து வருகிறாள்.

மனைவியையும் குழந்தையையும் கொன்ற புவனபதியானவன் மறுபிறவியில் காஞ்சிபுரத்தைச் சேர்ந்த நாகந்தைக்குக் குழந்தையாகப் பிறக்கிறான். அவனுக்குத் தரிசனன் என்று பெயர் சூட்டுகிறார்கள். ஒரு

பெண்ணைக் கொன்ற தோஷம் இருக்கிறது என்றறிந்த சோதிடர்கள் அக்கினி வளர்த்துப் பரிகாரம் செய்யும் போது அத்தீயில் தோன்றிய ஒரு வாளைப் பாதுகாப்புக்காகக் கொடுத்து வைக்கிறார்கள். அதே சமயம் வடதிசை நோக்கியும், பழையனூர்ப் பக்கமும் செல்லக்கூடாது என்றும் கூறி வைக்கிறார்கள்.

தரிசனன் வளர்ந்து திருமணமாகி ஒரு குழந்தைக்குத் தந்தையும் ஆகிறான். வாளைக் கைவிடக் கூடது; வடதிசை செல்லக் கூடாது என்ற கட்டளையையும், பல அறிவுரைகளையும் கூறி நாகந்தை காலமாகிறார்.

தந்தை இறந்த பிறகு தாய், மனைவி, உறவினர் ஆகியோர் பேச்சைக் கேட்காமல் வியாபார நோக்கில் பழையனூரை நோக்கிச் செல்கிறான் தரிசனன்.

பழிவாங்கக் காத்துக் கொண்டிருந்த நீலி தரிசனனைப் பின்தொடர்ந்து சென்று பழையனூர் மக்கள் முன்னிலையில் தரிசனனின் மனைவி போல நடித்து அவர்களை நம்பச் செய்கிறாள். அவள் பிசாசு என்று கூறி மறுத்த தரிசனனுக்கு உயிர் போனால் தங்கள் எழுபது பேர் உயிரையும் தருவதாக உறுதி கூறினர் ஊரார். இரவில் கோயிலில் தங்கியிருந்த போது முற்பிறவியில் புவனபதியாக வாழ்ந்த நவக்கியானியாகிய என்னைக் கொன்றவனே நீ என்பதாக முற்பிறவியை எடுத்துக் கூறி நீலி அவனைக் கொன்று விடுகிறாள். உண்மையறிந்த ஊரார் எழுபதின்மரும் வருந்தி உயிர் விடுகிறார்கள்.

**கரிராசன் கதை (கருப்பு வீரன்)**

"தாராபுரத்து மன்னன் மாரபூபதியின் மகன் கரிராசன். வல்லாளராசனுடைய மகளைத் திருமணம் செய்வதாக நிச்சயிக்கப்பட்டு, திருமணத்துக்காகச் செல்லும்பொழுது, தொண்டனூர் அரசி இராட்சசி என்பவளின் மகள் தாமரைக் கண்ணியைக் காதலித்து மணம் செய்து கொள்கின்றான். கரிராசன் தன் மகளை மணந்து கொண்டதை விரும்பாத இராட்சசி அவனைக் கொல்லப் பல சூழ்ச்சிகளை மேற்கொள்ளுகிறாள். 'மல்லிகையூர்' என்னுமிடத்தில் கரிராசனைத் தடுத்து நிறுத்தி, ஊரார்முன் முறையிடுகிறாள். அவள் வார்த்தையை நம்பிய ஊரார் இரவில் அவர்கள் இருவரையும் கோயிலில் விட்டு வைக்கிறார்கள். நள்ளிரவில் கரிராசனைக்

கொன்று தப்பிவிடுகிறாள். ஊர்த் தலைவர்களாகிய கௌடர்கள், தாங்கள் நீதி தவறியதை உணர்ந்து 'தீ மூழ்குகிறார்கள்' என்னும் கன்னடக் கதையொன்று நீலிகதையைத் தழுவியதாகவே அமைகிறது. இக்கதையின் மூலக்கதை மலையாளத்திலிருந்து பெறப்பட்டதாகவும் குறிப்பிடப் பட்டிருக்கிறது. எனவே இக்கதை மலையாளத்தில் வழக்காற்றில் 'உண்ணுநீலி சந்தேகம்' என்னும் கதையின் தழுவல் என்பது வெளிப்படை.

*சேக்கிழார் கூற்று:* பழையனூர் சிறுத்தொண்டர்கள் எனப்படும் அடியவர்கள் வணிகனுக்காகத் தங்கள் உயிரைக் கொடுத்துத் தங்கள் வாக்கைக் காப்பாற்றிக் கொண்டார்கள்; அத்தகு சான்றோர் நிறைந்தது தொண்டை நாடு என்பது சேக்கிழார் கூற்று.

*சம்பந்தர் வாக்கு:* "என் உள்ளத்திலே யிருந்து தம்மைத் துதிக்கும் உணர்வை ஊட்டிக் கொண்டிருப்பவன் இறைவன்; அந்த இறைவன் பழையனூர் மக்களின் வாழ்நாளை யெல்லாம் வஞ்சனையால் கவர்ந்து கொண்டவளாகிய நீலி தங்கியிருந்த பழையனூரை அடுத்த திருவாலங்காட்டில் கோயில் கொண்டுள்ள எம்பெருமான் ஆவான்" என்பது சம்பந்தர் வாக்கு.

இதே போல பழையனூர் வேளாளர்களின் புகழைச் சிறப்பிப்பன சேக்கிழார் புராணமும், திருஞான சம்பந்தர் புராணமும் ஆகும். இவை அனைத்தும் சுட்டும் பழையனூரும், திருவாலங்காடும் சிறந்த திருத்தலங்களாக இன்றும் விளங்குபவையாகும். எனவே 'நீலிகதை' என்பது சிறந்த ஒரு வரலாற்றுச் செய்தியே என்று கொள்வது பொருந்தும்.

**சமணக்கதை**

ஜின காஞ்சி என்னும் பகுதியில் பிறந்து 'சமாந்த பத்ரா' என்னும் சுவாமிகள் இயற்றிய 'இரத்தின கரண்டக சிராவகச்சர' என்னும் நூல் நீலி கதையைக் குறிப்பிடுகிறது. 'பௌத்த மதத்தில் பிறந்த ஆடவன் தான் சமணனைப் போல் நடித்து நீலி என்னும் சமணப் பெண்ணை மணக்கிறான். ஒருநாள் வீட்டுக்கு வந்த புத்த பிட்சு ஒருவர்க்கு இறைச்சி சமைத்துத் தருமாறு நீலியின் கணவன் பணிக்க, அவள் புத்த பிட்சுவின் செருப்பை அறுத்துக் கறியாகச் சமைத்துத் தருகிறாள். உண்மையை அறிந்த கணவனும் மாமனாரும், 'அவளைக் கற்பிழந்தவள்' என்று பழிக்கின்றனர். நீலி இறைவனிடம் முறையிட்டு அந்த நகரத்தில் அடைக்கப்பட்ட கதவு

ஒன்றினைத் திறந்து வைத்துத் தன் கற்பை வெளிப்படுத்துகிறாள்', என்பது அந்நூலில் காணப்படும் நீலி என்பவளின் வரலாறாகும்.

### நீலி வில்லுப்பாட்டு

திருநெல்வேலி கன்யாகுமரி மாவட்டங்களில் பாளையங்கோட்டை, பிளவுக்கல், முப்பந்தல், வடசேரி போன்ற பல இடங்களில் இசக்கியம்மன் கோயில்கள் பல உள்ளன. அப்பகுதிகளில் 'இசக்கியம்மன் வில்லுப்பாட்டு', 'பழகை நல்லூர் நீலியம்மன் வில்லுப்பாட்டு' என்னும் பெயர்களில் இசை நிகழ்ச்சிகள் நிகழ்த்தப்பட்டு வருகின்றன. 'காட்டுக்கடை நீலியம்மன் பேரில் வில்லுப்பாட்டு' என்னும் நூல் ஒன்று நிறுவன நூலகத்தில் உள்ளது. இவை அனைத்தும் வணிகனாக மறுபிறவி எடுத்த செய்தி முதல் எழுபது வேளாளரும் தீப்பாய்ந்த செய்தி ஈறாக முழுக்கதையையும் விளக்குவனவாகவே அமைந்துள்ளன. பாளையங்கோட்டையை அடுத்துள்ள பகுதிகளில் நீலியம்மன் வழிபாடு நடைபெற்று வருகிறது. இவையனைத்தும் பழையனூர் நீலியின் வழிபாடாகவே கருதப்படுகின்றன.

ஆனால் இக்கதைகளில் வரும் பழகைநகர் என்பது எது என்னும் கேள்விக்கு வைகையாற்றின் தெற்கே திருப்புவனம் பகுதியில் பழையனூர் என்ற ஓர் ஊருள்ளது; திருநெல்வேலிப் பகுதியிலுள்ள ஓர் ஊர் நீலித நல்லூர் என்று குறிப்பிடப்படுகிறது என்னும் செய்திகள் பல, ஆய்வாளர்களால் சுட்டப்படுகின்றன.

ஆனால் தொண்டை நாட்டிலுள்ள திருவாலங்காடும், அதனையடுத்துள்ள பழையனூருமே நீலியின் வரலாற்றுக்குரிய இடங்களாகும் என்பதைக் காரைக்காலம்மையாரின் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் முதல் தேவாரப் பாடல்கள் ஈறாக அனைத்துப் பழம்பெரும் நூல்களாலும் உறுதிப்படுத்த முடிகிறது.

சென்னையை அடுத்த அரக்கோணத்திலிருந்து சுமார் எட்டு கிலோமீட்டர் தூரத்தில் அமைந்தது திருவாலங்காடு; திருவாலங்காட்டுக்குத் தெற்கே ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் இருப்பது பழையனூர்; திருவாலங்காட்டுக்கும் பழையனூருக்கும் இடையில் தீப்பாய்ந்த குண்டம் என்னும் பெயரால் ஒரு பரந்த பள்ளப் பகுதி ஒன்று காணப்படுகின்றது. குண்டத்தை அடுத்து சாட்சிபூதேஸ்வரர் ஆலயம் ஒன்றும் அமைந்துள்ளது. சேர, சோழ, பாண்டியர் மூவரும் இங்கு வந்து வழிபட்டு அத்தலத்தைப்

பாடிப் புகழ்ந்து சென்றதாக மூன்று வெண்பாக்கள் காணப்படுகின்றன. (பாடல்கள் இணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன).

சிதைந்து போன தீப்பாய்ந்த குண்டத்தின் முன் ஒரு மண்டபம் அமைக்கப் பட்டுள்ளது. அங்கு தீப்பாய்ந்த வேளாளர் எழுபதின்மரின் உருவச்சிலைகள் கல்லில் வடிக்கப்பட்டுள்ளன. திருவாலங்காட்டின் வடக்கே ஒரு சுடுகாட்டுப்பகுதி இருக்கிறது. அங்கு நீலிக்கு 'நினைவுக்கல்' ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. சுமார் 4 அங்குல கனத்தில் 4 அடி அகலமும் 9அடி உயரமும் கொண்ட இரண்டு கற்களைத் தரையில் நிறுத்தி வைத்து, மேலே அதே அளவுள்ள ஒருகல் பரப்பப்பட்டுள்ளது. மேலே நிறைய கூழாங்கற்கள் கொட்டிக் கிடக்கின்றன. அவை ஏதோ ஒரு குறிக்கோளோடு மக்களால் போடப்பட்டு வருபவை எனத் தெரிகிறது. முகோண வடிவில் காணப்படும் அக்கற்களின் அமைப்பை ஊர்மக்கள் நீலிகோயில் என்றே கூறுகிறார்கள். ஆனால் வேறு சிலைகள் காணப்படவில்லை; பூசை முதலிய எதுவும் எப்போதும் நடைபெறுவதில்லை. ஒரு நினைவுத்தூண் போலவே காட்சி தருகிறது. பெரிய வெட்டவெளியானதாலும், சுடுகாட்டுப்பகுதியானதாலும் அச்சம் தரத்தக்க இடமாகவே காணப்படுகிறது. நடுப்பகல் நேரம் (பகல் 12 மணி அளவு) இரவு நேரங்களில் யாரும் அவ்வழியில் தனிமையாகச் செல்ல அஞ்சுகிறார்கள். பெரும்பாலும் மகளிர் செல்வதே இல்லை. எதிரில் எதிரொலி உண்டாக்குமளவிலான தடைகள் எதுவும் இல்லை என்றாலும் 'நீலி' என்று உரக்கக் கூவினால் மட்டும் எதிரொலியாக 'ஓ' என்ற ஒலி கேட்பது வியப்பிற்குரியதாகவே இருக்கிறது.

காஞ்சியை விட்டுப் புறப்பட்ட தரிசனனும், அவனைப் பின்தொடர்ந்த மனைவி பூங்கோதையும் நடந்து சென்று அன்றைய இரவில் பேரம்பாக்கம் என்னும் ஊரில் தங்குகிறார்கள். அங்கு தரிசனனின் உறவினர் அறிவுரைகூறி உபசரிக்கிறார்கள். அங்கிருந்தே இரவில் பிரிகிறான் தரிசனன். இந்த ஊரும் திருவாலங்காட்டுக்கும் காஞ்சிக்கும் இடையில் அமைந்துள்ளது.

**திருவாலங்காடு**

தேவாரத்திருத்தலங்களுள் ஒன்றான திருவாலங்காடு சிவபெருமான் திருநடனம் புரிந்த ஐந்து திருத்தலங்களில் ஒன்றாகும். இது இரத்தின

சபையை உடையது. காளியோடு ஊர்த்துவ நடனமாடிய திருத்தலமாகும். இத்தலத்தின் இறைவன் ஆலங்காட்டீசர்; தேவி வண்டார் குழலி. இத்திருத்தலம் திருவலம், திருவல்லை மாநகர், திருவாலவனம் என்னும் பல பெயர்களால் நூலுள் சுட்டப்படுகிறது. இறைவன் ஆலவனேசன், கொத்தனந்தநாதன், திருவல்லை நாதன், வில்வநாயகன் என்னும் பெயர்களாலும், தேவி வல்லி நாயகி, சிவகாமி என்னும் பெயர்களாலும் சுட்டப்படுகின்றனர்.

இத்திருத்தலம்,

ஓர் பெண் பேய் தங்கி அலறி . . . ஆடும்.
சுடலைச் சுடுபிணத்தீ சுட்டிட . . . அள்ளி அவிக்க
நின்றாடும்
ஓமக்குழிச் சோற்றை வாங்கி . . . பேய்கள்
கையடித்தோடிடும்

என்னும் தன்மைகளை உடையது என்பதாகக் காரைக்காலம்மையார் சுட்டுகிறார். இத்தன்மைகள் நீலி என்னும் பெண்பேய், நீலியுடன் தங்கிய பேய்க் கூட்டங்கள் ஆகியவற்றின் தன்மைகளாகவே காணப்படுகின்றன. இதேபோல காட்டின் அஞ்சத்தகு இயல்புகளுக்கும் அம்மையாரால் சுட்டப்படுவது குறிப்பிடத்தக்கது.

பிறையை அணிந்தவரும், கயிலையில் எழுந்தருளியவரும், இடபத்தை வாகனமாகப் பெற்றவரும், உக்கிரகாளி வடிவுடைய சக்தியுடன் திருநடனம் புரிந்தவருமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்து வரங்கொடுக்கும் சிறப்பு வாய்ந்தது திருவாலங்காடு. மேலும் சாலைகளும், சோலைகளும், குளங்களும், ஏரிகளும், வயல்களும் நிறைந்து விளங்கும் சிறப்புடையது. மக்கள் போற்றும் பலவகைச் செல்வங்களும் நிறைந்து விளங்குவது என்பன நூலாசிரியரால் கூறப்படும் திருவாலங்காடு பற்றிய சிறப்புகளாகும்.

**பழையனூர்**

'அஞ்சும் பழையனூர் ஆலங்காடு'
'பழையனூர் சிறுத்தொண்டர் சொல்லலையே காக்கப்

பெற்ற மேன்மையின் நிகழ்ந்தது'
'பழையனூ ரார் இயம்பும் மொழி காத்த கதை'
என்னும் பலவகைச் சிறப்புகளால் பேசப்படுவது பழையனூர் என்னும் திருத்தலம். இந்த இரண்டு ஊர்களுமே நீலியின் வரலாற்றிற்குரிய இடங்களாகும் என்பது தேவாரம் முதலான பல இலக்கியச் செய்திகளால் உறுதியாகிறது.

***பாத்திர அமைப்பு***

***நீலி நீலன்***

அவிநாசியைச் சேர்ந்த மெய்க்கியானி என்னும் அந்தணரின் மகளாகிய நவக்கியானி தன் கணவன் புவனபதியால் கொலை செய்யப்பட்டு அலகையாகிறாள். அதுகண்ட அவள் தமையன் சிவக்கியானி தற்கொலை செய்து கொண்டு அலகையாகிறான். இருவரும் நீலி, நீலன் என்ற பெயரில் பேயாகத் திரிந்து வருகிறார்கள்.

தன மனைவியைக் கொன்ற புவனபதியே காஞ்சியில் நாகந்தையின் மகளாகப் பிறந்து தரிசனன் என்னும் பெயர் பெற்று வாழ்கிறான். அவனே முற்பிறவியில் தன்னால் கொலை செய்யப்பட்ட நவக்கியானியாகிய நீலியால் கொலை செய்யப்பட்டுப் பழி தீர்க்கப்படுகிறான்.

இந்த முற்பிறவி மறுபிறவிக் கொள்கைகள் சைவ, வைணவ மதத் தத்துவங்களில் அமைவது போலவே சமண, பௌத்தத் தத்துவங்களிலும் காணப்படுகின்றன.

பொருள் ஈட்டும் விருப்பத்தோடு பல அணிகலன்களை எடுத்துக்கொண்டு மனைவியுடன் வந்து சிங்கபுரம் என்னும் நகரத்துக் கடைத்தெருவில் ஆபரணங்களை விலை கூறி விற்கிறான் சங்கமன் என்னும் வணிகன். மன்னனுடைய அலுவலர்களில் ஒருவனாகப் பணியாற்றிய பரதன் என்பவன் சங்கமனை ஒற்றர்களில் ஒருவன் என்று கருதிப் பிடித்துச் சென்று மன்னனிடம் ஒப்படைத்துக் கொலைக்கு உள்ளாக்குகிறான். பரதனின் மனைவி நீலி என்பவள் இது முறையோ வென்று கதறி அழுது

"எம்முறு துயரஞ் செய்தோ ரியாவதும்
தம்முறு துயரமிற்றாகுக" என்று

சாபமிட்டு உயிர் விடுகிறாள்.

அந்தப் பரதனே இப்பிறவியில் கோவலனாகப் பிறந்து முன்வினைப் பயன் வந்து உறுத்த இன்று கொலைக் களப்பட்டான் என்னும் சிலப்பதிகாரச் செய்தி (சிலம்பு 23; 140 - 170) மறுபிறவிக் கொள்கைக்குச் சான்றாகிறது. மேலும், சாபம் கொடுத்த சங்கமனின் மனைவி `நீலி' என்னும் பெயரையுடையவள் என்பது பழி வாங்கும் சபதத்தை மேற்கொண்ட இந்த நூல் பாத்திரத்தின் பெயரைப் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்க ஒன்று. சாபமிடுவதும் சபதம் எடுப்பதும் பழிவாங்குவதுமாகிய செயல்களை உடையவள் `நீலி' என்று பெயர் பெறுவது வழக்காற்றிலும் நிலைத்து விட்ட ஒன்றாகிறது.

அசோதர நாட்டு மன்னன் இரவிவர்மனின் மகள் இலக்குமி; அத்திபதியின் மகன் இராகுலனை மணக்கிறாள். இராகுலன் பாம்பு கடித்து இறக்க, இலக்குமி தீக்குளித்து உயிர் விடுகிறாள். இலக்குமியின் சோதரியர் தாரை, வீரை என்போர். இலக்குமி மணிமேகலையாகவும், இராகுலன் உதயகுமாரனாகவும் இப்பிறவியில் பிறந்ததனாலேயே அவர்கள் உள்ளம் ஒருவரை ஒருவர் விரும்பியது. தாரையும், வீரையும் முறையே மாதவியாகவும், சுதமதியாகவும் பிறந்தனர் (காதை 9, 10)) என்னும் மணிமேகலைச் செய்தியும் மறுபிறவிக் கொள்கையை எடுத்துக் காட்டுகின்றது.

புரிசைக்கிழான் குழந்தைப் பேறு வேண்டி இறைவனிடம் முறையிட்டபோது

''முந்தையிற் பாவம் முடிந்த தனாலே
சந்ததி யிலை யென்று சங்கரன் உரைக்க''

என்னும் தொடரும் முற்பிறவியில் பாவஞ் செய்தவனே இப்பிறவியில் புரியைக்கிழானாகப் பிறந்திருக்கிறான் என்பதைச் சுட்டுகிறது.

**ஆசிரியர் திறன்**

''ஐந்து வாண்முகம் ஐந்திரு செங்கை சேர்
தந்தி வாண்மலர்த் தாள்கள் சிரங்கொள்வாம்''

என்னும் விநாயக வணக்கப் பாடலடிகள் பஞ்சமுக விநாயகரைச் சுட்டுகின்றன. இந்த விநாயகர் நூலாசிரியரின் ஊரிலுள்ள விநாயகரின்

அமைப்பாகத் தோன்றுகிறது. இவ்விநாயகர் ஐந்துதலையும் பத்துகையும் உடையவராவர். இவர் துராசாரனைக் கொன்று காலில் மிதித்து அருளியவர். உடுண்டி விநாயகர் என்று பெயரும் இவருக்கு உண்டு. திரு மூர்த்திகளைத் தமது துதிக்கையால் எடுத்து விழுங்கிப் பரப்பிரம்ம வடிவமாய் நின்றவர். இச்சிறப்புகளை உணர்ந்தே ஆசிரியர் இந்த விநாயக வணக்கத்தைத் தொடக்கத்தில் வைக்கிறார். மேலும் விநாயகனைச் 'சூலபாணி சுதன்' என்றும் சுட்டுகிறார் (4).

மன்மதனைத் தம் தீவிழியால் எரித்தவன்; சிவகணங்களுக்குத் தலைவன்; வேதன்; அரிக்கு அபுரூபன்; பிறை சூடியவன்; வெள்ளி மலையான்; இடப வாகனன்; என்னும் பல தொடர்களால் திருவாலங்காட்டு ஈசனின் பெருமைகளைச் சுட்டுவதால், ஆசிரியர் சிறந்த சைவ சமய வித்தகராயிருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது.

திருவாலங்காட்டுப் புரிசைக்கிழான் பகீரதி குலத்தோன்; பேரறிவாளன்; சான்றோருக்குச் சான்றாக விளங்குபவன்; தரும் குணமுடையோன்; மானமுடையவன்; சொன்ன சொல் தவறாதவன்; கல்வியில் சிறந்தவன்; சத்திய வந்தன்; கலை வல்லவன்; புலமை மிக்கவரை ஆதரித்துப் போற்றுபவன்; சிவபெருமானை என்றும் மறவாதவன்; இறைத் தொண்டர்களிடம் அன்பு பூண்டவன்; மக்கட் தலைவன்; மிகுந்த வலமுள்ளவன்; பெரும்பேறு பெற்றவன்; என்றெல்லாம் மிகையாகச் சிறப்பிக்கப் படுகின்றான் (11)

இதே போலத் திருக்கச்சி மாநகரத்து நாகந்தை என்பவன் தேசிக வம்சத்தான்; மன்னர் புகழும் பேரறிவாளன்; பெருஞ்செல்வத்தைத் துரும்பாக நினைப்பவன்; இளகிய உள்ளமுடையவன்; தரும் காரியங்களையே செய்பவன்; அன்ன தானத்திலும் ஆடை தானத்திலும் சிறந்தவன்; நினைத்ததைச் சொல்லுபவன்; நிலையான குணம் படைத்தவன்; சிவனடியாரைச் சிவபெருமானாகவே காண்பவன். தன் இனத்தவரை அழைத்து வலிந்து தாமே பொருளைக் கொடுத்து வியாபாரம் செய்யத் தூண்டுபவன்; செல்லும் கப்பல்கள் நூறும், வந்து சேரும் கப்பல்கள் நூறும் சொந்தமாகப் பெற்றவன்; என்றெல்லாம் சிறப்பிக்கப் படுகிறான் (29)

இந்த இருவரின் சிறப்புகளைக் கூறும் நீண்ட பாடலடிகள் ஆசிரியரின் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவன. கேட்போருக்கு இன்பம் பயப்பதோடு அவர்கள் எப்படி விளங்கவேண்டும் என்பதை அறிவுறுத்துவனவாகவும் அமைந்துள்ளன.

நாகந்தை தன் மகனுக்குக் கூறும் அறிவுரைகள் அன்றைய மக்களின் பண்பாடுகளை உணர்ந்த ஆசிரியர் அந்த மக்களுக்கு அறிவுரை கூறும் முறையிலேயே அமைகின்றன. அவற்றுள் சில:- மற்றவர் மனைவிமேல் ஆசை வைக்காதே! பெண்களைக் கண்டு புத்தி மாறாதே! யாருக்கும் மோசம் செய்யாதே! நம்பியவருக்குத் துரோகம் செய்யாதே! ஆசிரியர் சொல்லை மீறி நடக்காதே! என்றும் யாருக்கும் தீங்கு செய்ய நினைக்காதே! கற்றவர் மனம் நோகப் பேசாதே! மனைவி சொல்லை மீறாதே! நல்லோரை விட்டு விலகாதே! தீயோரைப் பின்பற்றிச் செல்லாதே! தீர்ப்பு சொல்வதில் பகைமையைப் பாராதே! என்பனவாம். (40)

**யாப்பு நயம்**

வந்த **வேளை** எரித்த மலர்க்கணான்
தந்த **வேளைத்** தயித்தியர் காலனை
எந்த **வேளையும்** என்றுள்ளம் நீங்கலால்
கந்த **வேளைக்** கருத்தில் இருத்துவம் (2)

வேள் என்னும் பல பொருள் ஒரு சொல்லை, அடிதோறும் இரண்டாவது சீரில் அமைத்து நயம்படக் காட்டியிருப்பது ஆசிரியரின் யாப்புத் திறனுக்குச் சான்றாக விளங்குகிறது.

காட்டினில் எனைக்கட்டி வளைத்தாள் - வெகு
**தாடகி பூடகி நாடகி** கண்மடீர்
**பாதகி** மயக்கம்செய் **தோதகி**
இவள் மெத்தக் **காதகி**
எனைக் கொல்லும் **பூதகி** (81)

என்பன போன்று ஏராளமான பாடல்கள் இயைபுத் தொடை நயம் செறியப்பாடப்பட்டுச் சுவை பயக்கின்றன.

***அணிநயம்***

இறைவனால் ஏவப்பட்ட குண்டோதரன் நீலனைக் கொல்லுகிறான். பிசாசு வடிவினனாகிய நீலன் இறந்து பட்டதை வாழ்க்கையோடு இயைந்த உவமைகளால் எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர்.

''தன்மையில் லாதவர் தனம்கொள்ளை போய்விட்ட
தென்னவே நீலனும் இறந்தனன் புவிமேல்''
''நல்லோர்க்கு அடுத்த வியாதியைப் போலவே
நில்லாமலே யந்த நீலனும் மடிந்தான்'' (22)

என்பன நீலன் இறந்தது பற்றிய செய்திக்கான உவமைகள். இவை ஆசிரியரின் அற உணர்வை வெளிப்படுத்துகின்றன.

சிவகணங்களுள் ஒருவனாகிய குண்டோதரனும், பேய் வடிவினனாகிய நீலனும் ஒருவரை ஒருவர் எதிர்த்துச் செய்யும் போரின் உண்மை நிலையைக் கூற வந்த ஆசிரியர்,

''இவன்எறிய அவன்எறிய இருவர்களும் ஒருநாழி
உவரிஉவ ரியுமென்ன யுத்தமது புரிந்தார்
வான்எழும்பு வார்அவனி வந்திழிகு வார்சுழன்று
தான்அலம்பு வார்தழுவிச் சயிலமெனப் புரள்வார்
விட்டுவிடு வார்சிங்க மென்ன எதிர்ப்பார்''

என்று சிறப்பித்துக் கூறுகிறார். அந்த இருவரையும் கடலாகவும், சிங்கமாகவும், மலையாகவும் உருவகப்படுத்திக் காட்டுகிறார்.

நீலன் அழைக்க அவனிடத்தில் வந்த பேய்கள் நீலனை வணங்குவதைக் கூறும்போது,

''மலைபோலும் நீலனடி வந்து தொழுதாரே'' (16)

என நீலனை மலைக்கு ஒப்பாக்குகிறார்.

தன் அண்ணன் தங்கியிருந்த மரத்தை வெட்டியதோடல்லாமல், ஈசனிடம் காட்டிக் கொடுத்த பழையனூரார்களை 'ஒரு பழிக்கு எழுபது பழி வாங்குவேன்' எனச் சபதம் செய்தாள் நீலி. அதன் பிறகு

திருவாலங்காட்டையடைந்து முற்பிறவியில் தன்னைத் திருமணம் செய்து கொண்டு, பின் கொலைசெய்துவிட்டு வந்தவனும், பழிக்குப்பழி கொல்லுவதற்குரியவனுமான தன் கணவன் இப்பிறவியில் செட்டி மகனாகப் பிறந்து வருவான் என்று வழி மறித்துக் கொண்டு காத்திருந்தாள். அவள் எதிர்பார்த்து நிற்கும் செயலை

"வதங்கிப்பசி யுளவேங்கை வருவர்களை ஆசரித்து
பதுங்கினது போலவளும் ஒதுங்கியிருந் தாளே"
"நீரண்டை விழிமூடி நின்றுகொண்டு மீனெடுக்கும்
கேரண்டம் போலிவளும் மாரண்டத் திருந்தாளே" (27)

என்னும் உவமைகளால் எடுத்துக்காட்டுகிறார் ஆசிரியர். இவை,

"கொக்கொக்கக் கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்கச் சீர்த்த விடத்து" (குறள் - 490)

"அடக்க முடையார் அறிவிலர் என்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா - மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு" (மூதுரை - 16)

என்னும் பாடற் கருத்துகளை உள்ளடக்கிய உவமைகளாகும்.

**தத்துவப் பண்புகள்**

மனிதர் படும் துன்பம், மனிதரிடையே உள்ள ஏற்றத் தாழ்வு போன்றவற்றை ஆய்ந்து அறிபவர்கள் அவற்றை இலக்கியமாகப் படைக்கிறார்கள். இவ்வாய்வு அறிஞர்கள் கண்ட உண்மைகள் சிறந்த தத்துவங்களாக அமைகின்றன. அவை 1. உயிர் 2. பிரகிருதி 3. மான் 4. செருக்கு 5. மனம் 6. அறிகருவி ஐந்து (மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன) 7. செயற்கருவி ஐந்து (மொழி, கால், கை, கருவாய், எருவாய் என்பன. இவை முறையே பேச, நடக்க, கொள்ள, இன்புற, கழிக்கப் பயன்படுவன. 8. தன்மாத்திரை ஐந்து (அவை, சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பன) 9. பூதங்கள் ஐந்து (நிலம், நீர், வளி, வெளி, தீ என்பன).

இவற்றுள் உலகின் தோற்றத்துக்குக் காரணமாவது பிரகிருதியாகும்.

அது காட்சிப் பொருளன்று. சத்துவம், ராஜசம், தாமதம் என்னும் முக்குணங்களால் ஆனது. எல்லா உயிர்களிடத்தும் இம்முக்குணங்களும் இணைந்தே இருக்கும். ஆனால் இவை எந்த உயிரிடத்திலும் சமநிலையில் இருப்பதில்லை. இந்தப் பொதுக் கொள்கையின் படி,

''எமனாலும் வெல்ல முடியாதவன் நீ; உன் பெயரைச் சொல்லவே அஞ்சுவார்கள்; இருபிறவியிலும் பிரியாத என்னை விட்டு எப்படிப் பிரிந்தாய்?'' என்றெல்லாம் உள்ளம் உருகிப் புலம்பிய நீலி சிறந்த அறிவும் தெளிவும் உடைய **சத்துவ குணத்தினளாய்** விளங்குகிறாள். (24)

நீலன் இறந்த காரணத்தைப் பேய்கள் கூறக்கேட்டவுடனே,
சீறினள் நெருப்பு ஆறது போல
அண்டமும் உலகமும் அதிர ஆர்ப்பரித்து .......
காட்டிக் கொடுத்தவரை வாட்டுவன் என்றாள்.
.......ஒரு பழிக்கு எழுபது உயிர்க்கொலை யிடுவேன்

என்றெல்லாம் கூறிச் சபதம் செய்து பெருந்துக்கத்துக்கும் சினத்துக்கும் காரணமான **ராஜசப் பண்பு** டையவளாக மாறிவிடுகிறான்

பேய்களையெல்லாம் துரத்திவிட்டுப், பழிவாங்குவதற்குரியவனாகத் தன் கணவன் செட்டியாகப் பிறந்துவருவான் என்று பாம்பு முட்டையைப் போலப் பலகாலமாய்ப் பதுங்கியிருக்கும் நீலி, இயக்கமில்லாத, மயக்க நிலையையுடைய, இருள் சூழ்ந்த பண்புகளை உடைய **தாமச குணத்தைத்** தழுவியவளாகிறாள்.

காத்திருந்த நீலி தரிசனன் தனியனாய்ப் பழையனூர் நோக்கி வருவதையறிகிறாள். செட்டி மயங்குமாறு தெய்வக்கன்னி போன்ற உருவில் அவன் முன் வந்து,

''வாடிய பயிருக்கு மழைபோல வந்தீர்
மாலாகினேன் என்னை மருவும்''

என்று கூறுகிறாள்.

தரிசனன் இகழ்ந்து பேச, காட்டினிடையில் பெரிய பட்டணத்தை உண்டாக்கிப் பெரிய செல்வந்த மகளிரின் தலைவியாகவும், தண்ணீர்ப்பந்தல் வைத்து நீர் மோர் அளித்து உபசரிப்பவளாகவும்

பலவாறான வேடத்தில் தரிசனனை மயக்கப் பார்க்கிறாள். எல்லாச் செயல்களிலிருந்தும் தப்பித்த நீலன் பழையனூர்ச் சபையில் அடைக்கலமடைந்தபோது தரிசனனின் மனைவியாக வடிவெடுத்துக் குழந்தையுடன் சென்று சபையோரிடம் முறையிட்டு வாதாடுகிறாள். இச்செயல்கள் அனைத்தும் போலிச் செயல்களாக இருந்தாலும் உணர்ச்சிகளை வெளியிடும் சத்துவ குணத்தினளாக நீலியை உருவாக்குகின்றன.

கோயிலின் உள் அடைக்கப்பட்டபோது ஊரார் கேட்கிறார்கள் என்பதை உணர்ந்து மனைவி நிலையிலிருந்து வேண்டும் உரைகளும் தானும் இயங்கிப் பிறவற்றையும் இயக்கும் தன்மையுடைய ராஜச குணத்தை வெளிப்படுத்துகின்றன. முக்குணங்களும் இணைந்திருப்பது இயல்பேயாயினும், நீலியிடம் இவை உடனுக்குடன் மாறி மாறி அமைவது ஒரு தனித்தன்மைக்கு எடுத்துக்காட்டாகிறது. இப்பண்பு உலகில் எல்லாப் பொருள்களுமே மாற்றம் பெறுகின்றன; அவையும் உள்ளும், புறமும், மேலும் கீழும் என்ற நிலையில் அணு அணுவாக மாற்றம் பெறுகின்றன என்னும் பொதுத் தன்மையை அடிப்படையாகக் கொண்டது.

சம்பாபதியின் கோட்டத்திலிருந்த மணிமேகலை, காஞ்சனனால் உதயகுமரன் வெட்டுண்டதைக் கேட்ட உடன் தான் கொண்டிருந்த காயசண்டிகை வடிவை ஒழிக்கிறாள். தான் முற்பிறவியில் கணவனுக்காகத் தீ மூழ்கியதும், உவவனத்தில் உவயகுமாரனைக் கண்டபோது அவன்பால் தன் மனம் சென்றதும், புத்த பீடிகையால் முற்பிறவி அறிந்ததும் ஆகிய செயல்களை எல்லாம் கூறிப் புலம்புகிறாள். அப்போது கணவன் மனைவியாராகிய தொடர்பு முற்பிறவியில் மட்டுமன்று; அதற்கு முன்னும் எத்தனையோ பிறப்புகளில் நிகழ்ந்தவையாகும் என்னும் கூற்று கந்திற் பாவையால் கூறப்படுகிறது. மேலும் பல பிறப்புகளின் வரலாறும் கூறப்படுகிறது. (மணி. 21). இத்தகு பல செய்திகள் எல்லாப்பொருள்களும் மாற்றம் பெறுகின்றன என்னும் தத்துவத்தைப் பெற்ற பௌத்த சமயக் கருத்துகளாகின்றன.

நிலையான பொருள் என ஒன்று இல்லை; மாற்றந்தான் என்றும் நிகழ்வது. எனவே நிலைபேறு என்பது பொய்; மாற்றந்தான் மெய் என்னும் பௌத்த மதக் கொள்கைகள் இந்நூலில் மேலே காட்டிய பல செயல்களோடு பொருந்துகின்றன.

ஒருவர் வாழ்க்கையில் நிகழவிருக்கும் எதிர்கால நிகழ்ச்சிகளைச் சிற்சில குறிகளின் துணைகொண்டு கணிகள் கூறுகிறார்கள். அவை அவ்வாறே நிகழவும் செய்கின்றன. ஒவ்வொரு காரியத்திற்கும் ஒரு காரணம் இருந்தேயாக வேண்டும். இந்த அடிப்படையில் காரணம் முதலில் அமைந்து கிடக்கும் ஒன்று என்பது புலனாகும். இந்தத் தத்துவத்தின் படியே,

''பழிமுன் பழிதனக்குச் செட்டிப்
பாலன்இனி மேல் பிறந்து
வழிவருவான் என்று நீலி வழிகட்டி யிருந்தாள்'' (27)

என்னும் காரியம் நிகழ்ந்திருக்கிறது. மறைந்திருந்து கேட்கும் பழையனூர் சபையோர் நம்புமாறு,

''குணத்துக் கிசைந்தபெண் டாட்டி தனைவிட்டுக்
கூத்திமே லிச்சை கொண்டு தேடிய
பணத்தை இறைத்தென்ன பலனுண்டாம்?''

மாலை சூடிய மணவாளரே! உம்மைச் சால நம்பினேன். பழையனூரார் முன் கோலம் செய்தீர்! நான் பொல்லாதவளே; குழந்தை பொல்லாததல்லவே! என்றெல் பேசிய நீலி, முற்பிறவியில் தனக்குத் தரிசனன் செய்த பழியையும், பழையனூரார் உயிர்விட வேண்டிய பழிக்குரிய காரணத்தையும் கூறுகிறாள். இவ்வாறு பழிகளை எல்லாம் எடுத்துக் கூறிய நீலி ' இனியும்மை எந்தவிதங் கொல்லுவேன்' என்று ஏங்கியழுகிறாள்.

''சொல்வ தற்குளம் உருகு தேமனம் ......
கொல்வ தற்குளம் ஒவ்வுமோ!''

எனக்குமுறி யழுகிறாள்.

ஆனால் இறுதியில்,

'வீரத்துடன் செட்டி மாரைப் பிளந்துயிர்
விடுகவே' ....... ஊரைத்தேடி வருகிறாள்.

இவ்வாறான செயல்கள் 'ஒரே சூழல் சமயத்திற்கேற்பக் காரணகாரிய முறைகள் பொருந்துமாறு பலவகைப் பண்புகளை உருவாக்கி விடுகிறது.

அது உலக உயிர்களிடத்தில் அடிக்கடி நிகழக் கூடிய ஒன்று என்பதைப் புலப்படுத்தி அமைகின்றன.

முன்வினைப்படியே பழயனூரார் உயிர்விட வேண்டியவர்களாகிறார்கள் என்றாலும், அவர்கள் நீதிக்கு எடுத்துக்காட்டாய் விளங்குகிறார்கள் என்பது சிறந்த அறவுரையாகிறது. தீக்குளிக்கச் செல்லுவதற்குமுன் மனைவி மக்களிடம் சொல்லிக் கொள்ளுகிறார்கள்; தான தருமம் செய்கிறார்கள்; ஊரை வலம் வருகிறார்கள். அவர்கள் நிலையைக் காணும் உறவினரும் ஊரவரும் பலவாறாய்ப் புலம்புகிறார்கள்.

"மோசம் வருவது காண்கிலார் - விசு
வாச மாய்ப்பெண்ணுக் காகவே -இவர்
பேசியே இந்தப் பாடுண்டாச்சு" (114)

எனவும், நீலி சொல்லை நம்பி விட்டார்கள். ஆலயத்தில் அடைத்தனால் இந்தச் சோலியுண்டாயிற்று; வாளை வாங்காதிருந்தால் மாளான் என்று பலவாறு கூறிப் புலம்பிய அவர்கள்,

"ஈசுவரன் கோயிலுள் இப்படிச் செயச்சே
ஈசுவர னும்சமித்து இருந்தான் என்பாரும்
எழுபது பேர்க்கும் ஓர் எழுத்தோ என்பாரும்"

ஈசுவரன் தொடுக்கும் சூத்திரம் இது என்ற முடிவுக்கு வருகிறார்கள். இப்பகுதிகள் உள்ளத்தை உருக்குவனவாகி, எந்த ஒரு நிகழ்ச்சியின் தொடக்கமும் அதற்கு உரியதான, சாதகமான புறக் காரணங்களில் தங்கியிருக்கிறது என்னும் பௌத்தத் தத்துவங்களுக்கு (மணி - 21; 27-38)த் துணையாகின்றன.

இறைவன் மானிடனாய் அவதரித்து உலகியல் நியதிகளை உருவாக்குகிறான் என்பது சைவ, வைணவங்களடங்கிய இந்தியத்தத்துவம்.

"இத்த லத்தி **னிராமவ தாரமே**
பத்தி செய்து பரிவுடன் கேட்பவர்"
"நீபார தவமரில் யாவரையும் நீறாக்கிப்
பூபாரந் தீர்க்கப் புரிந்தாய் **புயல்வண்ணா** "

என்பன இராம, கிருட்டினர் அவதாரப் புருடர்கள் என்பதைப் புலப்படுத்துவன.

"அடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீட மேறிய மடக்கொடி,"

கொற்றவை, இளைய நங்கை, அணங்கு, காளி, தாருகன் உரங்கிழித்த பெண் ஆகியோர்களில் யாரும் அல்லள் என்னும் (சிலம்பு, 20; 34- 40) சமணத்தத்துவம் எளிய மானிடப் பிறவி எடுத்தவரே பின் இறைநிலை அடைகிறார்கள் என்பதை உட்கொண்டது. ஆனால் நீலன் நீலி ஆகியோரின் முற்பிறவி, மறு பிறவிக் கொள்கைகள், பிசாசு வடிவில் திரியும் தன்மை, பழி வாங்கக் காத்திருக்கும் செயல், பலவகைச் செயல்களைக் கையாண்டு பழிவாங்கும் பண்பு, இவ்வனைத்திற்கும் ஒருப்படும் இறைப்பண்பு ஆகியவை உலகப் பொருள்கள் யாவும் நிலையானவையல்ல; மாறும் தன்மையுடையன என்னும் பௌத்தத் தத்துவத்தை உள்ளடக்கியவையாகின்றன.

ஒருவர் தீச்செயலைக் குற்றம் எனக் கொள்வது; அக்குற்றத்தால் அவருக்கு இழிவு கற்பிப்பது; ஏற்ற தண்டனை வழங்குவது போல்வனவாகிய ஒரு சமுதாயத்தின், ஒரு அரசின் வாழ்வியல் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டவை என்பதும் பொருந்தலாம்.

பழையனூர் நீலியின் வரலாறு 'நீலகேசி' என்னும் இலக்கியம் உருவாகத் துணை புரிந்துள்ளது. மனிதப்பண்புக்கு மிகையான தவப்பெரியோன் முனிச்சந்திரப்பட்டாரகன் என்னும் துறவியின் அறவுரைகளைக் கேட்டு உள்ளம் திரிந்து, உலக மக்களின் தீ வினைகளை மாற்றி நல்லாற்றுப்படுத்தும் மாண்புடையவளாகி அறப்பணி செய்து துறக்கம்புக்காள் என்பதே நீலகேசியால் அறியப்படும் நீலியின் வரலாறு.

"ஆய்நீல உண்கண் அவளாயடங் காமை செய்யும்
பேய்நீல கேசி பெரியோனறங் கொண்ட பின்னை"

(நீலகேசி - 4)

——×——

# [1]நீலி யட்சகானம்

## [2]விநாயகர் துதி

1. வந்த வல்வினை நீக்கி மனத்திருந்து
உந்து ஞான முதவுங் கருணையான்
ஐந்து வாண்முகம் ஐந்திரு செங்கைசேர்
தந்தி வாண்மலர்த் தாள்கள் சிரங்கொள்வாம்

எல்லாம் வல்ல விநாயகன் கொடிய துன்பங்களாகிய குறைகளையெல்லாம் நீக்கி, என் உள்ளத்திலே வீற்றிருந்து உயர்ந்த அறிவையும் ஒழுக்கத்தையும் கொடுத்தருளும் இரக்க குணத்தை உடையவன்; அழகிய ஐந்து திருமுகங்களையும் பத்துத் திருக்கரங்களையும் உடையவன்; ஆண்யானை உருவத்தையுடையவன்; அந்த விநாயகனின் மலர் போன்ற திருவடிகளில் தலைதாழ்த்தி வணங்குவோமாக.

வல்வினை – கொடிய துன்பங்கள், குறைகள். உந்துஞானம் - உயர்ந்த அறிவும் ஒழுக்கமும். கருணை - அருளும் இரக்கமும் தயையும் உடைய குணம். வாண்முகம் - வாள்+முகம் - ஒளி பொருந்திய முகம். ஐந்திரு - ஐந்து + இரு - ஐந்தாகிய இரண்டு, ஐந்திரண்டு - பத்து. செங்கை - செம்மை + கை - சிவந்த அழகிய கைகள். தந்தி - ஆண்யானை. வாள்மலர் - வாள் + மலர். அழகிய மலர். மலர்த்தாள் - மலர் போன்ற திருவடிகள். சிரம் - தலை.

**சுவடிச்சொல்** - 1. நீலி அஷ்ட காண்டம் 2. கணபதி.

## கந்தன் துதி

2. வந்த வேளை யெரித்த மலர்க்கணான்
தந்த வேளைத் தயித்தியர் காலனை
எந்த வேளையும் என்னுள்ளம் நீங்கலால்
கந்த வேளைக் கருத்தில் இருத்துவாம்.

தாம் யோகத்திலிருந்தபோது மலர்க்கணையுடன் வந்தவனாகிய மன்மதனைத் தம் தீவிழியால் எரித்தவராகிய சிவபெருமான் தந்தருளியவனும் அசுரர்களுக்கு எமனாக விளங்கியவனுமாகிய முருகப் பெருமான்மீது என் உள்ளமானது இடைவிடாது அன்புசெலுத்துவதால் அந்தக் கந்தவேளை உள்ளத்தில்நிலைநிறுத்துவோமாக.

வேள் - மன்மதன். வந்தவேள் - சிவபெருமான் யோகத்திலிலுந்தபோது மலர்க்கணையுடன் வந்த மன்மதன். எரித்தவன் - தீ விழியால் சுட்டெரித்த சிவபெருமான். மலர்க்கணான் - சிவபெருமான். மலர்க்கணான் தந்தவேள் - முருகப்பெருமான். கண்ணான் என்பது இடைக்குறையாகக்கணான் என்றாயிற்று. தயித்தியர் - அசுரர். காலன் - எமன். எந்தவேளையும் - எல்லாக்காலங்களிலும். நீங்கல் - இட்டமாதல், அன்பு செலுத்துதல், கந்தவேள் - முருகப் பெருமான். இருத்துதல் - இருக்கச்செய்தல், நிலைபெறச் செய்தல்.

*(திருமால் முதலானோர் வணக்கம்)*

## கந்த பத்தியம்

3. பொன்னுல கிந்திரன் போதன் - மின்னு
முகுந்த [1]னிறைஞ்சி வணங்கு வினோதன்
தன்னுத லின்கண நாதன் - மன்னு
பதகம லன்றனை வந்தனை செய்வாம்.

மதிபுகழு மாபால [2]மன்னர்க்கு உறவுசொலி
நீலிபழி [3]தான்தொ லைத்த
வகைசொலு வன்கொல் வாசன்பக வதியளித்த
கணபதியி னருளி னாலே.

தேவர் தலைவனாகிய இந்திரனும் பிரமனும் திருமாலும் வணங்கும் பெருமைக்குரியவன் சிவபெருமான். தனது நெற்றிக்கண்ணிலிருந்து தோன்றிய சிவகணங்களுக்குத் தலைவனும் அவனேயாவான். அவனது திருவடித் தாமரைகளை வணங்குவோம்.

அறிவிற் சிறந்த வைசியகுலத் தலைவரின் மகளாகப் பிறந்த நீலியினால் ஏற்பட்ட பெரும்பழியிலிருந்து நீங்கிய வகைகளையெல்லாம், சிவபெருமானின் தேவியாகிய உமாதேவியார் ஈன்றளித்த கணபதியை வணங்கி அருளால் நூலாகச் செய்யத் தொடங்குகிறேன்.

பொன்னுலகு - தேவலோகம். போதன் - பிரமன். முகுந்தன் - திருமால். இறைஞ்சல் - தலைதாழ்த்துதல். வினோதன்-விநோதன் - வியக்கத்தக்கவன், பெருமையுடையவன். தன்நுதலின் கணநாதன் - தனது நெற்றிக்கண்ணில் தோன்றிய கணங்களுக்குத் தலைவன்; சிவபெருமான். பிரமனை முகத்திலும், இந்திரனைத் தோளிலும் படைத்தது போலச் சிவகணங்களைத் தன் நெற்றிக் கண்ணில் படைத்தவன்; இவர்களே சிவ சேவைக்குரிய குழுவினராவர். தாருகாவனத்து இருடியர் பலரும் செருக்குற்று மந்திரத்தால் கொல்லும் மாரண வேள்வி எனப்படும், அபிசார வேள்வியைச் செய்து அக்கினி, சூலம், தமருகம்,

பாம்பு, புலி, மழு போன்றவற்றைச் சிவபெருமான் மீது ஏவினர். அவற்றுள் அக்கினி, சூலம், தமருகம் (உடுக்கை), மழு ஆகியவற்றைக் கையிலேந்தியும், புலியைக் கொன்று அதன் தோலை உடுத்தியும், பாம்பைத் திருவடியில் அடக்கியும் அவற்றின் செருக்கு அடக்கியது போல இருடியர் ஏவிவிட்ட பிரமதகணம், பேய்க்கணம் ஆகியவற்றை அடக்கித் தன் ஏவலராய் உடன் இருக்கச் செய்தனன்; எனவே அவற்றின் நாதன் ஆயினான். பதம் - திருவடி கமலம் - தாமரை, பகவதி - பார்வதி, அம், கொல் என்பன அசைச் சொற்கள். சொலுவன் - சொல்லுவன் என்பதன் இடைக்குறை. சொல்லுவேன் என்ற எதிர்கால வினை அன் ஈறுபெற்றது.

*சுவடிச்சொல்* - 1. ஙிறஞ்சி 2. மன்னர்க்குதவுசொலி 3. தான்துலைத்த.

(நீலி கதையை யட்சகானமாய்ச் சொல்வேன் எனல்)

## திரிபுடை

4. அன்னவா கனன்படைத்த பூமியில்
அதிகமாம் திருவல்லை மாநகர்
பொன்னின் கணபதி யார்பொற்
பூவடி [1]போற்றிப் பணிவேன்
வாரி போல்கல்வி வளரவும் - செல்வம்
வளரவுங் [2]கிருபை பார்க்குந் திருவல்லை
பூரி யானைப் பாரபொற்
பூவடி புகழ்ந்து பணிவேன்
நீலி [3]கதையட்ச கானவியலாய்
நினைத்துச் சொலத்திரு வலத்தில் விளங்கிய
சூல பாணிசுதன் விநாயகர்துணை யுண்டாமே.

அன்னப் பறவையை வாகனமாக உடைய பிரமதேவன் படைத்த இந்த நிலவுலகத்தில், சிறப்புப் பெற்று விளங்குகின்ற திருவாலங்காடு என்னும் திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள கணபதியின் பொன்னடிகளை வணங்கித் துதிக்கிறேன். கல்வியும் செல்வமும் கடல்போலப் பெருகிவளர அருள்புரிபவனும் எல்லாப் பெருமைகளுக்குமுரியவனாகிய இறைவனின் மலரடிகளைப் போற்றி வணங்குகிறேன். நீலிகதையை யட்சகான வடிவில் எடுத்துச் சொல்லத் திருவாலங்காட்டில் எழுந்தருளியுள்ளவனும், சூலாயுதத்தைத் தாங்கி விளங்கும் சிவபெருமானின் திருக்குமாரனுமாகிய விநாயகன் துணை உண்டாவதாக.

அன்னவாகனன் - பிரமன், திருவல்லை - திருவாலங்காடு, பொற்பூவடி - பொன்னாலாகிய



பழையனூர் திருக்கோயில் வெளிப்பிரகாரத்துள் அமைந்துள்ள விநாயகர் திருவுருவச் சிலைகள்

மலர்போன்ற திருவடிகள். வாரி - கடல். பூரியான் - பூரணமானவன். திருவலம் - திருவாலங்காடு. சூலபாணி - சூலாயுதத்தைத் தாங்கியவன் - சிவபெருமான். சுதன் - மகன்.

**சுவடிச்சொல்** - 1. போத்தி 2. கிறுபை 3. கதையக்ஷகான

**(வேலவன் அருள் வேண்டுதல்)**

### ஏகதாளம்

5. திருமால் மருகன் திருவலத் தினில்வாழ்
முருகேசு வரன்பத முளரியைப் பணிவாம்

நிலமதெ லாம்ஒரு நிமிஷத்து உலவுதிரு
வலமுரு [1]கேசுவரன் மலரடி பணிவேன்
கோலமத தாய்முன்பு நீலிகதை யுரைக்க
வேலவர் அருள்அனு கூலம தாமே.

திருமாலின் மருமகனும், திருவாலங்காட்டில் கோயில் கொண்டவனுமாகிய முருகப் பெருமானின் திருவடித் தாமரைகளை வணங்குவோம்.

நில உலகம் முழுவதையும் ஒரு நிமிஷத்தில் உலவி வந்தவனாகிய திருவாலங்காட்டில் எழுந்தருளியுள்ள முருகேசுவரனின் திருமலரடிகளை வணங்குவோம்.

நீலிகதையை எடுத்துச்சொல்ல அந்த வேலவனின் திருவருள் துணை நின்று வெற்றி தருவதாக.

திருமால் மருகன் - முருகப்பெருமான். திருமாலின் பெண்களான சுந்தரி, அமுதவல்லி ஆகிய இருவரையும் 'நீங்கள் தேவேந்திரனிடமும் சிவமுனிவரிடமும் பிறந்து இருங்கள்; யாம் உம்மை மணக்கிறோம்' என்று அருளிச்செய்தார். அவ்வாறே பிறந்திருந்த தெய்வயானை, வள்ளி ஆகியோரை மணந்தருளியவராதலின் திருமால் மருகராயினார். முருகு + ஈசுவரன் - முருகேசுவரன். முருகப் பெருமான்; குமரன். முருகு - அழகு, இளமை. பதமுளரி - திருவடிகளாகிய தாமரை. வேலவர் - வேலாயுதத்தையுடையவர்; முருகன். அனுகூலம் - துணை, வெற்றி.

**சுவடிச்சொல்** - 1. கேசுபரன்.

***(வில்வநாதர் அருள் வேண்டுதல்)***

### சம்பை

6. நித்தங்கட வுளரெவரும் நிறைந்துதொழும் திருவல்லை
கொத்தனந்த நாதரிட பத்திமற வேனே
வேதன்அரிக் கபுரூபன் விளங்குதிரு வல்லைவில்வ
[1]நாதர்நா யகர்பாதம் எந்நாளும் தொழுவேனே
பழையனூர் நீலிகதை மொழியவே திருவல்லைக்
கழகுவில்வ நாதரருள் அடியனுக் குண்டாமே.

தேவர்கள் அனைவரும் வந்து நாள்தோறும் வணங்குகின்ற திருவல்லை கொத்தனந்த நாதரிடம் என்றும் பக்தியுடையேனாவேன்.

பிரமனும் திருமாலும் தேடிக் காண்பதற்கு அரியவனாய் விளங்கித் திருவல்லைத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள வில்வநாதரின் திருவடிகளை எந்த நாளும் வணங்குவேன்.

பழையனூர் நீலியின் கதையை மக்களறியுமாறு எடுத்துச்சொல்ல அந்த வில்வநாதரின் திருவருள் என்றும் அடியேனுக்கு உண்டாகும்.

நித்தம் - நாள்தோறும். நிறைந்து - சூழ்ந்திருந்து. திருவல்லை - திருவாலங்காடு. வேதன் - பிரமன். அரி - திருமால். அபுரூபன் - காண்பதற்கரிய வடிவமுடையவன். வில்வநாதர் - வில்வ மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டு திருக்கொள்ளம் பூதூரில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானின் பெயர்; சிவபெருமான். பழையனூர் - திருவாலங்காட்டையடுத்த ஓரூர்.

அடியன் - அடியேன்; அடியவனாகிய நான். தன்மை ஒருமைப் பெயர்ச்சொல்.

**சுவடிச்சொல்** - 1. னாதர் னாயகர்.

*(தேவி சிவகாமி துதி)*

### *கந்த பத்தியம்*

7. பாரில்அற மானது பரிந்தே சீருடன்
நடத்திவரு தேவிசிவ காமி
வாரிதிரு [1]வல்லைநாதர் வாழும் நேரிழை
மயேசுவரியை நெஞ்சில்மற வேனே.

இந்த நிலவுலகத்தில் உயர்ந்த செயல்களை ஒழுங்காக விரும்பி நடத்தி வருபவள் சிவகாமியம்மை. வல்லை நாதரின் திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள அந்த ஈஸ்வரியை என்றும் மறக்காமல் துதிப்பேன்.

பார் - பூமி. அறம் - நல்ல செயல். சீர் - பெருமை. தேவி சிவகாமி - பார்வதி; சிதம்பரத்தில் எழுந்தருளியுள்ள சிவசக்தி; இத்தலத்திலும் அதே பெயருடன் குறிப்பிடப் பெறுகிறாள். பரிந்து - பரிதல் - அன்புடன் பேசுதல், இரங்கல். வாரி - மதில். நேரிழை - பெண். மயேசுவரி - பார்வதி

**பாடவேறுபாடு** - 1. வல்லைநாதர் வாழும் வில்வநாதர் நேரிழை.

(பலர் துதி)

### சம்பை

8. காராளர் நீலிபழி [1]கழிவினத்தைச் சொல்ல
[2]நாராயணா பிழைகள் வாராமல் காரும்
வில்வநா யகர்இந்த விளங்குந் [3]திருவலத்தே
[4]வல்லிநா யகிகருணை வாருதியுண் டாமே
பாணிமா ளாதமணற் [5]கேணியுற் றதுபோல
[6]வாணிநா யகியெனக்கு வாக்குதரு வாளே.

நாராயணா! பூவைசியர்களாகிய வேளாளருக்கு நீலியால் ஏற்பட்ட இழிவை எடுத்துச் சொல்லக் குறைகள் எதுவும் ஏற்படாமல் காப்பாயாக.

வில்வநாதர் எழுந்தருளியுள்ள இந்தத் திருத்தலத்தில் வீற்றிருக்கும் வல்லிநாயகியம்மையாகிய தேவியின் திருவருள் உண்டாவதாக.

மணற்பாங்கான கிணற்றில் தோன்றும் ஊற்றுபோல, பெருமை நிறைந்த கலைவாணியானவள் எனக்குப் பாடுந்திறனைக் கொடுத்தருள்வாளாக.

காராளர் - வேளாளர், பூவைசியர். கழிவினம் - கழிவு - குற்றம், இழிவு. வல்லி - பெண், வல்லிக் கொடி போன்றவள். வல்லிநாயகி - பெண்களுக்குத்தலைவி. கருணைவாருதி - அருட்கடல். வாருதி - வாரிதி, கடல். பாணிமாளாத - பெருமை குறையாத. மணற்கேணி - மணற்பாங்கான கிணறு; மணற்கேணியில் தோன்றும் ஊற்றுபோல. (வாணி - கலைமகள்) வாக்கு - சொல், பாடுந்திறமை.

**பாடவேறுபாடு** - 1. கழுவினத்தைச் சொல்வதற்கு 3. திருவலத்தேக

**சுவடிச்சொல்** - 2. னாராயணா 4. வல்லினாயகி கறுணை 5. கேணியுத்ததுபோல் 6. வாணினாயகி.

### வசனம்

இப்படி மகாகணபதி முதலாகிய தெய்வங்களைப் பணிந்து வித்துவ சனங்களை [1]எத்திறம் புகழ்வேன் (1)

வித்துவ சனங்கள் - கல்வி நிறைந்த மக்கள்; புலவர்கள்

**பாடவேறுபாடு** - 1. யேற்றிப் புகழ்வேன்.

### (புலவர் துதி)

### அடதாளம்

9. ஒல்லை மாணிக்க வாசகன் சொல்லுக்கு
[1]உவமை யாகவே விளங்கிய
கல்வி மாணிக்க மான [2]புலவரைக்
கருதிப் பணிவேன்.
பாரில் உள்ளபுல வோர்க்கெ லாம்சிறு
பால னானயான் சொல்லும்
[3]பூரி யுரையை நல்லோ ரெலாம்
விபசார முரையார்.

சைவக்குரவர் நால்வரில் ஒருவரான மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்தருளிய திருவாசகத்தைப் போன்று பெருமையுடன் விளங்கும் புலவர் பெருமக்களை வணங்குகின்றேன்.

இந்த நிலவுலகத்திலுள்ள புலவர் பெருமக்கள் யாவரினும் மிகக்குறைந்த கல்வியறிவு உடையவனாகிய அடியேன் கூறுகின்ற இந்த மிக எளிய உரையைப் புலவர் பெருமக்கள் குறை கூறாது ஏற்பார்களாக.

ஒல்லை - குறிப்புச்சொல்; விரைவுப்பொருளது. மாணிக்கவாசகன் - திருவாசக நூலாசிரியர், சைவக்குரவர் நால்வரில் ஒருவர். இங்கு இந்த நூலை இயற்றிய ஆசிரியரின் பெயர் எனலும் ஆம். கல்வியில் உயர்ந்த புலவர்களை நவமணிகளில் ஒன்றான மாணிக்கத்துக்கு நிகராக்கிக் கல்வி மாணிக்கமான புலவரை உள்ளத்தில் எண்ணித் துதிப்பதாகக் கூறுவர்; எல்லாப்புலவரைக் காட்டிலும் தம்மைச் **சிறியவனாக்கிக் கூறுவது** ஆசிரியரின் தன்னடக்கத்தைக் காட்டுவதாகும். பூரியுரை - குற்றம் நிறைந்த சொற்கள். விபசாரம் - குற்றம், குறை.

**பாட வேறுபாடு** - 1. உவமையாய் விளங்கிய 2. புலவனார்க் கருத்தில்ப் பணிவேன் 3. பூரியுரையே.

### வசனம்

இந்தப்படிக்குக் கவியீசுவரர்களைக் கொண்டாடிப்பூர்வம் நீலி நாடகம் விருத்தப்பாவை யட்சகானப் பிரபந்தமாகச் சொல்லத் தொடங்கி நான் இப்பால் ஆதி திருவாலங்காடு ஆதிக்கிரமம் சொல்வேன் எனில். (2)

பூர்வம் - பழமை. பழைய நீலிநாடகம் விருத்தப்பா நடையில் இருந்ததாகச் சுட்டுகிறார். ஆதிக்கிரமம் - பழைய முறை; பழைய அமைப்பு.

(திருவாலங்காட்டின் தெய்வீகச் சிறப்பு)

**சம்பை**

10. சந்திரனைச் சேகரம தாயணிந்த சிவனருளும்
சிந்துரம் உலாவுகின்ற திருவாலங் காடே
வெள்ளிமலை யான்குருகு விடையுலவு வானிருந்து
தெள்ளிமையாய் வரமருளுந் திருவாலங் காடே
[1]அரிவையுக்கிர காளியுடன் [2]ஆதிநாள் ஆதிசிவன்
திருநடனம் தான்புரிந்த திருவாலங் காடே
சாலைசோ லைகள்பூந் தடாகமேரி கள்வயல்கள்
சோலையாய்ப் பூடைசூழ்ந்த திருவாலங் காடே
இந்நிலமெல் லாந்துதிக்கும் இஷ்டான பாக்கியமும்
[3]செந்நெலென்றும் விளைந்திருக்கும் திருவாலங் காடே
அல்லிதாமரை யொன்றுக்கொன்று அல்லிநாப் போலேபெரும்
செல்வமாய் நிறைந்திருக்கும் திருவாலங் காடே
உவமைசொல்லி யதுபோலே உண்டுளனக் கூடுமோ
சிவனிருந்து விளையாடும் திருவாலங் காடே.

திருவாலங்காடு என்னும் இத்திருத்தலம் சந்திரனைத் தலையிலே அணிந்தவனாகிய சிவபெருமானின் திருவருள் பெற்றது; சிறந்த யானையானது உலவிவரும் சிறப்பு வாய்ந்தது.

வெள்ளிமலையாகிய கயிலைமலையில் எழுந்தருளியுள்ளவனும், இளமை வாய்ந்த இடபத்தை வாகனமாக உடையவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்து தெளிவாக வரங்கொடுக்கும் சிறப்பு வாய்ந்தது.

முற்காலத்தில் சிவபெருமான் உக்கிரகாளி வடிவுடைய சக்தியுடன் சேர்ந்து திருநடனம் செய்த பெருமைக்கு உரியது.

பல நல்ல சாலைகளும் அழகிய சோலைகளும் தாமரை மலர்கள் நிறைந்த குளங்களும் ஏரிகளும், சோலைக்குச் சமமான வளப்பமுள்ள வயல்களும் நிறைந்து விளங்குவது.

இந்தப் பூவுலக மக்களெல்லாம் போற்றும்படியானதும், அவரவர் விரும்பக்கூடியதுமான பலவகைச் செல்வங்கள் நிறைந்து, மிகுதியான செந்நெல் விளைந்து விளங்கும் செல்வச் செழிப்புடையது.

காலையில் மலரும் தாமரையும், மாலையில் மலரும் ஆம்பலும் இணைந்து மலர்ந்து விளங்குவதுபோல பல வகையான செல்வங்களையும் பெற்று விளங்குவது.

சிவபெருமான் திருநடம் புரிந்து எழுந்தருளியுள்ள இந்தத் திருவாலங்காட்டிற்கு நிகரான திருத்தலம் என்று வேறு ஒரு தலத்தை உவமையாகச் சுட்டிக்காட்ட இயலாத பெருமைகளையெல்லாம் படைத்தது இந்தத் திருவாலங்காடு என்னும் திருத்தலம்.

சேகரம் - தலையணி. சிந்துரம் - யானை. வெள்ளிமலை - கயிலைமலை. மலையான் - கயிலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். குருகு - இளமை. விடை - இடபம், எருது. தெள்ளிமை - தெளிவு. அரிவை - தேவமகள், பெண். உக்கிரகாளி - பயங்கரமான வடிவையுடைய சக்தி; அழிவுக்கு அடிப்படையான காலத்தை உருவாக்கும் உருத்திரருக்குத் துணையாகிய சக்தி. காளியுடன் ஆடிய தாண்டவம் ஊர்த்ததாண்டவம். திருவாலங்காட்டில் கோயில் கொண்டுள்ள பெருமான் ஊர்த்த தாண்டவர் (ஊர்த்துவ தாண்டவம் என்பதும் ஒன்றே) ஊர்த்துவம் - மேல், மேல்நோக்குதல். தடாகம் - குளம். இஷ்டான பாக்கியம் - தாம் விரும்பியபடியான செல்வம். அல்லி - ஆம்பல். அல்லுதல் - இணைந்திருத்தல்.

**சுவடிச்சொல்** - 1. அருவை 2. ஆதினாள் 3. சென்னெல்.

***(புரிசைக்கிழானின் சிறப்புகள்)***

## திபதை

11. அதிசயம் உளதிரு வாலங் காடெனும்
பதிதனைச் சாட்டியன் பகீரதி குலத்தோன்

ஞானவான் தர்மவான் நாடெலாம் புகழும்
மானவான் கூறிய வாய்மொழி தவறான்

புத்திமான் கல்விமான் பூவுல கினிலே
சத்தியவான் வித்துவார் தமையிரட் சிப்பான்

சங்கர பூசிதன் சங்கமர் நேசன்
சங்கைக் குலாதிபன் காசினி பாலன்

அனைவர்க்கும் நல்லவன் அம்புய வதனன்
செனரட் சகனென்றும் சிறந்தமதி வல்லான்

அதிபல வந்தன் அதிபாக்கிய வந்தன்
கதிதிரு [1]வாலங்காட்டுப் பதியான் நாமம்

**புரிசைக்கிழானும் திருப்பச்சை நாச்சியாரும்)**

புரிசைக் கிழான் அவன் தேவிதன் நாமம்
திருப்பச்சை நாச்சியார் என்பார் (அந்தத்)

திருப்பச்சை நாச்சியார் செய்யும்தர்மத் தாலே
இரப்போரெல் லாங்கூடி ஈடேறி வாழ்வார்

புண்ணிய வான்எனும் புரிசைக் கிழானும்
நண்ணிய திருப்பச்சை நாச்சியார் தானும்

மதனும் [2]இரதியென வாழ்ந்திடும் நாளில்
மதலையில் லாமல் மனக்குறை வாகி

**(புரிசைக்கிழான் தவம்)**

புரிசைக் கிழானுளம் புண்ணாகி நொந்து
திருவாலங் காட்டுச் சிவனிடம் மேவி

வயிராக்கி யத்துடன் மாதவம் புரிந்தான்
கயிலாச வாசன் [3]கணமதிற் றோன்றி

உனக்கென்ன [4]வேணுமென்று உருத்திரன் கேழ்க்க
மனச்சலிப் பானது [5]மாற்றவே எனக்கு

மைந்தர்பாக் கியமிப்போ மண்ணியும் எனவே
முந்தையிற் பாவம் முடிந்தத னாலே

சந்ததி இலையென்று சங்கரன் உரைக்கப்
பொந்திப்புண் ணாகியே புரிசைக் கிழானும்

தவஞ்செய்து நீரும் பிரத்தியட்சம தாகியும்
அவங்களாய்ப் பிள்ளையில் லாததும் உண்டோ?



புரிசைக்கிழான் மகப்பேறு வேண்டித் தவம் செய்த போது காட்சி அளித்த திருவலங்காட்டீசர் வில்வநாதர்.

நாயினேன் மேற்கிருபை நாட்டமுண் டானால்
சேயிலாச் சிறுமையைத் தீர்க்கலாம் என்ன

(மக்கட் பேறு)

இவன்இப் படியிந்த ஈசனை [6]வெறுக்கவும்
சிவனும் இவன்இச்சை தீர்த்திட வேண்டி

பிராமணப் பிள்ளையும் பெண்ணும்ஓர் கொலையால்
பிராணனை இழந்திரு பேய்களாய் உலாவும்

பேய்களை அழைத்தந்தப் பிறைசூடி யாரும்
சேய்களாய் அவனிடம் சென்மியும் என்றே

அருள்செய்து புரிசைக் கிழான்தனை யழைத்துப்
பரிவுடன் சந்ததி பாலித்தோம் என்று

விடைதந் தனுப்பவே மிகமனம் மகிழ்ந்து
கொடைபெற்றோம் என்றுதன் குடும்பினுக் குரைத்தே

மாரனைப் போலவே வாழ்ந்திடும் நாளில்
பாரியா கியதிருப் பச்சைநாச்சி யாரும்

கெற்பனை யாகிய கிளர்பத்து மாதம்
ஒப்பனை சென்றபின் உலகெலாம் துதிக்கும்

கள்ளமில் லாதபேர் [7]காரிகை யாரும்
பிள்ளையும் பெண்ணுமாய்ப் பெற்றெடுத் தாளே.

பலவகையான புதுமைகள் நிறைந்து அற்புதமாக விளங்கும் திருவாலங்காடு என்னும் இந்தத் திருத்தலத்தினுக்குத் தலைவனாய் விளங்குபவன் புரிசைக் கிழான் என்னும் சான்றோன். அவன்,

சான்றோருக்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்குபவன்; கங்கை குலத்திலே (பகீரதிகுலம்) உதித்தவன்; பேரறிவு உடையவன்; தரும குணம் உடையவன்; உலகம் புகழும் மானமுடையவன்; சொன்னசொல் தவறாதவன்; அறிவுமிக்கவன்; கல்வியில் சிறந்தவன்; இந்த நிலவுலகத்தில் சத்தியத்தைக் கடைபிடிப்பவன்; கலையில் வல்லவர்களையும் புலமைமிக்கவர்களையும் ஆதரித்துப் போற்றும் பண்புடையவன்; சிவபெருமானைத் துதித்துவருபவன்; வீரசைவ சமயத்தைச் சேர்ந்த இறைத்தொண்டர்களிடம் அன்பு செலுத்துபவன்; கங்கைக் குலத்தின் தலைவன்; நிலவுலகில் சிறந்த ஓர் குடிமகன்; மக்கள் அனைவருக்கும் நல்லவனாக நடப்பவன்; தாமரை மலர்போன்ற அழகிய முகத்தை உடையவன்; மக்களைக் காப்பவன்; பேரறிவாளன்; மிகுந்த பலமுள்ளவன்; பெரும் பேறு பெற்றவன்; பலவகைச் செல்வங்களையும் பெற்றவன்; திருவாலங்காட்டுத் தலைவன் அவனேயாவான். அவன் பெயர் 'புரிசைக் கிழான்'. அவன் மனைவியின் பெயர் 'திருப்பச்சை நாச்சியார்'. அந்த அம்மையார் செய்த தருமத்தால் யாசிப்போர் (பிச்சை எடுப்போர்) யாருமே இல்லாத நிலை நாட்டில் ஏற்பட்டது. உயர்ந்த செயல்களை உடைய புரிசைக்கிழானும் திருப்பச்சை நாச்சியாரும் இரதியும் மன்மதனும் போல வாழ்ந்து வந்தார்கள். ஆனால் அவர்களுக்குக் குழந்தை இல்லையென்ற பெருங்குறை ஏற்பட்டது. அதனால் மனம் வருந்திய புரிசைக்கிழான் திருவாலங்காட்டுச் சிவபெருமானை நோக்கிக் கடுந்தவம்

புரிந்துவந்தான். சிவபெருமான் தோன்றி உனக்கென்ன வரம் வேண்டுமென்றார். என்னுடைய மனக்கவலை நீங்குமாறு குழந்தைச் செல்வத்தைக் கொடுத்தருளவேண்டுமென்று கிழான் கேட்டான். முற்பிறவியில் ஏற்பட்ட பாவம் ஒன்றால் இப்பிறவியில் குழந்தைச் செல்வம் இல்லாமற் போயிற்று என்றார் சிவபெருமான். உடலை வருத்தித் தவஞ்செய்த கிழான் வருத்தமுற்று, ஐயனே! நானும் தவஞ்செய்தேன்; தாங்களும் காட்சி தந்தீர்கள். இந்த இரண்டு நிலைகளும் வீணாவது நல்லதா? நாயினும் கடைப்பட்டவனாகிய என்மீது மனமிரங்குவீர்களானால் குழந்தையில்லாக் குறையை நீக்கத் தங்களால் முடியும் என்று முறையிட்டான்.

தன்மீது மிகவும் வெறுப்புக் கொண்ட கிழானின் விருப்பத்தை நிறைவேற்ற நினைத்தார் சிவபெருமான். முற்பிறவியில் கொலை செய்யப்பட்டு இறந்த ஒரு அந்தணப் பெண்ணும் பிள்ளையும் பேய்களாய்த் திரிந்து வருவதை அறிந்த அவர், அப்பேய்களை அழைத்துக் கிழானின் மக்களாய்ப் பிறந்திடுங்கள் என்று கூறினார். புரிசைக் கிழானிடமும் உமக்கு மக்கட் செல்வத்தை அளித்தோம் என்று அருள்புரிந்து மறைந்தார்.

புரிசைக் கிழான் வரம் பெற்ற செய்தியைத் தன் மனைவிக்கும் சுற்றத்தினருக்கும் கூறி மன்மதனைப் போல வாழ்ந்துவந்தார். திருப்பச்சை நாச்சியார் கருப்பமடைந்தாள். முறையாகப் பத்து மாதம் சென்ற பின் ஒரு பிள்ளையும் பெண்ணுமாக இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள்.

அதிசயம் - புதுமை, அற்புதம். பதி - ஊர். திருவாலங்காட்டுத் தலைவன் புரிசைக்கிழான். கிழார் குடியாகிய வேளாளர் குடியிலே பிறந்தவன். அவனது சிறப்புகளைக் கூறுவது இப்பகுதி. சாட்டியன் - எடுத்துக்காட்டாக (உதாரணமாக) விளங்குபவன் (சாட்சியன்). பகீரதி - கங்கை. ஞானவான் - ஞானி; பேரறிவுடையோன். மானவான் - மானமுடையோன். பூவுலகு - நிலவுலகம். வித்துவார் - வித்தையில் வல்லோர், புலமை மிகுந்தவர். இரட்சித்தல் - பாதுகாத்தல். சங்கரபூசிதன் - சிவபெருமானைப் பூசித்து வாழ்பவன். சங்கமர் - வீரசைவ சமயத்தார், இறைவன் திருக்கூட்டத்தார். நேசன் - அன்பன். அதிபன் - தலைவன். குலம் + அதிபன் - குல அதிபன் -குலாதிபன். காசினி - பூமி. அம்புயம் - தாமரை. வதனம் - முகம். செனரட்சகன் - செனம் - சனம், மக்கள். ரட்சகன் - இரட்சகன் - காப்பவன். மதி - அறிவு. பலவந்தன் - பலமுடையவன். பாக்கியம் - செல்வம். பதிதி - பதிக்குத்தலைவன். நாமம் - பெயர். தேவி - மனைவி. இரப்போர் - யாசிப்போர். ஈடேறுதல் - வாழ்வு பெறுதல். புண்ணியவான் - நல்ல செயல்களைச் செய்பவன். நண்ணுதல் - சேர்தல்; புரிசைக்கிழானோடு சேர்ந்திருக்கும் திருப்பச்சை நாச்சியார். மதன் - மன்மதன் (காமன்). இரதி - மன்மதனின் தேவி. மதலை - குழந்தை. குறை - மனநிறைவு இல்லாதநிலை. (குறையாகி என்றிருப்பது சிறப்பு) உளம் - மனம். நொந்து - வருந்தி. மேவுதல் - அடைதல். வயிராக்கியம் - மனஉறுதி. மாதவம் - உயர்ந்ததவம். கயிலாசவாசன் - கயிலாயமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். கணம் - காலநுட்பம், உடனடியாக. கண்ணெதிர் தோன்றி என்ற பாடமும்

பொருந்துகிறது. உருத்திரன் - சிவபெருமான். சலிப்பு - வருத்தம், சோர்வு. மண்ணித்தல் - அருளுதல். முந்தை - முற்பிறவி. பாவம் - தீவினை. சந்ததி - வழித்தோன்றல்; குழந்தைப்பேறு. இலை - இல்லை. பொந்தி - உடல். பிரத்தியட்சம் - கண்ணால் காணும் பொருள். அவம் - வீண்; பயனில்லாமை. நாயினேன் - நாய்போன்ற அடியேன்; கடைப்பட்ட நான். கிருபை - அருள். கிருபை நாட்டம் - அருட்பார்வை. சேய் - குழந்தை. சிறுமை - குறை, வருத்தம். இந்த ஈசன் என்றது திருவாலங்காட்டில் எழுந்தருளியுள்ள இறைவனை. இச்சை - விருப்பம். பிராணன் - உயிர். பிறைசூடியார் - சிவபெருமான், தக்கனுடைய சாபத்தால் தன்னுடல் தேயும் நிலையை அடைந்த சந்திரன் சிவபெருமானிடம் அடைக்கலம் வேண்ட, அவனுக்கு அடைக்கலமளித்துத் தம் தலையில் அணிந்து கொண்டதால் வந்த பெயர். சேய் - குழந்தை. சென்மித்தல் - செனனமெடுத்தல், பிறத்தல். அருள் செய்தல் - அன்போடு செய்தல். பரிவு - அன்பு, சந்ததி - வமிசம், வழித் தோன்றல். பாலித்தல் - அளித்தல். கொடை - கொடுத்தல். குடும்பு - சுற்றம். குடும்பினி - மனைவி. மாரன் - மன்மதன். பாரி - மனைவி. கெற்பனை - கெற்பிணி, கற்பம் தரித்தவள். கிளர் - ஒளி, நிறை. கிளர்தல் - வளர்தல். ஒப்பனை - அலங்காரம், செவ்வை. கள்ளம் - குற்றம். பேர் - பெரிய. காரிகை - மடந்தை, மாது.

***பாட வேறுபாடு*** - 1. வாலங்காட்டதிபதியான் 2. ரதியுமென 3. கண்ணெதிர் 4. வேணுமென்றுத் திரங்கேழ்க்க 7. கன்னிகை.

***சுவடிச்சொல்*** - 5. மாத்தவே 6. வெறுக்கில்

*(தான தருமங்கள்)*

### ஏகதாளம்

**12.** தனயன்இல் லார்இரு தனயன்பெற் றெடுக்கவே
மனதுசந் தோஷமிவ் வளவென்னப் போமோ

பிள்ளைபெண் ஏனரட்டைப் பிள்ளையுற் பவிக்கவே
கள்ளமில் லானும்சர்க் கரைவழங்கி னானே

நவதானி யமும்பொன்னும் நல்லஆ டைகளும்
சிவவேதி யருக்குச் [1]செலவுசெய் தானே

தேவர்க்கெல் லாம்அபி ஷேகநை வேத்தியம்
யாவர்க்கும் விருந்துசந் தோஷிக்கப் பகர்ந்தான்

[2]இரட்டைப்பிள் ளைகளுக்கு [3]நேர்த்தியறைப் புதுக்கித்
தொட்டிலில் வளர்த்தியே சுகமுடன் இருந்தான்.

குழந்தைப்பேறு இல்லாதிருந்த அவர்கள் இரட்டைக் குழந்தைகளைப் பெற்றெடுத்தபோது அடைந்த மகிழ்ச்சியை அளவிட்டுச் சொல்லமுடியாது. சர்க்கரை முதலான இனிப்பு வழங்கி மகிழ்ந்தார்கள். சிவனடியார்களாகிய அந்தணர்களுக்கு நவதானியங்களும் பொன்னும் மணியும் ஆடைகளும் வழங்கி மகிழ்ந்தார்கள். தேவாலயங்களில் அபிஷேக நைவேத்தியங்களை நடத்தி மக்களெல்லாம் மகிழுமாறு விருந்தளித்து மகிழ்ந்தார்கள். புதியதோர் அறையை அழகுபடுத்தி இரண்டு குழந்தைகளுக்கும் தொட்டிலிட்டுச் சீராட்டி வந்தார்கள்.

தனயன் - மகன், இருதனயன் என்றது இரண்டு குழந்தைகளை (ஆணும் பெண்ணுமாகிய குழந்தைகள்) ரட்டை - இரட்டை, இரண்டு; ஒரு பிரசவத்தில் பிறந்த இரண்டு குழந்தைகள். உற்பவித்தல் - பிறத்தல். நவதானியம் - உளுந்து, எள்ளு, கடலை, கொள்ளு, சாமை, தினை, துவரை, நெல், பயறு என்னும் ஒன்பது வகை தானியங்கள். சிவவேதியர் - சைவநெறியாகும் அந்தணர். தேவர் - உயர்ந்தோர், சுரர்; ஜென்ம தேவர், கருமதேவர் என்னும் இருதிறத்தவர்; அக்கினி, இந்திரன், சூரியன், யமன், வருணன், வாயு ஆகியோர் ஜென்ம தேவர். புண்ணியச் செயல்களால் சுவர்க்கம் புகுந்து தேவகதியடைந்த மனிதர்கள் கர்ம தேவர் ஆவர். அபிஷேகம் - முழுக்கு, திருமஞ்சனமாட்டுதல். நைவேத்தியம் - தேவர்க்குப் படைக்கும் காணிக்கை. பகர்தல் - கூறுதல் (இங்கே வழங்குதல்) நேர்த்தி - திருத்தமான.

***பாட வேறுபாடு-*** **1.** நற்சிலவு

***சுவடிச்சொல்-*** **2.** றெட்டை **3.** நேத்தியறை

***(குழந்தைகள் பிசாசு உருவெடுத்தல்)***

***சம்பை***

**13.** பிறரெல்லாம் இரட்டைப் பிள்ளை
பெற்றாரல் லோயிவர்க்குக்
குறைகளினி இல்லை யென்று
[1]கொண்டாடி யிருந்தார்

பூதமா கியகுழந்தை பொழுதுபோய் இரவில்நடுப்
பாதிநே ரங்களில் பசாசு உருவமாகித்

தொட்டில்விட் டிழிந்துபோய் சுடுகாட்டி லேவிறகுக்
கட்டையுடன் வேம்பிணத்தைக் கண்டு பசியாறி

ஆட்டுமந் தையிலோடி ஆயர்அறி யாமல்நூறு
ஆட்டைஆவ தானமாய்ப் போட்டுக்கொண்டு வாயில்

ஊரெல்லாம் பானைசட்டி யுருட்டியவ ரவர்வீட்டுச்
சோறுகஞ்சி கூழெல்லாம் சூறைகொண்டு தணிந்து

மட்டமாய்ச் சிறுகுழந்தை [2]வடிவாகி மனைசேர்ந்து
[3]தொட்டிலிலெப் போதும்போல் தூங்கிப் [4]படுத்திடுமே

இரட்டைக்குழந்தையைப் பெற்ற இவர்களுக்கு இனிக் குறை எதுவும் இல்லையென்று கூறி மக்கள் பாராட்டினார்கள். பேய்வடிவாக இருந்து பிறந்த குழந்தைகள் நடு இரவில் பிசாசு வடிவம் எடுத்தனர். தொட்டிலைவிட்டு இறங்கிச் சுடுகாட்டுக்குச் சென்றனர். சுடலையில் வேகும் பிணத்தைத் தின்று பசியாறினர். மீண்டும் அருகிலிருந்த ஆட்டு மந்தைக்குள் புகுந்து ஆயர் அறியாமல் மிகத் திறமையாக நூறு ஆடுகளைக் கொன்று தின்றனர். அவற்றோடு ஊரில் நுழைந்து பல வீடுகளில் பானை, சட்டிகளை உருட்டிச் சோறு, கஞ்சி, கூழ் முதலான உணவுகளையெல்லாம் திருடித்தின்றனர். பிறகு பழையபடி சிறுகுழந்தை வடிவமாகித் தொட்டிலில் எப்போதும் போலப் படுத்துத் தூங்கலாயினர்.

கொண்டாடுதல் - பாராட்டுதல், புகழ்தல். பசாசு - பேய் உரு. இழிந்து - இறங்கி, வேம்பிணம் - வேகும்பிணம், எரியும் பிணம். பசியாறுதல் - புசித்துப்பசி நீக்குதல், ஆயர் - ஆடுமாடு மேய்ப்போர். அவதானம் - சாமர்த்தியம், திறமை. கூழ் - கேழ்வரகு, மா உணவு. சூறை கொண்டு - கொள்ளையடித்து, திருடி. தணிதல் - ஆறுதல், பசியாறுதல். மனை - வீடு

***பாடவேறுபாடு-*** 1. கொண்டாட விருந்தார் 4. யெழுந்திடுமே.

***சுவடிச்சொல்-*** 2. வடிவாகியந்தமனை 3. தொட்டிலைப்போதும்

**(மக்கள் முறையீடு)**

## திரிபுடை

**14.** இந்தப் படிதினம் பொசிக்கவே - ஆட்டு
இடையர் ஊரில்வரும் திருடர்கள்

வந்து கொள்ளையிட் டாரென்றே - வெகு
சந்தையாச்சு ஆட்டு மந்தையில்
[1] நாயனார் அந்தஅடிபின் தொடரவே - ஆலங்
காட்டினுக் காட்டி யன்மனைக்
காய்ச்சித் [2]தடியாயடை யக்கண்டார்
கண்டபோதவர்கள் அஞ்சியே - நிற்கக்
கண்டு புரிசைக்கிழானி தேதென
அண்டர் கூட்டமெல் லாருந்தொம்பரங்
கொண்டு புகல்வார் அப்பனே!
[3]உங்கள் வீட்டில் குழந்தைகள் - உற்பவிக்க
எங்களாட்டு மந்தையில் கும்பல் போகுதவ்
வடியிங்கே யென்று செப்பினாரே
கேட்டுப் புரிசைக்கிழான் மகபதி
கேவலந் [4]துயராகி இரவுதன்
வீட்டிற் குழந்தையைப் பார்த்து
இருந்தனன் நாட்டங் களிலே.
பாதி இராத்திரி யானபோது - அந்தப்
பாலர் தொட்டில்விட் [5]டிறங்கிப்போய் - பெரும்
பூத மாகி உலாவிவரக்
கண்ட போது தளர்ந்தான்

குழந்தைகள் நாள்தோறும் நள்ளிரவில் ஆடுகள் முதலியவற்றைத் தின்று வந்த செய்தியை அறியாமல் ஆயர் முதலானோர் ஊரில் திருடர்கள் வந்து கொள்ளையிட்டுச் செல்லுகிறார்கள், என்று பேசத் தொடங்கினார்கள். ஒருநாள் பிசாசுவடிவில் வந்த குழந்தைகள் நடந்து சென்ற அடிச்சுவட்டை ஆட்டிடையர்கள் பின்பற்றிச் சென்றார்கள். அச்சுவடு புரிசைக்கிழானின் வீட்டைநோக்கிச் சென்றதை அறிந்தார்கள். உண்மையைக் கூறமுடியாமல் அஞ்சி நின்றார்கள். அவர்களைக் கண்ட கிழான் செய்தியாது எனக்கேட்க, எல்லோரும் ஒன்று சேர்ந்து, ஐயனே!

தங்கள் வீட்டில் பிறந்துள்ள குழந்தைகளால், எங்கள் ஆட்டுமந்தையில் நாளுக்கு நாள் ஆடுகள் குறைகின்றன. அவர்கள் சென்று வந்த அடிச்சுவட்டை இதோ பாருங்கள் என்று கூறினார்கள்.

புரிசைக்கிழான் அதைக்கேட்டு மிகவும் அவமானமும், துயரமும் அடைந்து அன்றைய இரவு தன் குழந்தைகளைக் கண்காணிக்கத் தொடங்கினான். நள்ளிரவு ஆனபோது குழந்தைகள் இருவரும் தொட்டிலைவிட்டு இறங்கிச் சென்று பிசாசு வடிவமாகிச் சுற்றி வந்ததைக் கண்டு மிகவும் மனம் தளர்ந்தான்.

இந்தப்படி - இவ்வாறு; இது நள்ளிரவில் பசாசு வடிவில் பிணம் முதலியவற்றைத் தின்று விடியலில் குழந்தையாகித் தொட்டிலில் படுத்து உறங்கும் முறையைச் சுட்டியது. பொசிக்க - புசிக்க. சந்தை - சந்தேகம் (வட்டார வழக்கு) நாயனார் - எசமானர், ஆட்டுமந்தையின் சொந்தக்காரர். அந்தஅடி - பசாசு வடிவில் வந்த குழந்தைகள் நடந்து சென்ற அடிச்சுவடு. ஆலங்காடு - திருவாலங்காடு. ஆட்டியன் - ஆட்டுவோன், தலைவன். (ஆட்டி - தலைவி). மனை-வீடு. சித்தடியாய் - சிற்றடியாய், சிறிய பாதங்களின் சுவடுகளாக. அடைய - சென்று முடிய. அஞ்சி - பயந்து (தன் வீட்டில் முன்வந்து அஞ்சி நிற்கும் ஆட்டுமந்தையின் சொந்தக்காரரைக்) கண்டு புரிசைக்கிழான் இது ஏது என்று கேட்க. அண்டர் - இடையர். தொம்பரங் கொண்டு - ஒன்றாய்ச் சேர்ந்து. கும்பல்போகுது - மந்தை மந்தையாய்த் திருடு போகுது. அவ்வடி - அந்த அடிச்சுவடு. மந்தை - ஆடுமாடுகளின் கூட்டம். மகபதி - இந்திரன், இங்கே புரிசைக்கிழானாகிய தலைவன். கேவலம் - மிகுந்த. நாட்டங்களில் - நோக்கத்தோடு, கண்களால். பாலர் - குழந்தைகள். தளர்தல் - வருத்தமடைந்து சோர்தல்.

**பாடவேறுபாடு** - 1. யாரெல்லாம் 2. தடையாய் 4. துயராயன்றிரவு

**சுவடிச்சொல்** - 3. ஓங்கள் 5. இறங்கியே

**(குழந்தைகளைக் கோயிலில் விடுதல்)**

## திபதை

**15.** புரிசைக் கிழான்உள்ளம் போதக் கலங்கிப்
பரம சிவா என்ன பாலரைத் தந்தீர்!

அன்ன தானம் செய்தும் ஆடைகள் கொடுத்தும்
சொர்ண தானம் செய்து துடவைகள் அமைத்தும்

குருபூசை செய்தும் கோதானம் செய்தும்
எரிவெய்யி லுக்குநீர் எடுத்துவார்ப் பித்தும்

தாழ்ந்த குடிகளைத் தாங்கிரட் சித்தும்
போந்தவேதி யர்க்குப் பூதானங் கொடுத்தும்



புரிசைக்கிழான் பேய்களான தன் பிள்ளைகளை வேண்டாமென்று விட்ட
ஆலங்காட்டீசர் திருக்கோயில் வாயில்



வண்டார் குழலி திருக்கோயில்

கன்னிகா தானம் கனிவுடன் செய்தும்
பின்னையும் அநேகம் பிறதர்மம் செய்தும்

அதுவுமல் லாமல் தவமது புரிந்தும்
மதியிலாப் பேய்களை மக்களாய்க் கொடுத்தீர்!

பிணந்தின்னும் பூதத்தைப் பிள்யைாய்க் கொடுத்தீர்!
தணிந்ததிப் போபிள்ளை தன்னாசை யென்று

தொட்டிலிற் பிள்ளையத் தொட்டிலோ டெடுத்துக்
கட்டளை செய்தசங் கரன்கோயில் [1]வாசற்

படிக்கெதி ரானவெம் படிதனில் வைத்துச்
சடைத்தலை யோய்நல்ல சந்ததி யளித்தீர்!

ஆண்டவ னேநீர் அளித்திடும் பிள்ளை
வேண்டா மெனச் சொல்லி விட்டுவந் தனனே.

உள்ளம் கலங்கிய புரிசைக் கிழான் பரமசிவனே! அன்னதானம் செய்தேன்; ஆடைகள் வழங்கினேன்; சோமபானம் செய்தேன்; பூஞ்சோலைகள் அமைத்தேன்; குருபூசை செய்தேன்; கோதானம் செய்தேன்; வெயில் காலத்தில் தண்ணீர்ப் பந்தலுக்கு ஏற்பாடுகள் செய்தேன்; ஏழை மக்களை ஆதரித்தேன்; அந்தணர்களுக்குப் பூதானம் செய்தேன்; கன்னிகா தானம் செய்தேன். இப்படிப் பலதருமங்களைச் செய்ததோடு அல்லாமல், தங்களைக் குறித்துப் பெரும் தவமும் செய்தேன். ஆனால் தாங்களோ அறிவில்லாத பேய்களை, பிணந்தின்னும் பூதங்களை எங்களுக்கு மக்களாய்க் கொடுத்தருளினீர். குழந்தை ஆசையே எங்களுக்கு விட்டுப் போயிற்று என்று கூறியவாறே தொட்டிலில் இருந்த குழந்தைகளைத் தொட்டிலோடு எடுத்துச் சென்று குழந்தைச் செல்வத்தை அளித்த சிவபெருமானின் கோயில் வாசற்படியில் வைத்துவிட்டான். சடாமுடியைத் தரித்த இறைவனே! நீர் அளித்த இந்தக் குழந்தைகள் எனக்கு வேண்டாம் எனச் சொல்லிவிட்டுத் திரும்பினான்.

போதம் - அறிவு; இங்குப் போத எனக்கொண்டு மிகுதியாக எனலாம். சொர்ணம் - பொன். துடவை - பூஞ்சோலை. கோ - பசு. எரிவெய்யில் - தீயைப் போலக் காயும் வெய்யில். எரி - தீ. வார்ப்பித்தல் - வார்க்க (கொடுக்க) ஏற்பாடு செய்தல் (வார்த்தல் - தன்வினை; வார்ப்பித்தல் - பிறவினை). தாங்குதல் - ஆதரித்தல். ரட்சித்தல் - பாதுகாத்தல், காப்பாற்றுதல். போந்த வேதியர் - (ஆதரிப்பாரின்றி, வெளியிலிருந்து) வந்த

அந்தணர்; வேதம் வல்லோராதலின் வேதியர் எனப்பெற்றனர். பூ - பூமி, நிலம். கன்னிகை - திருமணமாகாதபெண். கனிவு - அன்பு. மணமாகாத அந்தணக் கன்னியருக்குத் திருமணம் செய்துவைத்தல். பின்னை - மேலும். தவம் - தவசு. மதி - அறிவு. இலா - இல்லாத. தணிதல் - ஆறுதல், நீங்குதல். கட்டளை செய்த - அருள்செய்த, கொடுத்து உதவிய. சங்கரன் - சிவன் (சங்கரம் - போர்) வெம்படி - கொடுமை வாய்ந்த படி. சடைத்தலை யோய் - சடாமுடியுடையவனே; விளி. சந்ததி - பிள்ளை. நல்ல சந்ததி - இகழ்ச்சிக் குறிப்பு.

*சுவடிச்சொல்* - 1. வாசப்படிக்

## வசனம்

புரிசைக்கிழான் முதலியார் பிள்ளைகளை விட்டுப்போனபின்பு அந்தப் பிள்ளையும் பெண்ணும் தங்கள் நிசரூபம் எடுத்து மனது சந்தோஷத்தை யடைந்து, மாபாலன் வீட்டிலிருந்து திருடி யுண்டு திரியாமல் ஓட்டிவிட்டாலும் பழம் உள்ள காட்டிலே ஓட்டிவிட்டான் என்று நீலி, நீலனுக்குச் சொல்ல இனித்தான் சுகத்திலே அடைந்தோமென்று அந்த வேப்பமரத்திலே [1] வீற்றிருந்தனர். (3)

*வசனம்:-* நிசரூபம் - உண்மையான வடிவம். மாபாலன் என்றது புரிசைக் கிழானை. சுகத்திலே அடைந்தோம் - இன்பம் அடைந்தோம்; வட்டார வழக்குத் தொடர்.

*சுவடிச்சொல்* - வீத்திருந்தனர்.

*(நீலன் - பேய்களின் தலைவன்)*

## சம்பை

16. நீலன் இந்த ஓலைகண்ட நேரமிங்கு வருவதென்று
காலனென்னும் ஒருபேயைக் கடிந்தாவிட் டானே

அன்றலகை யெலாமந்த அலகைசொல்ல வேகேட்டு
வென்றியுள்ள பேய்க்கூட்டம் விரைவுடன்வந் தாரே

குட்டப்பேய் செவிட்டுப்பேய் [1]குருட்டுப்பேய் அறிவில்லாக்
கட்டைப்பேய் முறட்டுப்பேய் [2] கைகட்டிவந் தாரே

வலுவான பேய்பேச வாயில்லாப் பேய்பெரிய
மலைபோலும் நீலனடி வந்துதொழு தாரே.

குழந்தைகள் இருவரும் தங்கள் சுயவடிவத்தையெடுத்து அருகிலேயிருந்த வேப்பமரத்திலே வீற்றிருக்கத் தொடங்கினார்கள். ஒருநாள் 'இந்த ஓலை கண்டவுடனே வரவேண்டும்' என்று காலன் என்னும் ஒரு பேய்க்கு நீலன் ஓலை அனுப்பினான்.

ஓலையின் செய்தியைக் காலன் சொல்ல மற்றப்பேய்களெல்லாம் கேட்டுப் புறப்படத் தொடங்கின. குட்டப்பேய், செவிட்டுப்பேய், குருட்டுப்பேய், அறிவில்லாத கட்டைப்பேய், முரட்டுப்பேய் ஆகிய அனைத்துப் பேய்களும், விரைந்து வந்து நீலனது பாதங்களைத் தொழுது கைகட்டி நின்றன. திறமையுடைய பேய் பேச, வாயில்லாப் பேய்கள் மலைபோலத் தொழுது நின்றன.

கடிந்தா விட்டான் - (கடிதாக) விரைவாக என்னும் பொருளையுடையதாய் இருக்கவேண்டும். அலகை - பேய். குட்டபேய் - குட்டைப்பேய் - குள்ளமான பேய். மலைபோலும் நீலன் என்றது நீலனின் உருவத்திற்கு உவமை கூறப்பட்டது. அடி - பாதம்

**பாட வேறுபாடு** - 2. கை கட்டி வரவே

**சுவடிச் சொல்** - 1. குருட்டுப் பேய்.

**(நீலி - பேய்களின் தலைவி)**

## திரிபுடை

17. பேய்க்கும் பானது போற்ற நீலனும்
பெரிய துரையாய் [1]வீற்றி ருந்திடும்

பாக்கியவான் தங்கை நீலி தானொரு
வாக்கியம் புகல்வாள்

நீயும் நானும்ஒண் ணாகியே ஒரு
நிலத்தில் [2]இருக்கஒண் ணா தண்ணே!

கண்ட பேய்கள்எந் தனைஉனக்குப் பெண்
டென்று பேசிக்கொள்ளும் [3]ஆகையால்

திருச்செங் காட்டினில் ஏகி யேநான்
இருப்பேன் என்று சொல்லி வாகையாய்ப்

பெட்டைப் பேய்கள்சூழ்ந் திடத்தோகை போனாள்
போன நீலிசெங் காட்டிலே - பெட்டைப்

பேய்க்கெ லாந்துரை யாகியே - வெகு
மானமா யிருந்தாள் பசாசெனும் சேனைசூழ

[4]காட்டில் புகழ்திரு வாலங் [5]காட்டினில்
கட்ட மாகிய பேய்க்கெ லாம்துரை
[6] யாட்டியின் நகரினில் நீலன் ஒருநாள்
வேட்டை யாடப் போனான்.

பேய்களெல்லாம் ஒன்றுகூடித் தொழுது புகழ நீலன் அக் கூட்டத்தின் தலைவனாகத் துரை போல வீற்றிருக்கும் சிறப்பைப் பெற்றான். அப்போது நீலி தன் தமையனைப் பார்த்து, அண்ணே! நீயும் நானும் ஒன்றாக ஒரே இடத்தில் தங்கியிருப்பது கூடாது; நம்மைக் காணும் பேய்கள் என்னை உன்மனைவி என்று பேசிக்கொள்ளும். ஆகையால் நான் சென்று திருச்செங்காட்டில் தங்கியிருக்கிறேன் என்று கூறிப் பெண்பேய்கள் உடன் சூழ்ந்துவரத் திருவாலங்காட்டை விட்டுச் சென்றாள். இவ்வாறு சென்ற நீலி திருச்செங்காடு அடைந்து பெண் பிசாசுகளாகிய சேனை சூழப் பெண் பேய்க்கெல்லாம் துரைசாணி அம்மையாகி மிக மானத்தோடு தங்கியிருந்தாள். அப்பொழுது ஒருநாள் நீலன் காட்டில் வேட்டையாடப் புறப்பட்டுத் திருவாலங்காட்டை விட்டு நீங்கித் தன் தங்கையாகிய பெண்பேய்களின் தலைவி துரைசாணியம்மையார் இருக்கும் நகருக்குப் போனான்.

கும்பு - கூட்டம். பெரியதுரை - தலைவன். பாக்கியவான் - பெருமைபெற்றவன், நீலன், புகல்வாள் - சொல்லுவாள். ஒண்ணாகி - ஒன்றாகி என்பதன் பேச்சு வடிவம்; சேர்ந்து இருத்தல். ஒண்ணாது - தகாது, கூடாது; ஒண்ணும் என்பதன் எதிர்மறைச் சொல். பெண்டு - மனைவி. வாகை - வெற்றி; தனித்துப் பிரிதலைச் சுட்டியது. பெட்டை - பெண்; பறவை, மிருகம் ஆகியவற்றின் பெண் இனத்தைக் குறிப்பது; இழிவு கருதிப் பேய்களைச் சுட்டியது. தோகை. பெண் (நீலி), மானமாய் - பெருமையாய். சேனை - படை. துரை யாட்டி - தலைவி. துரை என்பதன் பெண்பால் துரை × துரைசாணி என்பது வழக்கு

**பாட வேறுபாடு** - 1. வீற்றிருந்த பின் 2. இருக்க ஒன்றாதன்றே 3. ஆகையால் கடும் 4. நாட்டில் 5. காட்டினிலே 6. யாட்டியானகரிநீலன்

**சுவடிச்சொல்** - 1. வீத்திருந்திடும்.

### (நீலன் தங்கிய வேப்பமரம் வெட்டப்படுதல்)

### சம்பை

18. விவரமுள்ள பழையனூர் வேளாளர் முதலிமார்
கபடமறி யாரங்கே [1]கலப்படைக்கு வந்தார்

கவ்வைநேர் போற காராளர் வேப்பமரம்
செவ்வையாய் இருக்குதென்று சிவதலத்துக் [2]கேற்ற
கொடிக்கம்பத்துக் காகுமென்று கோடாலி யால்தறித்து
எடுத்துவந்து [3]பழையனூர் ஈசரகம் சேர்த்தார்

நீலனுந்தன் சேனைபுடைசூழவே வேட்டைதிரு
வாலவனம் போய்ச்சாயங் காலமதின் வந்தான்

நிம்பமரம் தறிப்புண்ட நிலத்தில்வந்து நீலனந்த
நிம்பையரு கிருந்தபேய்க் கும்பதனை நோக்கிக்

[4]கோவமாய் நம்பதியைக் குலைத்தபேர் யாரெனவே
காவலாய் அங்கிருந்த பேய்களென்ன [5] சொல்லும்

பழையனூ, ரார்வந்து பார்த்திருந்த வேம்பைத்தறித்து
அழகுபுசத் தேதாங்கித் தழுவிக்கொண்டு போனார்.

நீலன் வேட்டையாடச் சென்றிருந்தபோது பழையனூரைச் சேர்ந்த வேளாளர்களாகிய முதலிமார் பலர் சிறிதும் சூதுவாது இல்லாமல் கலப்பைக்கு மரம் வெட்டத் திருவாலங்காட்டுக்குவந்தார்கள். நீலன் தங்கியிருந்த வேப்பமரத்தைக் கண்டார்கள். அது மிகவும் நேராக உயர்ந்து வளர்ந்திருப்பதைக் கண்டு இது நமது சிவாலயத்துக்குரிய கொடிக்கம்பத்திற்குப் பயன்படும் என்று எண்ணியவர்களாய் அம்மரத்தைக் கோடாரியால் வெட்டி எடுத்துவந்து பழையனூர் கோயிலில் சேர்த்தார்கள். வேட்டைக்குச் சென்றிருந்த நீலன் தன் சேனைகளாகிய பேய்க்கூட்டத்தோடு மாலை நேரத்தில் தன் இருப்பிடத்திற்கு வந்தான். தான்தங்கியிருந்த வேப்பமரம் வெட்டப்பட்டுவிட்டிருந்ததைப் பார்த்தான். உடனே மிகவும் கோபம் கொண்டவனாய் அங்கிருந்த பேய்க் கூட்டத்தைப்



கொடிக்கம்பத்துக்காக வேம்பு வெட்டப்பட்ட பழையனூர் சிவாலயம்

பார்த்து நாம் குடியிருந்த இடத்தை அழித்தவர் யார் என்று கேட்டான். அங்கிருந்த பேய்கள், பழையனூர் வேளாளர் வந்து நமது வேப்பமரத்தை வெட்டித் தங்கள் தோளின் மீது வைத்துக் தூக்கிக் கொண்டு போய்விட்டார்கள் என்று கூறின.

வேளாளர் - ஈகையாளர்; பயிர் செய்து உணவு அளிப்பதால் உழுது பயிர் செய்வோரை வேளாளர் என்பது மரபாயிற்று. முதலிமார் - ஒரு சாதியினரைக் குறித்தது. கபடம் - வஞ்சகம், தீயமனம். கலப்படை - கலப்பைப்படை, ஏர் உழும் கலப்பையாகிய ஆயுதம். படை - ஆயுதம். கவ்வை - கவை - கிளை. காராளர் - வேளாளர் (கார் - கார் நெல், நீர்மேகம்). செவ்வையாய் - ஒழுங்காக. சிவதலம் - சிவாலயம். கொடிக்கம்பம் - கொடி ஏற்றும் கம்பம் (கொடி - அட்டமங்கலங்களில் ஒன்று; அவை இணைக்கயல், கண்ணாடி, கவரி, கொடி, தோட்டி, நிறைகுடம், முரசு, விளக்கு என்பன).

ஈசரகம் - ஈசர் + அகம் - இறைவனின் திருக்கோயில். புடைசூழ - இருபுறமும் சூழ்ந்துவர. திருவாலவனம் - திருவலங்காடு. சாயங்காலம் - மாலைநேரம்; (சூரியன் சாயும் காலம்) நிம்பமரம் - வேப்பமரம்; நிம்பம் - வேம்பு. நிம்பை - இலக்குமி; தறிப்புண்ட - தறிக்கப்பட்ட - வெட்டப்பட்ட. தாங்கள் தங்குமிடமாகிய வேப்பமரத்தை இலக்குமியாகக் கொள்ளுகிறான் நீலன். பதி - ஊர். குலைத்த பேர் - அழித்தவர்கள். புசத்தே - தோளில்; புசம் - தோள்.

***பாடவேறுபாடு*** - 1. கால்ப்படைக்குப் போனார் 3. பழையனூர்சரகம் 4. கோலமாய் 5. சொல்வார்

***சுவடிச்சொல்*** - 2. கேத்த

***(நீலன் சினமடைதல்)***

### ஏகதாளம்

19. சொல்லவே [1]நீலனும் சுருக்கெட் டெரிபறந்து
நல்லது அவர்களைக் கொல்லுவேன் என்றான்

நெருப்புப் பொறிபறக்க நீலனும் பழசையில்
இருப்போரெல் லோரையு முறிப்பேனென் றானே

[2]நானிருந் திடும் நிழல் தான்குலைத் தவருடல்
[3]ஊறும் அவர்இரத்த பானஞ்செய் வேனே
தன்னினத் தார்க்கந்தக் குலத்தில் மனிதர்களைக்
[4]கொன்றுதின் பீரென்று [5]கொடுத்தனன் செலவு

பேய்கள் கூறிய செய்தியைக்கேட்ட நீலன் கண்களில் தீப்பொறி பறக்கச் சுருக்கென எழுந்தான். மரத்தை வெட்டிச் சென்றவர்களை மட்டுமல்லாது பழையனூரில் இருக்கும் எல்லோரையும் கொன்று குவிப்பேன் என்று கூறினான். மேலும் நான் தங்கி இருக்கும் இந்த மரத்தை அழித்த அவர்களுடைய உடலில் ஓடும் இரத்தத்தைக் குடிப்பேன் என்று வெகுண்டவனாய் தன் இனத்தைச் சேர்ந்த பேய்க் கூட்டத்தை நோக்கி, பழையனூர் வேளாளர் குலத்திலுள்ள மக்களையெல்லாம் கொன்று தின்னுங்கள் என்று கட்டளை இட்டான்.

சுருக்கெட்டு - சுருக்காக, விரைவாக. எரிபறந்து - முகத்தில் தீப்பொறி பறக்க (கோவமாய்). முறிப்பேன் - அழிப்பேன். உடல் ஊறும் - உடம்பில் ஓடும். ஊறுதல் -

*ஊறிப் பெருகுதல். பானம் செய்தல் - குடித்தல். தன் இனத்தார் - பேய்க் கூட்டத்தார். அந்தக்குலம் - பழையனூர் வேளாளர் குலம். செலவு - கட்டளை.*

***பாட வேறுபாடு*** - 3. *யானும்*

***சுவடிச்சொல்*** - 1. *னீலனும்* 2. *னானிருந்* 3. *ஊரும்* 4.*கொண்ணு* 5. *குடுத்தனன் சிலவு*

***(நீலன் அந்தணனைத் தாக்குதல்)***

## திபதை

20. *நீலனும் பழசையில் [1]நிலத்தவர் தம்மைச்*
*சோலிசெய் திடமனந் துணிந்தே இருக்கில்*

*ஆலவ னேசர்க்கு அந்தணன் பூசை*
*காலமே செய்திடக் [2]கங்கைநன் மலரும்*

*[3]அடிசில்ப தார்த்தமும் அவன்கொண்டு வாற*
*இடவயில் னீலன் எதிராகக் கண்டு*

*தவடைமேல் எத்தியே தான்சூறை கொண்டான்*
*செவிடுபட் டங்கனே திருஷ்டி கலங்கி*

***(அந்தணன் முறையீடு)***

*அந்தணன் [4]பறிகொடுத்து அவனுடல் [5]நடுங்கி*
*பொந்திவிட் டாவிஅப் புறம்போய்த் திரும்பி*

*அபையமிட் டுத்திரு ஆல வனேசன்*
*சபைதனில் வந்தெங்கள் சங்கரா சிவனே*

*வருமேழை பங்கனே மலைவில்லி யானே*
*[6]ஒருநாளு மில்லா உபாதியுண் டாச்சு*

*தேவரீர்க்குப் பூசைத் திரவியம் [7]கொணர்ந்தேன்*
*பாவிநீலன் கண்டு பறித்தான்எண் ணாமல்*

*சங்கரா உம்மையுந் தான்மதி யாமல்*
*பங்கமாய் இங்கிசை பண்ணினான் உமக்குக்*

கண்ணில்லை யோவந்து காக்கவொண் ணாதோ
இன்றிந்த நீலனை இறப்பிக் கொணாதோ

(ஈசன் குண்டோதரனை ஏவுதல்)

என்று புலம்பவே இவனையஞ் சாதே
எனஉரைத் தீசுவரன் ஏவலாள் ஆன

குண்டோ தரன்எனும் [8]கோபியை யழைத்துத்
தெண்டா யுதமும் திகிரியுங் கொடுத்து

நெற்றிக்கு நீறிட்டு நீலனை வாளால்
குத்தியே கொல்என்று கூறினார் சிவனும்

குண்டோ தரனப்போ கொக்கரித் தெழுந்து
தெண்டா யுதந்தனைச் செங்கையி லெடுத்து

தழைத்தால விருட்சந் தனையொன்று பிடுங்கிச்
[9]சுழற்றிவிட் டான்பரஞ் சோதியான் தூதன்

தருவரவே கண்டு [10]தாக்குள்ள நீலன்
எறிபொறி [11]யென்ன எதிர்த்துவந் தானே

பழையனூர் மக்களைப் பழிவாங்க வேண்டுமென்று தன்னைத் தயார் செய்து கொண்டு இருந்தான் நீலன். அந்த நேரத்தில் திருவாலங்காட்டு இறைவனுக்குப் பூசை செய்யும் அந்தணன் காலை பூசைக்காகக் கங்கை நீர், மணமிக்க மலர், உணவு முதலான நைவேத்தியப் பொருள்கள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு வருவதைக் கண்டான். உடனே எதிரில் சென்று அந்தணன் தவடை மீது பலமாகக் குத்தி, அவனிடமிருந்த பூசைப் பொருள்களையெல்லாம் பிடுங்கிக் கொண்டான். நீலனால் அடிபட்ட அந்தணன் காதுகள் செவிடாகி அடைக்கக் கண்கள் கலங்கிப் பார்வை மங்க உயிர் போகும் நிலையை அடைந்தான். சிறிது நேரத்தில் மயக்கம் தெளிந்து இறைவன் திருக்கோயிலையடைந்து, சங்கரா! சிவபெருமானே! ஏழை பங்காளா! மலைவில்லியானே! ஒருநாளுமில்லாத பெருந்துன்பம் இன்று எனக்கு ஏற்பட்டுவிட்டதே!

தங்களுக்குப் பூசைப் பொருள்களைக் கொண்டு வந்தேன். இறைவனே! தங்களையும் பொருட்படுத்தாமல் பாவி நீலன் அப்பொருள்களையெல்லாம்

பிடுங்கிக்கொண்டு தங்களுக்கும் இழிவை ஏற்படுத்திவிட்டான். தாங்கள் இதை அறிந்தும் சும்மா இருப்பது சரியா? என்னைக் காப்பாற்றக் கூடாதா? நீலனை இன்றே அழிக்கக் கூடாதா என்று பலவாறு புலம்பினான். இறைவன், அந்தணனை நோக்கி அஞ்சாதே! என்று கூறி அபயமளித்தார். உடனே தனது பூத கணங்களுள் ஒருவனான குண்டோதரன் என்னும் மிகுந்த கோபமுடைய ஒருவனை அழைத்தார். அவனிடம் தண்டாயுதம், சக்கரம் முதலான ஆயுதங்களைக் கொடுத்தார். நெற்றியில் திருநீறு இட்டு வாழ்த்தினார். உடனே சென்று நீலனை வாளால் குத்திக் கொன்று வருவாயாக என்று கட்டளையிட்டார்.

உடனே குண்டோதரன் பெருங்கர்ச்சனை செய்து முழக்கமிட்டு எழுந்தான். கையில் தண்டாயுதத்தை எடுத்துக்கொண்டு புறப்பட்டான். நன்றாகத் தழைத்து வளர்ந்திருந்த ஒரு ஆலமரத்தைப் பிடுங்கி நீலனை நோக்கிச் சுழற்றி விட்டெறிந்தான். பரமசிவனின் தூதன் விட்டெறிந்த ஆலமரம் தன்னை நோக்கி வருவதைக் கண்ட நீலன் வீசியெறியப்பட்ட ஒரு இயந்திரத்தைப் போலக் குண்டோதரனை நோக்கிப் புறப்பட்டான்.

பழசை - பழையனூர். நிலத்தவர் - அவ்வூரில் வாழ்வோர்; அங்கு நிலையாகக் குடியிருப்போர் என்னும் பொருளில் நிலைத்தவர் என்ற பாட வேறுபாடு காணப்படுகிறது. சோலி - தொல்லை, தொந்தரவு. இருக்கில் - இருக்க என்னும் வினை எச்சத் தொடர் இருக்கில் என வழக்குச் சொல்லாகியுள்ளது. ஆலவனேசர் - ஆலவனம்+ ஈசர் - ஆலவன + ஈசர் - ஆலவனேசர்; வன + ஈசர் - வனவீசர் என உடம்படுமெய் பெறாமல், வனேசர் என வடமொழிப் புணர்ச்சியாயிற்று. ஆலவனம் - (திரு) ஆலங்காடு. கங்கை - தூய நீர்; கங்கை நன்மலரும் அடிசில் பதார்த்தமும் என்ற உம்மைகளால் கங்கை நன்மலர் எனக்கொண்டு நீரில் மலரும் தாமரை எனினும் பொருந்தும். கங்கையும் நன்மலரும்; அடிசிலும் பதார்த்தமும் எனக் கொள்ளுவதும் ஆகும் (பா.25 காண்). அடிசில் - உணவு, சோறு. வாற - வருகிற என்பதன் மரூஉ; வழக்குநடை. இடவயில் - இடவையில் - வழியில்; இடவை - வழி. எத்துதல் - அடித்தல், குத்துதல். சூறை - கொள்ளை. அங்ஙன் - அவ்விடம்; இதையே அங்கன் எனக்கொண்டு, அங்கனே என்று எழுதினர். திருஷ்டி - கண், பார்வை. பறிகொடுத்தல் - களவு கொடுத்தல், இழத்தல். ஆவி - உயிர். பொந்தி - உடல். அபையமிடுதல் - முறையிடுதல், அடைக்கலம் புகுதல். ஆலவனேசன் சபை - இறைவனது திருக்கோயில். சங்கரா! - திரிபுரங்களை எரித்தவனே! நஞ்சுண்ட கண்டனாய் விளங்குபவனே! உருத்திர மூர்த்தியே என்னும் பொருள்களை உடைய பெயர். சங்கரன் என்பது சங்கரம் - நஞ்சு, கலப்பு; சங்காரம் - அழித்தல், சிவன் - தாருகாவனத்து இருடியர் செருக்குற்று, மாரண வேள்வி செய்து, தம்மீது ஏவிய உடுக்கை, சூலம், தீ, மழு ஆகியவற்றைக் கையில் பிடித்து, புலியைக் கொன்று தோலை உடுத்து, பாம்பை அடக்கித் திருவடியில் வைத்து, பூதகணங்களை உடனிருக்கச் செய்து குற்றமற்றவராய் விளங்குபவன். ஏழைபங்கன் - ஏழைகளின் நண்பன்; அவர்கள் வறுமைத் துன்பத்தில் பங்கு கொண்டு அதை நீக்கத் துணைபுரிபவன்; மலைவில்லியான் - மேருமலையை வில்லாக உடையவன்.

உபாதி - வருத்தம், காரியம். தேவரீருக்கு - உயர்ந்தவராகிய தங்களுக்கு. பூசைத் திரவியம் - பூசைப் பொருள்கள்; எண்ணெய், கற்பூரம், திரி, தேங்காய், நீர், பழம், பால், பூ, மணப்பொருள்கள், வத்தி முதலாயின. பறித்தல் - அடித்துப் பிடுங்கிக் கொளுதல் (பலாத்காரமாய்க் கவர்ந்து போதல்). பங்கம் - சிறிதும் அஞ்சாமை. இங்கிசை - இழிவு. காக்க - காப்பாற்ற. ஒண்ணாதோ - கூடாதோ? இறப்பித்தல் - சாகச் செய்தல். புலம்புதல் - கூறி அழுதல். அஞ்சாதே - பயப்படாதே. குண்டோதரன் - சிவகணங்களுள் ஒரு பூதம். கோபி - கோபமுள்ளவன். தெண்டாயுதம் - தண்டாயுதம் என்னும் தடியாகிய ஆயுதம். திகிரி - சக்கரமாகிய ஆயுதம். நீறு - திருநீறு; இது சைவ சின்னங்களுள் ஒன்று. கொக்கரித்து - கற்சித்து, முழக்கம் செய்து. செங்கை - செம்மையானகை. தழைத்தால விருட்சம் - தழைத்த + ஆலவிருட்சம் - ஆலமரம். பரஞ்சோதி - பரமசிவன். சோதி - ஒளி. தரு - மரம். எறிபொறி - வீசி எறியப்பட்ட இயந்திரம்.

***பாட வேறுபாடு*** - 1. நிலைத்தவர் 2. கங்கைநீண் மலரும் 8. கூப்பியை 10. தாங்குள்ள 11. யென்னவே

***சுவடிச்சொல்*** - 3. அடிசலப் பதாறத்தமும் 4. பறிகுடுத்து 5. நடிங்கி 6. ஒருனாளு 7. குணர்ந்தேன் 9. சுழத்தி.

***(தூதன் போரிட்டு நீலனை வீழ்த்துதல்)***

***சம்பை***

21. வந்தெதிர்த்த நீலனுடன் மகதேவ னார்தூ தன்
வந்தெதிர்த்துத் தடியாலே வாட்டினன் அப்போது

நீலன்அதி கோபமாய் நிமலனார் தூதனிட
மேலெலாந் தருவெடுத்து வீசினன் அப்போது

இவன்எறிய அவன்எறிய இருவர்களும் ஒருநாழி
உவரிஉவ ரியு[1]மென்ன [2]யுத்தமது புரிந்தார்

வான்எழும்பு வார்அவனி வந்திழிகு வார்சுழன்று
தான்அலம்பு வார்[3]தழுவிச் சயிலமெனப் புரள்வார்

விட்டுவிடு வார்சிங்கம் என்னவெதிர்ப் பாரிப்படிப்
பட்டநீ லனையண்டம் பாய்ச்சினான் தூதன்

பாய்ச்சவே யாகாச பானுமண் டலம்அளவி
வீச்சுடைய [4]மலைவந்து வீழ்ந்ததென வீழ்ந்தான்

தன்னை எதிர்த்து வந்த நீலனுடன் இறைவனுடைய தூதனாகிய குண்டோதரன் போரிடத் தொடங்கினான். தடியை எடுத்து அடித்தான். அதனால் கோபங்கொண்ட நீலன் குண்டோதரன் மீது மரத்தை எடுத்து வீசினான். ஒருவரோடு ஒருவர் மாறி மாறி அடித்துக் கொண்டார்கள். கடலோடு கடல் எதிர்த்தது போல இருவரும் போரிடத் தொடங்கினர். வானத்தை நோக்கி எழும்புவார்கள்; அங்கிருந்து பூமியில் வந்து குதிப்பார்கள்; சுழன்று சுழன்று அதிரச் செய்வார்கள் ; மலைகள் இரண்டு இணைந்ததுபோலக் கட்டிப் புரள்வார்கள்; பிறகு விட்டு விலகுவார்கள்; சிங்கத்தைப்போல கர்ச்சித்துப் போரிடுவார்கள்; இந்த நிலையில் குண்டோதரன் நீலனைத் தூக்கி ஆகாயத்தில் எறிந்தான்; நீலன் சூரிய மண்டலத்தைத் தொட்டுவிட்டு அங்கிருந்து வீசப்பட்ட மலையானது வந்து விழுந்ததைப்போல பூமியில் வந்து விழுந்தான்.

மகதேவனார் - சிவபெருமான். நிமலனார் - இறைவன்; தூய்மையானவன் என்ற பொருளில் வந்தபெயர்; (மலம் × நிமலம்). ஒருநாழி - 24 நிமிடம் கொண்ட கால அளவு (2 ½ நாழி - ஒருமணி). உவரி - கடல். வான் - ஆகாயம். அவனி - பூமி. இழிகுவார் - இறங்குவார். அலம்புதல் - அதிர்தல். சயிலம் - மலை. அண்டம் - ஆகாயம். பானு-சூரியன், அளவி - அடைந்து.

பாடவேறுபாடு - 1. மெதிர்த்து 3. தழுவச் 4. மலைபோல்

சுவடிச்சொல் - 2. வுயித்தியமது.

(நீலன் இறந்துபடுதல்)

### ஏகதாளம்

22. நிலத்தில் விழுந்தெழுந்த நீலனைத் தான்சிவ
பலத்துள்ள தூதனும் பெலத்தகை யாலே

சக்கரம் எடுத்தவன் தலைதனைத் [1]துணித்துக்
குக்கியைப் பீறினன் குடல்சரிந் திடவே

[2]தன்மயில் லாதவர் தனம்கொள்ளை போய்விட்ட
தென்னவே நீலனும் இறந்தனன் புவிமேல்

நல்லோர்க்கு அடுத்த [3]வியாதியைப் போலவே
[4]நில்லாம லேயந்த நீலனும் மடிந்தான்

கழுகுகள் பருந்துநரி காக்கைச் சுவானங்கள்
இழுத்துப் பிடுங்கித்தின்ன இரையது வானான்.

நிலத்தில் விழுந்த நீலன் எழுந்திருக்கத் தொடங்கினான். சிவபலத்தைப் பெற்றவனாகிய குண்டோதரன் உடனே தனது பலத்த கையிலே சக்கராயுதத்தை எடுத்து நீலன் தலையை அறுத்து வீழ்த்தினான்; வயிற்றைப் பிளந்து குடலைச் சரித்தான். தருமம் செய்யாமல் பணத்தைச் சேர்த்து வைத்தவர்களுடைய செல்வமெல்லாம் கொள்ளை போய்விட்டதுபோல நீலன் இத்தரைமீது விழுந்து இறந்தான். நல்லவர்களுக்கு வந்த வியாதி நிலைத்திருக்காது. அதுபோல இந்த உலகில் நிலைத்தில்லாமல் நீலன் மடிந்தான். கழுகுகளும் பருந்துகளும் நரிகளும் காக்கைகளும் நாய்களும் கொத்தித் தின்னுமாறு அவற்றிற்கு இரையானான்.

பலம் - வலிமை; சிவபலம் - சிவபெருமானின் செல்வாக்கு. துணித்து - வெட்டி. குக்கி - வயிறு. பீறுதல் - கிழித்தல், கீறுதல். தன்மம் - தருமம். தனம் - செல்வம். புவி - பூமி. அடுத்த - ஏற்பட்ட சுவானம் - நாய். இரை - உணவு.

**பாடவேறுபாடு** - 1. துணிந்தவன் 2. தனமில்லாதவர் 3. வியாதியாமாயசு 4. நில்லாததுவென

*(நீலி செய்தியறிதல்)*

**சம்பை**

23. நீலன்பட வேயந்த நீலனிட சேவகர்கள்
ஓலைகொண்டு போனார் நீலிதனக் கோத

கோலமுள்ள வேப்பமரங் கொத்தோடே தரிப்புண்டும்
நீலன்பட வுங்கனவு நீலியன்று கண்டாள்

கண்டுபெருங் கொழுக்கட்டைகள் காதலாய் [1]அண்ணனுக்கு
வண்டிதனில் [2]ஏற்றிக்கொண்டு வரும்போது நீலன்

பட்டானென்று ஓலையந்தப் பாவைகையில் [3]பேய்கொடுக்க
கெட்டேனென் றேயபையம் இட்டோடி வந்தாள்

வந்துதமை யன்சிரசு மாண்டுபோன தைப்பார்த்து
நொந்துபரந் தழுதுடலம் மறந்துகளை போனாள்

நீலன் இறந்துபட்டதை அறிந்த பேய்க்கூட்டங்களாகிய பணியாளர்கள் நீலிக்குச் சொல்ல ஓலைகொண்டு சென்றார்கள். அதே சமயம்,

அழகான வேப்பமரமானது அடியோடே வெட்டப்பட்டதுபோலவும், நீலன் இறந்துவிட்டதுபோலவும் நீலி கனவுகண்டாள். உடனே தன் அன்புள்ள அண்ணனுக்காக, கொழுக்கட்டைகள் செய்து வண்டியில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டு வந்தாள். எதிரில் வந்த பேயானது நீலன் இறந்துவிட்டான் என்ற செய்தி அடங்கிய ஓலையை நீலியிடம் கொடுத்தது. ஐயோ! நான் அழிந்தேனே! என்று கூக்குரலிட்டவளாய் ஓடிவந்து தலையறுப்புண்டு இறந்து கிடந்த அண்ணனைக் கண்டாள். தன்னையே மறந்தவளாய் வருந்திக் கதறி அழுது துடித்துச் சோர்ந்து விழுந்தாள்.

பட - அழிய. சேவகர் - வீரர், பணியாளர். ஓலை - சீட்டு (செய்தி). ஓத -சொல்ல. கோலம் - அழகு. கொத்தோடே - அடியோடு. கொழுக்கட்டை - அரிசிமாவால் செய்யப்படும் ஒருவகைப் பலகாரம். பாவை - பெண்; பதுமையாகிய பாவை போன்றவள் ஆதலின் உவமையாகு பெயராய்ப் பாவை எனப்பெற்றாள். தமையன் - அண்ணன். சிரசு - தலை. களைபோதல் - களைப்படைதல் ; சோர்ந்துபோதல்.

**பாட வேறுபாடு** - 1. யன்றனக்கு 3. பேய் கொடுக்கவே.

**சுவடிச்சொல்** - 2. ஏத்திக்.

*(நீலி புலம்புதல்)*

## திபதை

24. களைதெளிந் தெழுந்துஇரு கண்ணில்நீர் சொரிய
அளகம் தனைப்[1] பிச்சு அபாரியாய் எறிவாள்

மார்மார் எனக்குத்தி வாயில் அடித்துப்
பார்மேல் தலையைப் படீலென உடைப்பாள்

தழைத்தெரி தணலிலே தவறியே விழுந்த
புழுவது பதைப்பதைப் போல்[2] பதைத் தழுவாள்

சமன்எதிர்த் தாலுமுன் தனைவெல்லு வானோ
அமர்புரிந் துன்னையார் அழித்தவர் என்பாள்

சீருள நின்பெயர் செப்பவே பயமாம்
போர்செய்ய வந்தெதிர்ப் போர்களார் என்பாள்

இங்கிரு பிறப்பிலும் இணைபிரி யாத
தங்கையை விட்டுநீ தாண்டலே தென்பாள்

எனைவிட் [3]டண்ணேயிப்போ தேகினீர் என்பாள்
எனைவிட் டிடநெஞ்சு இசைந்ததோ வென்பாள்

இருக்கின்ற நாளைக்கு இருவரும் இருந்து
மரிப்பதற்கு அதிஷ்டம் வாராதுபோச் சென்பாள்

பாரிய வண்ணனைப் படைகொடுத் திங்கே
ஓரியாய் [4]உலகினில் உழல்வனோ வென்பாள்

இப்படி பாய்வரும் என்றறி யாமல்
அப்புறம் போனதே அவமதி யென்பாள்

இனியிறந் திறந்துடல் எடுத்துழன் றாலும்
கனிவுள்ள அண்ணனைக் காண்பனோ வென்பாள்

அருமையாய் அண்ணன் அவதரித்த விடத்தே
பெருமையாய்க் கூடப் பிறப்பனோ வென்பாள்.

**(பேய்களின் ஆறுதல் மொழி)**

இப்படிப் புலம்புமவ் வேந்திழை யார்க்குச்
செப்புவார் நீதி சிலகிழப் பேய்கள்

வாருமம் மேஇரா வணன்இருந் தானோ
பாரிய வாலிதான் படாதிருந் தானோ

[5]வலுவுள்ள நூற்றுவர் வாழ்ந்திருந் தாரோ
பலமுள்ள கீசகன் பிறப்பிருந் தாரோ

[6]கூறவென் றாலது கோடானு கோடி
[7]தேறுமம் மேயினி [8]செத்தவர் பிழையார்

எனச்சொல்லி வேண்டவே இவள்துக்கம் மாறி
மனத்தெளி வாயண்ணகன் மாண்டதும் வேம்பு

பட்டதும் அண்ணன் பாதாதையை அழைத்துக்
கிட்டவா வென்றவள் கேழ்க்கலுற் றாளே

சோர்ந்து விழுந்த நீலியானவள் களைப்பு தெளிந்து எழுந்தாள். இரண்டு கண்களிலும் கண்ணீர் வடிந்தது. அர்த்தமில்லாமல் தன்னை மறந்தவளாய் கூந்தலைப் பிய்த்து எறியத் தொடங்கினாள். மார்பிலும் வாயிலும் மாறிமாறி அடித்துக் கொண்டாள். தலையைத் தரையின் மீது மோதிக்கொண்டாள். கொழுந்துவிட்டு எரிகின்ற தீயில் தவறிவிழுந்த புழுவைப்போலப் பதைபதைத்து அழத் தொடங்கினாள்.

எமனே வந்து எதிர்த்தாலும் உன்னை வெல்லமுடியாதே! அப்படிப்பட்ட உன்னோடு போர் செய்து உன்னை அழித்தவர் யார்?

பெருமைக்குரிய உன்பெயரைச் சொல்லவே பயப்படுவார்களே! அப்படிப்பட்ட உன்னோடு போர் செய்ய வந்தவர் யார்?

பூமியில் பிறந்த இரு பிறவியிலேயும் இணைபிரியாது இருந்த உன்தங்கையாகிய என்னை விட்டுப் பிரிந்தது எப்படி? அண்ணே! என்னைத் தனியே விட்டுவிட்டுச் சென்றுவிட்டீர்களே; இப்படிச் செல்ல உங்களுக்கு எப்படி மனம் வந்தது? வாழ்நாள் வரையில் இருவரும் ஒன்றாகவே இருந்து, ஒன்றாகவே இறப்பதற்கு அதிர்ஷ்டம் இல்லாமல் போயிற்றே! மூத்தவனாகிய அண்ணனைப் போரில் இழந்து நான் மட்டும் ஒண்டியாய் எப்படிச் சுற்றித் திரிவேன்? இவ்வாறெல்லாம் நடக்கும் என்பதை அறியாமல் உங்களை விட்டுத் தனியே பிரிந்துபோனதே என் கெட்ட புத்தியாலல்லவா? இனி எத்தனைப் பிறவி எடுத்துத் திரிந்து வந்தாலும் என் அன்பான அண்ணனைப் பார்க்க முடியுமா? அண்ணன் பிறக்கின்ற இடத்தில் பிறக்கின்ற பாக்கியம் எனக்குக் கிடைக்குமா?

இப்படிப் பலவாறாகப் புலம்புகின்ற நீலியைப் பார்த்துச் சில வயதான பேய்கள் நீதி சொல்லத் தொடங்கின.

அம்மையே! பெரும்பலம் பெற்ற இராவணன் நிலையாக இருந்தானா? மிகத்திறமையான வாலி தான் அழியாமல் இருந்தானா? பலசாலிகளான நூற்றுவரானகௌரவர் நிலையாக வாழ்ந்திருந்தார்களா? அதேபோல கீசகன்தான் இருந்தானா? இப்படிக் கோடானு கோடி பேர்கள் இறந்திருக்கிறார்கள். அவர்களில் யாருமே பிழைக்கமாட்டார்கள் என்றெலாம் கூறிய அப்பேய்களின் அறிவுரையைக் கேட்ட நீலி ஒருவாறு மனம் ஆறுதல் அடைந்து வருத்தம் நீங்கினாள்.

மனம் தேறிய நீலி அண்ணனுடைய சேனையை அழைத்து அருகில் வைத்துக்கொண்டு அண்ணன் இறந்ததும் வேப்பமரம் வெட்டப்பட்டதுமாகிய செய்திகளைக் கேட்கத் தொடங்கினாள்.

சொரிதல் - வடிதல். அளகம் - கூந்தல். அபாரியாய் - அளவில்லாமல், அர்த்தமில்லாமல்,

வீணாக. பார் - நிலம். தழைந்து எரிதணல் - கொழுந்துவிட்டு எரியும் நெருப்பு. பதைப்பதைப்போல் - துடிப்பதைப் போல. / பதைத்தல் - துடித்தல், பதறுதல், சமன் - காலன், எமன். அமர் - போர். சீர் - பெருமை, புகழ். இருபிறப்பு - இம்மை, மறுமைகளாகிய இப்பிறப்பு, மறுபிறப்புகள். தாண்டல் - கடத்தல், விட்டுச் செல்லுதல். ஏகினீர் - சென்றுவிட்டீர். இசைந்ததோ? - விரும்பியதோ? மரிப்பது - இறப்பது. பாரிய அண்ணன் - வளர்ந்த அண்ணன்; துணையாய் இருந்த அண்ணன். படைகொடுத்தல் - போரில் இழத்தல். ஓரியாய் - ஒண்டியாய், தனிமையாய். உழலுதல் - வருந்தித் திரிதல். அவமதி - கெட்டபுத்தி; வெறுக்கத்தக்க செயல். கனிவு - அன்பு. கூடப்பிறத்தல் - உடன்பிறப்பாய், சகோதரியாய்ப் பிறத்தல். ஏந்திழை - பெண். இராவணன் - பஞ்சாக்கினியின் (இராகம், காமம், கோபம், சடம், தீபனம்) இடையில் நின்று தவம் செய்து அவுணர், உரகர், சித்தர், தேவர், விஞ்சையர் (அசுரர், நாகர், சித்தர், ஜன்மதேவர், கருமதேவர் ஆகிய சுரர், வித்தியாதரர்) ஆகிய யாவராலும் சாகா வரம் பெற்றவன். வாலி - இந்திரன் மகன்; தேவருக்காக மந்தரமலையை (திருப்பாற்கடலில் இட்டு)க் கடைந்தவன்; இவனை எதிர்த்துப் போர் செய்யும் ஒவ்வொரு வீரனுடைய வலிமையிற்பாதி இவனை அடையுமாறு இந்திரனால் வரமளிக்கப் பெற்றவன்; இராவணனைப் பிடித்துத் தன் கக்கத்தில் அடக்கியவன். நூற்றுவர் - திருதராட்டிரரின் மக்களான துரியோதனன் முதலான நூறுபேர். கீசகன் - (சிங்கபலன் என்ற பொருளில் அமைந்த பெயர்) விராடன் மைத்துனர் நூற்று நால்வரில் மூத்தவன்; திரௌபதியை மோகித்ததால் பெண் வேடந்தரித்த வீமனால் கொல்லப்பட்டவன். கோடானுகோடி - தொடர்ந்த பல கோடிகள். தேறும் - தெளியப்படும். பதாதை-பதாதி - சேனை; பதம் + ஆதி; பதம் - கால் காலாட்படை முதலானவை. இங்கு ஒருமையில் கூட்டத் தலைவனைக் குறித்தது (தலைமைப் பேய்).

**பாடவேறுபாடு** - 1. பிச்சிபாரியாய் 2. வீழுந்தழுவாள் 3. டன்றே 4. நானும். 5. வலியுள்ள 6. கூறவென்னாலொரு 7. தேருமம் 8. சென்றவர்.

**சுவடிச்சொல்** - 8. செற்றவர்

**(நீலி வினவ, பேய்கள் நிகழ்ந்தது கூறல்)**

**சம்பை**

25. ஏதுகார ணத்தினால் [1]என்தமையன் இடறினான்
மேதினியி லேமாண்டு விட்டகதை சொல்வீர்

[2]ஆயதோர் வேம்பும்இட ரால்மடிந்த தேனெனப்
பேயெலாம் [3]நீலியர்க்குப் பிறிதுஉத்தரம் சொல்வார்

மேளமாய் உன்தமையன் வேட்டைபோனான் அந்த
வேளைதனிற் பழையனூர் வேளாளர் வந்து

விண்ணளவு வேம்புதனை வெட்டிக்கொண்டு போனார்
அண்ணன்வந்து பார்த்தவரைக் [4]கொன்றிடுவேன் [5]என்று

தாரிதனைப் பார்த்திருக்கச் சங்கரனைப் பூசைசெய
நீரலரும் தளிகைகொண்டு ·போறபூ சுரனை

[6]அடித்துப்பறித் தானவனும் அபையமிட்டுப்
போய்விழுந்து
துடித்தழுது சிவனுடனே சொல்லியங்க லாய்த்தான்

ஆடுமிறை யோன்குண்டோ தரனைவிட்டு நீலனையும்
பாடுசெய்வித் தானந்தப் பாரதம தென்றார்.

இந்த நிலவுலகத்தில் என்னுடைய அண்ணன் என்ன காரணத்தால் இறந்தான்? வேப்பமரம் எவ்வாறு வெட்டப்பட்டது? நடந்த நிகழ்ச்சிகளை எனக்குச் சொல்லுங்கள் என்று கேட்ட நீலியைப் பார்த்து பேய்கள் பதில் சொல்லத் தொடங்கின.

உங்கள் அண்ணன் சேனையுடன் கூடி வேட்டையாடச் சென்றார். அப்போது பழையனூர் வேளாளர் வந்து ஆகாயமளவும் (மிக உயரமாக) வளர்ந்திருந்த வேப்பமரத்தை வெட்டி எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள். வேட்டையாடித் திரும்பி வந்து பார்த்த உங்கள் அண்ணன் கோபம் கொண்டு அவர்களைக் கொல்லுவேன் என்று புறப்பட்டார். எதிரில் ஒரு அந்தணர் இறைவனுக்குப் பூசைசெய்ய நீரும் மலரும் நைவேத்தியப் பொருள்களும் எடுத்துக் கொண்டுவந்தார். அவரைக் கண்டவுடன் அவரை அடித்து அப்பொருள்களையெல்லாம் கொள்ளையடித்துக் கொண்டு வந்தார். அந்தணர் ஆலயத்திற்குச் சென்று இறைவனிடம் முறையிட்டார். சிவபெருமான் குண்டோதரனை அனுப்பி நீலனைக் கொல்லச் செய்தார் என்று நடந்த நிகழ்ச்சிகளைக் கூறின.

இடறுதல் - அழிதல். மேதினி - நிலவுலகம். இடர் - துன்பம். மடிந்தது ஏது? - இறந்தது எதனால்? (என்ன காரணம்?) பிறிது உத்தரம் - மறுமொழி. மேளம் - மேளனம், கூட்டம். விண்ணளவு - ஆகாயத்தைத் தொடும்படி வளர்ந்திருந்த (மிக உயர்ந்த) .தாரி - வழி; உரிய வழிவகை. நீரலரும் - நீரும் அலரும், அலர் - மலர். தளிகை - உணவு. பூசுரன் - அந்தணன். பறித்தல் - கவர்தல்; பிடுங்கிக் கொள்ளுதல். அங்கலாய்த்தல் - நொந்து வருந்துதல். ஆடும் இறையோன் - நடராசமூர்த்தி; சிவபெருமான். பாடு - படுதல்; அழிவு.

பாட வேறுபாடு- 1. என்தமையனீடேறினான் 2. ஆய்ந்ததோர் 5. என்றான்

சுவடிச்சொல் - 3. நீலியற்கு 4. கொண்ணிடுவே 6. பரித்தான்

(நீலியின் வஞ்சினம்)

### ஏகதாளம்

26. கூறவே நீலிய கோரம தாய்ப்பற்றிச்
சீறின ளேநெருப்பாறது போலவே

அண்டமும் உலகமும் [1]அதிரவார்ப் பரித்து
கொண்டை தனைவிரித்துக் கண்டவர் கலங்க

பொறும்பொறும் அவர்தப்பிப் போனதெங் கேயென்று
கறுவித்தன் புறங்கையைக் கடித்தனள் நீலி

சேஷ்டன் [2]மனையைமிகச் சேட்டையிட் டான்கையில்
காட்டிக் [3]கொடுத்தவரை வாட்டுவன் என்றாள்

முந்திப் பழையநகர் முதலிகள் தீங்கிட்டு
வந்த பழிக்குப்பதில் வாங்குவன் என்றாள்

அழிவுசெய் யும்பழசை யார்களை ஒருபழிக்கு
எழுபது [4]உயிர்க்கொலை யிடுவனென் றாளே

பலவிதத் [5]தானும் பழிவாங்கி விரித்த
தலைமுடிப் பேனென்று [6]சபதம்செய் தாளே.

பேய்க்கூட்டம் கூறியதைக் கேட்டாள் நீலி. நெருப்பு ஆற்றைப்போல சீறி எழுந்தாள்; அச்சம் தோன்றுமாறு கத்தினாள்; பூமியும், ஆகாயமும் அதிர்ச்சியடையுமாறு ஆரவாரம் செய்தாள்; பார்த்தவர்கள் உள்ளங் கலங்குமாறு தலையை விரித்துப் போட்டுக் கொண்டு பொறுங்கள் பொறுங்கள் அந்தப் பழையனூரார் எங்கே தப்பித்துப் போகிறார்கள் என்று பார்க்கிறேன் என்று கறுவினாள். கறுவியவாறே தன் புறங்கையைக் கடித்துக் கொண்டாள்.

என் அண்ணன் தங்கியிருந்த வீட்டை அடியோடு அழித்ததோடு அல்லாமல் ஈசனிடம் நீலனைக் காட்டிக் கொடுத்தவரை அழிக்கிறேன்; பழையனூர் வேளாளர்கள் முன்பு செய்த தொல்லைகளுக்குப் பழி வாங்குகிறேன்; அழிவுசெய்த

பழையனூர் மக்களை ஒரு பழிக்கு எழுபது உயிர்களைப் பலி வாங்குகிறேன்; பல வகையாலும் அவர்களைப் பழிவாங்கிய பிறகே விரித்த என் கூந்தலை முடிப்பேன் என்றெல்லாம் சபதம் செய்தாள்.

அகோரம் - அச்சம்தோன்றுதல். சீறினள் - பெருங்கோபத்துடன் இரைந்தாள் (கத்தினாள்). நெருப்பு + ஆறு - நெருப்பாறு - தீ ஆறு. அண்டம் - ஆகாயம். கொண்டை - தலையில் போர்டும் மயிர்முடி. கறுவுதல் - பகை கொள்ளுதல். சேஷ்டன் - அண்ணன். சேட்டையிட்டன் - அழிவுசெய்தவன். வட்டுவன் - வாட்டுவேன்; துன்புறுத்துவேன். பழையநகர் - பழையனூர், பழசை - பழையனூர்.

**பாடவேறுபாடு** - 2. மனையை சேட்டையிட்டான் கையை 5. தாலுமன்னன் 6. சபதம் சொன்னாளே

**சுவடிச்சொல்** - 1. அதிரவாற்ப்பிரித்து 3. குடுத்தவரை 4. உயிருகுலை.

**(பழிவாங்க நீலி எதிர் நோக்குதல்)**

**சம்பை**

27. பத்துரைத்த கடுநீலி பலபேயுந் தூறாக்கி
ஒத்தையாய்த் திருவாலஞ் சித்திரமுற் றாளே
பழிமுன் பழிதனக்குச் -. செட்டிப்பாலன் இனிமேல் பிறந்து

வழிவருவான் எனநீலி [1]வழிகாட்டி யிருந்தாள்
வதங்கிப்பசி யுளவேங்கை வருவர்களை ஆசரித்துப்
பதுங்கினது போலவளும் ஒதுங்கியிருந் தாளே

[2]நீரண்டை விழிமூடி [3]நின்றுகொண்டு மீனெடுக்கும்
[4]கேரண்டம் போலிவளும் மாரண்டத் திருந்தாள்

தன்னம்பிக்கையோடு இவ்வாறெல்லாம் சபதம் செய்த கொடியவளாகிய நீலி பேய்க் கூட்டங்களையெல்லாம் அவரவர் இடத்துக்குச் சிதறி ஓடச் செய்தாள். தனிமையாகச் சென்று திருவாலங்காட்டை அடைந்தாள். பழிக்குப்பழி வாங்குவதற்கு உரியவனானவனும் முற்பிறவியில் தன்னைத் திருமணம் செய்து கொண்டவனுமாகிய தன் கணவன் செட்டியின் மகனாகப் பிறந்து வருவான் என்று வழிமறித்துக் கொண்டிருந்தாள். பசியால் வாடிய புலியானது எதிரில் வருபவர்களிடம் பணிவாக நடந்து கொண்டு பதுங்கியிருப்பதைப் போலவும், நீரின் அருகிலே கண்ணை மூடிக்கொண்டு இருப்பது போல பாசாங்கு செய்து உரியமீன் வந்தவுடன் கொத்திவிழுங்கும் கொக்கைப் போலவும் நீலி பதுங்கியிருந்தாள்.

பத்துரைத்தல் - பற்றுரைத்தல் - தன்னம்பிக்கையோடு கூறுதல், தூறாக்கி - சிதறி ஓடச்செய்து. ஒத்தையாய் - ஒற்றையாய் - தனிமையாய். திருவாலஞ் சித்திரம் - திருவாலங்காடு. வதங்கி - பசியால்வாடி. ஆசரித்தல் - வழிபடுதல்; அஞ்சி வணங்குதல், நீரண்டை - தண்ணீரின் அருகில். கேரண்டம் - காக்கை (கொக்கு). மாரண்டம் - பாம்புமுட்டை (பதுங்கியிருத்தலைக் குறித்து).

**பாட வேறுபாடு** - 1. வழிகட்டிக்கொண்டிருந்தாள் 2. நீருண்டே 3. நின்றுவந்து **சுவடிச்சொல்** - 4. கோரண்டம்

## வசனம்

நீலி இந்த விதமாக இருக்கப் பூருவ சென்மத்தில் ஸ்திரீ வதை செய்தவன்[1] எவ்விடத்தில் பிறந்து வருகிறான் எனில் - இப்பால் காஞ்சீபுர வளமையும் செட்டி உற்பவ முதலிய கதைகளும் சொல்லப்பட்டன. (4)

பூருவ ஜென்மம் - முற்பிறப்பு. ஸ்திரீ - பெண். வதை - கொலை. உற்பவம் - பிறப்பு.

**பாட வேறுபாடு** 1. எவ்விடத்திலேயிருந்து வாரானோவெனில்

**(காஞ்சீபுர வளமை)**

## திரிபுடை

28. மணமு லாவிய குழலினாள் - மலை
மன்ன னுதவு [1]குமாரத்தி ஈன்றிடும்
கணப தீசுவரன் [2]தயவுமிகவுள - காஞ்சிபுரமே.

சம்புத் தீவுக்குள் இன்பமாய் - வெகு
சம்பிரமாய்க் [3] காமாட்சி தேவியுமே
கம்ப வாணரு மிருந்து வரந்தரும் - காஞ்சீபுரமே

ஆட்சி பங்கயி லாசமென்னவும் - அந்தம்
உள்ள வைகுந்தம் என்னவும்
காட்சி யானது லோகந்தனிலே - காஞ்சீபுரமே.

இயற்கை மணம் வீசும் கூந்தலை உடையவளும், பருவத ராசனாகிய இமவான் பெற்ற மகளுமாகிய பார்வதி தேவி பெற்றெடுத்த கணபதியின் அருளைப் பெற்றது காஞ்சிபுரம் என்னும் திருத்தலம்;

நாவலந்தீவாகி விளங்கும் அழகிய திருத்தலத்தில் மகிழ்ச்சியும் இன்பமும் பொங்க வீற்றிருக்கும் காமாட்சியம்மையும் ஏகாம்பரநாதரும் அருள் புரிந்து வேண்டும் வரங்களைத் தந்து வருவது காஞ்சிபுரம் என்னும் திருத்தலம்;

கயிலாலத்தின் ஆட்சிநடைபெறும் நகரம் காஞ்சிபுரம் என்னும் திருத்தலம். அழகான வைகுந்தம் என்னும் காட்சியைத் தருவதும் இந்தத் திருத்தலம்.

மணமுலாவிய - வாசனை வீசுகின்ற. குழல் - கூந்தல். மலைமன்னன் - இமவான்; பருவதராசன். உதவும் - பெற்ற. குமாரத்தி - இமவான் மகள்; உமையம்மை (பார்வதி). தயவு - அருள். சம்புத்தீவு - நாவலந்தீவு; இங்குக் காஞ்சிபுரத்தைக் குறித்தது; சம்பு - நாவல். சம்பிரம் - மகிழ்ச்சி. காமாட்சி - காஞ்சியில் எழுந்தருளியுள்ள இறைவி; இறைவன் ஏகம்பவாணர் (ஏகாம்பர நாதர்). காமாட்சி தேவியும் ஏகம்பவாணரும் எனப்பிரிக்க. கயிலாயத்தின் ஆட்சி நடைபெறும் நகரம்; அழகிய வைகுந்தம் எனவும் காட்சி தருவது காஞ்சிபுரம். அந்தம் - அழகு. லோகம் - உலகம்

***பாட வேறுபாடு*** - 1. குமாரி 2. தயவு மிகுந்திடும்

***சுவடிச்சொல்*** - 3. காமாக்ஷி

***(காஞ்சியில் நாகந்தை செட்டியும் நல்ல நாயகியும்)***

## திபதை

**29.** இப்படி தனிலதற் கிணைசொல்லப் போமோ
அப்படிச் சொலுங்கச்சி யம்பதி தனிலே

தேசிகன் வங்கிஷத் தினிலொரு செட்டி
இராசாகொண் டாடிய நல்லறி வாளன்

[1]சொர்ணமெல் லாமொரு [2]துரும்பென மதித்துத்
தன்மகா ரியஞ்செய்த தயவது படைத்தோன்

[3]சதநித்தியம் அன்ன தானமே செய்வோன்
சதநித்தியம் வஸ்திர தானமே செய்வோன்

மனதினில் எண்ணிய வசனமே சொல்வோன்
தினமும் ஒரேகுலம் சிவனடி யாரைக்

காணவே சிவனெனக் [4]கருதிப் பணிந்து
வேணது எல்லாம் [5]வேண்டியே [6] கொடுப்போன்

[7]அழைத்தினத் தாரை வியாபாரம் பண்ணிப்
பிழைத்திடும் என்று [7]பொற் பேறவித் திடுவோன்

திறந்திற மாய்க்கப்பல் செல்வது நூறு
திறந்திற மாய்க்கப்பல் சேர்வது நூறு

திருநாமம் [9]நாகந்தை செட்டியார் என்று
பெருநாமம் பூமியிற் பெரிதாகி வாழ்வோன்

வல்லநா கந்தை மனையாட்டி தன்பேர்
[10]நல்லநா யகியென்று நாடெலாம் துதிக்கும்

தேவியும் நாகந்தை செட்டியார் தானும்
பூவும் மணமது போலொத்து வாழ்வார்

வாழும் அவர்க்கொரு [11]மைந்தனில் லாதே
வாழ்வென்ன வாழ்வென்று மனம்சலிப் பாகி

இருந்திடும் எல்லையில் ஈசுவரன் அருளால்
வருந்திய மாது மகனுண்டா கினளே.

இதற்கு இணையானது என்று வேறு ஒரு திருத்தலத்தையும் சொல்ல முடியாதது திருக்கச்சித்திருத்தலம். அந்தத் தலத்தில் தேசிகன் என்னும் வமிசத்தில் ஒரு செட்டி இருந்தான். அவன் மன்னர்கள் புகழும்படியான பேரறிவு படைத்தவன்; பெரும்பொருளையும் பொன்னையும் துரும்புக்குச் சமமாக நினைப்பவன்; தருமகாரியங்களையே செய்துவரும் இளகிய உள்ளம் படைத்தவன்; நாள்தோறும் அன்னதானமும் ஆடைதானமும் செய்துவருபவன்; தன் உள்ளத்தில் நினைத்ததை நினைத்தபடியே சொல்லும் உத்தமன்; நிலையான ஒரே குணம் படைத்தவன்; சிவனடியாரைக் கண்டால் சிவபெருமானைக் காண்பதாகவே நினைத்து அவர்களைப் பணிவான்; அவர்களுக்குவேண்டியதைத் தாமாகவே வேண்டி வேண்டிக் கொடுத்து உதவுவான்; தன் இனத்தவரை எல்லாம் அழைத்து வியாபாரம் செய்து பிழையுங்கள் என்று சொல்லிப் பொருளைக் கொடுத்து உதவிசெய்வான்; நாட்டைவிட்டுச் செல்லும் உயர்ந்த கப்பல்கள் நூறும், நாட்டிற்குவந்து சேரும் உயர்ந்த கப்பல்கள் நூறும் தனக்குச் சொந்தமாகப் பெற்றவன்; நாகந்தை செட்டியார் என்னும் பெயரோடு மக்கள் புகழுமாறு வாழ்ந்து வந்தான். அவனுடைய மனைவி நல்லநாயகி எனப்படுவாள். அவளும் மக்கள் புகழ வாழ்ந்து வந்தாள். அவர்கள் இருவரும் பூவும் அதன் மணமும்

போல மனமொத்து வாழ்ந்து வந்தார்கள். ஆனால் குழந்தைச் செல்வம் இல்லாததால் வாழ்க்கையில் அவர்களுக்கு வெறுப்பு ஏற்பட்டது. ஆனால் சிறிது நாட்களுக்குப் பிறகு இறைவன் அருள் பெற்றார்கள்; நல்லநாயகி கருவுற்றாள்.

இணை - இணையானது, ஒப்பானது. கச்சியம்பதி - காஞ்சிபுரம் என்னும் நகர். வங்கிஷம் - வமிசம், சந்ததி. சொர்ணம் - பொன். தன்மகாரியம் - தருமச்செயல். சதநித்தியம் - நாள்தோறும்; சதம் - நூறு, எல்லாம். வஸ்திரம் - ஆடை. எண்ணியவசனம் - நினைத்த கருத்து. வேணது - வேண்டியது; தேவையானது (ஒருமையில் அமைந்தது). வேண்டி - விருப்பத்துடன். அழைத்தினத்தாரை - இனத்தாரை அழைத்து என மாற்ற. பொற்பேறு - செல்வம். திறந்திறமாய் - வகைவகையாக. சேர்வது - வந்து அடைவது (செல்லுவதும் வருவதுமாகிய). நாமம் - பெயர். சலிப்பு - இளைப்பு, வருத்தம். எல்லை - பொழுது; காலம். உண்டாகினள் - கருவுற்றனள்.

**பாடவேறுபாடு** - 2. தோறனமென 3. சதநித்தியமன்னன் 4. கருத்தினில், 5. வேண்டி வேண்டி 6. கொடுப்பான். 7. அழுது நொந்தாரை 8. பணப்பேறளி 9. னாகந்தை 10. நல்லனாயகி 11. மைந்தரில்லாதே

**சுவடிச்சொல்** - 1. சொன்னமெலாம்

***(தரிசனன் பிறப்பு)***

***சம்பை***

**30.** சந்ததியில் லாதவளும் சந்ததியுண் டாகவே
[1]சிந்தைமகிழ் வாகிநா கந்தையென்ன செய்தான்

காமன்தன் மகுடமுலைக் [2]கன்னிக்கேழா மாதம்
சீமந்தக் கலியாணம் செய்வித்தான் சிறப்பாய்

பத்துமாத மும்சென்று [3]பாவைநா யகமும்
புத்திரனை ஈன்றாள் இரத்தினமணி போலே

வாஞ்சையுடன் நாகந்தை மகனுண்டாச்சென மகிழ்ந்து
காஞ்சீபுரம் எங்கணும்சர்க் கரைவழங்கி னானே

ஈசர்ஆ லயத்தில் அபி ஷேகநை வேத்தியம்
பூசைசெய்வித் தான்அதிக நேசமுட னேதான்

சித்தடியுண் டாச்சுதென்று செட்டியார் மகிழ்ந்து
சத்திரங்கள் உண்டாக்கி வைத்தனனப் போது

அறுதொழிலுக் காதிபரை அழைத்துநா கந்தைபிள்ளை
பெறுதியிறு தியும்சாத்திர நெறிசொலுமென் றானே.

நீண்டநாள் குழந்தை இல்லாதிருந்த நல்லநாயகி கருவுற்றதால் மகிழ்ச்சியடைந்த நாகந்தை மன்மதனை மயக்கும் அழகுவாய்ந்த தன் மனைவிக்கு கற்பமுற்ற ஏழாவது மாதத்தில் சிறப்பாகச் சீமந்தக் கலியாணம் செய்வித்தான். பத்துமாதம் சென்றபின் அவள் இரத்தினமணியைப் போன்ற ஒரு ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

மகிழ்ச்சி அடைந்த நாகந்தை காஞ்சிபுரம் முழுவதும் இனிப்பு வழங்கி மகிழ்ந்தான்; இறைவன் கோயிலில் அபிஷேக நைவேத்தியம் முதலான பூசைகளை மிக மகிழ்ச்சியோடு செய்தான்; சத்திரங்கள் பலவற்றைக் கட்டினான்; சோதிடரை வரவழைத்து குழந்தை பிறந்தது முதல் ஆயுள் முழுமைக்கும் உரிய நடைமுறைகளைக் கணித்துக் கூறுமாறு வேண்டினான்.

சிந்தை - உள்ளம், மனம். காமன் - மன்மதன். மகுடம் - முடி. சீமந்தம் - கருப்பம் தரித்தவருக்கு ஆறுமாதத்திற்குப் பிறகு செய்யும் ஒரு சடங்கு. நாயகம் - தலைவி. இரத்தினமணி - நவமணிகளுக்குள்ள பொதுப்பெயர். (நவ இரத்தினம் - கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வயிரம், வைடூரியம் என்பன). வாஞ்சை - ஆசை. அபிஷேகம் - திருமஞ்சனம், நீராட்டுவித்தல் (அபிடேக முறைகள் - எண்ணெய்க் காப்பு, மாக்காப்பு, நெல்லிக்காப்பு, மஞ்சட்காப்பு ஆகியவை இடுதலும், பஞ்ச கவ்வியம், பஞ்சாமிருதம், பால், தயிர், நெய், தேன், சர்க்கரை, கருப்பஞ்சாறு, எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம், குளஞ்சி, மாதுளை ஆகிய பழச்சாறுகள், இளநீர், சந்தனக் குழம்பு ஆகியவற்றால் திருமஞ்சனமாட்டுதலும் ஆம்) நைவேத்தியம் - தேவர்க்குப் படைக்கும் உணவு, கற்பூர ஆராதனை முதலியன. நேசம்- அன்பு. சித்தடி - சிற்றடி; சிறுகால்; குழந்தை. அறுதொழிலுக்காதிபர் - அறுவகைத் தொழிலுக்குரிய தலைவர். இங்கு சாத்திரம் கேட்பதால் அறுதொழிலுக்குரிய அந்தணரைக் குறித்தது; அந்தணர் அறுதொழில் - ஈதல், ஏற்றல், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல் ஆகியவை. பெறுதியிறுதி சாத்திரம் - பிறந்தது முதல் ஆயுள் முழுமைக்கும் உரிய சோதிடம்.

**பாடவேறுபாடு** - 1. சிந்தையின் மகிழ் 2. கன்னியற்க் கஞ்சாமதாம் 3. பாவை நல்ல னாயகமும்

(குழந்தைக்குக் கண்டம் - மறையவர் மொழி)

## திரிபுடை

31. சொல்லும் என்றவன் கேட்ட போதவர்
சொல்லு வாரிந்தப் பிள்ளை மாணிக்கம்
தொல்லை நாளிற்பெண் [1]கொலைசெய் தானிந்தத்
தோஷம் தொடரும்பெண் பசாசொன்று வந்துதான்
இந்தப் பிள்ளைதனை எப்போதாகினும் கொல்லும்

நண்புநா கந்தையேயத்தா லிவன்பண் பட்டானே
புத்திரனுக் கந்தத்தத் தொன்றே யந்தத்
தத்து நீங்கிற் சதாயுசுமபி விருத்தியாய்
இருப்பானென் றார்மறை கற்ற [2]மேலோர்.

இந்தப் பிள்ளை முற்பிறவியில் மாணிக்கம் என்ற பெயருடன் வாழ்ந்தவன். ஒரு பெண்ணைக் கொலை செய்த தோஷத்திற்கு உள்ளானவன்; அதனால் ஒரு பெண் பிசாசு எப்போதாவது இவனைக் கொல்லும். அதற்கு இவன் அடிமையாகி விடுவான். இந்தக் கண்டத்திலிருந்து தப்பிவிட்டால் நூறு வயது வரை பெருவாழ்வு வாழ்வான் என்று சோதிடர் கூறினர்.

இந்தப்பிள்ளை மாணிக்கம் தொல்லை நாளில் - இப்பிள்ளையாகிய மாணிக்கம் முற்பிறவியில் (அப்பிறவியில் செய்த பெண்கொலையினால் ஏற்பட்ட பாவம் இப்பிறவியிலும் தொடரும்). அத்தால் - அதனால். பண்படுதல் - அடிமையாதல், உட்படுதல். தத்து - கண்டம். சதாயுசுமபிவிருத்தியாய் - சதம் + ஆயுசம் + அபிவிருத்தியாய் - நூறுவயது வரையிலும் பெருவாழ்வு உடையவனாய். மறை - வேதம் மேலோர் - அந்தணர்.

**பாடவேறுபாடு** - 2. நூலோர்

**சுவடிச்சொல்** - 1. குலைசெய்தான்

(நாகந்தை வருத்தம்)

## ஏகதாளம்

32. ஈதென மறையவர் ஓதவே வணிகன்அப்
போதுவி சாரமவ் வோதம தானான்

பிள்ளை பிறந்ததென்று பூரித்த நாகந்தை
கொள்ளவொண் ணாத்துயர் உள்ளவன் ஆனான்

வேதிய ரேயென்னை வேண்டியிச் சிறுவன்செய்
பாதகம் போம்படி பார்கிருபை யென்றான்

தவஞ்செய்ய வேவந்துற் பவஞ்செய்த பிள்ளைக்குச்
செபஞ்செய்து பாபத்தைத் தீர்த்திடும் என்றான்

தெய்வமுங் களையன்றித் தெய்வமுண் டோபிள்ளை
உய்விதம் எங்களுக்கு உரைத்திடும் என்றான்

இடைநடு வேவரும் கொடிய கொலைதவிரும்
படிசெய்ய வேணுமென்று அடிதொழு தானே.

சோதிடர் கூறியதைக் கேட்ட நாகந்தை பெருந்துன்பத்தில் மூழ்கிப் போனான். பிள்ளை பிறந்தது என்று மகிழ்ச்சியடைந்ததைக் காட்டிலும் பலமடங்கு துயரம் அடைந்தான். அந்தணரே! எனக்காக இந்தச் சிறுவன் செய்த பாவம் நீங்குவதற்குரிய பரிகாரங்களைக் கண்டு கூறுங்கள்; தவஞ்செய்து பெற்ற இப்பிள்ளைக்காக எந்தவிதமான மந்திர முறைகளைக் கையாண்டாவது பாபத்தை நீக்க வழிதேடுங்கள்; உங்களைத் தவிர தெய்வம் வேறு இல்லை; வாழ்க்கையின் இடையிலே நிகழவிருக்கும் கொலையானது நீங்கும்படி வழி செய்யுங்கள் என்று சோதிடர்களாகிய அந்தணரை வேண்டிக் கொண்டான்.

ஈதென - ஈது + என; ஈது - இது; இவனது வரலாறு, சாதகம் இது என ஓத. விசாரம் - கவலை. ஓதம் - ஊறுதல்; கவலையின் மூழ்கினான். பூரித்தல் - மகிழ்ச்சியடைதல். கொள்ளஒண்ணா - மனத்தில் அடக்க முடியாத. என்னை வேண்டி - என்பொருட்டு, எனக்காக. பார்கிருபை - கிருபைபார் - அருள்புரியுங்கள். உற்பவம்செய்தல் - பிறத்தல், தோன்றுதல். செபம் - பிரார்த்தனை, வேண்டுதல். தெய்வம் உங்களையன்றி - உங்களைத்தவிர வேறு தெய்வம். உய்விதம் - ஈடேறுதல்; வாழ்வு பெறுதல். தவிரும்படி - விலகும்படி, நீங்குமாறு. அடி - திருவடிகள்.

**(ஓமாக்கினியில் சூரிகை தோன்றுதல்)**

### சம்பை

33. இந்தவிதம் நாகந்தை ஏத்தித்தொழு திடும்போதில்
அந்தணர்எல் லாம்வேத மந்திரத் தையோதி

[1]அக்கினியைத் தான்வளர்த்தி யவிர்ப்பாகம்
தனைக்கொடுத்துத்
தக்கமறை நெறியினால் எக்கியமுண் டாக்கி

நாலுமறை யோர்வேதத் தியானநெறி தவறாமல்
ஓலமிடும் போதிலந்த ஓமாக்கினி தனிலே

சுரிகையொன்று தான்பால சூரியனைப் போல்தோன்றி
வருகமறை யோர்எடுத்து வணிகன்கையிற் கொடுத்தார்

பாலகனுக்கு [2]என்றைக்கும் பயமில்லை இதைத்தொட்டிற்
காலிற்கட்டி வையுமென்று மேலவர்சொன் னாரே.

நாகந்தையின் வேண்டுகோளைக் கேட்ட அந்தணர்கள் ஓமாக்கினி வளர்த்தினார்கள்; நான்கு மறைகளை உணர்ந்த அவர்கள் வேதநெறி தவறாமல் மந்திரத்தை ஓதி, தேவர்களுக்குரிய அவிப்பாகங்களையெல்லாம் செலுத்தி வேள்வியை நடத்தினார்கள். அனைவருமாக மந்திரமோதி உரத்தகுரலில் முறையீடுசெய்த போது அந்த ஓமத்தீயில் வாள் ஒன்று தோன்றியது. அது இளஞ்சூரியனைப் போல ஒளிவீசியது. அந்தணர் அந்தக் கத்தியை எடுத்து நாகந்தை கையிற் கொடுத்து, இதைத் தொட்டிலில் கட்டி வையுங்கள்; சிறுவனுக்கு என்றைக்கும் பயமில்லை என்று கூறினர்.

ஏத்தி - ஏத்துதல்; வணங்குதல் (வணங்கி). அக்கினி - தீ. அவிர்ப்பாகம் - அவிப்பாகம் - தேவருக்களிக்கப்பெறும் உணவு. எக்கியம் - யாகம், வேள்வி. நாலுமறையோர் - நான்கு வேதங்களையும் உணர்ந்த அந்தணர்; நான்கு வேதங்கள் - இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன (இருக்கு - மந்திரம், தோத்திரம் அடங்கியது; யசுர் - நைவேத்தியம், வேள்வி முதலியன செய்யும் முறைகளைக் கூறுவது; சாமம் - பாவ நிவர்த்திகளைக் கூறுவது; அதர்வணம் - துன்பங்களைப் போக்கிக் கொள்ள, பகையொழிப்பு முறைகளைக் கூறுவது). தியானநெறி - அநுட்டிக்கும் முறை; வழிபடும்முறை. ஓலமிடுதல் - அபயமிட்டு உரத்து ஓதுதல். ஓமாக்கினி - ஓம + அக்கினி - வேள்வித்தீ. சுரிகை - உடைவாள், கத்தி (சூரி - மடக்குக்கத்தி). பாலசூரியன் - உதயசூரியன். பாலகன் - மகன், குழந்தை. மேலவர் - உயர்ந்தோர், அந்தணர்.

பாட வேறுபாடு - 1. அக்கினியை வளர்த்தி

சுவடிச்சொல் - 2. எண்ணைக்கும்

(பழையனூர் வழி தரிசனன் போகக்கூடாது எனல்)

## திரிபுடை

34. பின்னும் வணிகனுக்கு ஓதுவார் - அந்தப்
பிள்ளைகையில் இந்தச் சுரிகை இருந்திடும்
அன்ன காலமும் பிராண பயமில்லை-தன்மவானே.

[1]இன்ன சுரிகைவிட்டால் பிராணனுக் கானிவரும்
பிள்ளை யதற்குப் பிசகில்லை - [2]அன்னதால்
கைவி டாததே யுரமான தென்றார்- அழகு

மைந்தன் வியாபாரத் தொழில்செயும் அடைவிலே
எந்தத் திசையில் மேவினும் - பழையனூர்வழி
போகொணா தென்று மொழிசெய் தாரே

அய்யர் சொல்லிய மொழியெலாம் - செட்டி
அமுதமாய்க் கொண்டு சுரிகைதனைத் - தொட்டில்

[3]மெய்யென்று எதிர்ஓங்கத் தூக்கியே
தன்மஞ் செய்ய லானான்

[4]நேச முடன்நவ கோடித னங்களைப்
பூசு ராதிபர்க்க ளித்துப் - பின்வெளி
வாசல் மேல்வந்துசூறை விடுத்தனன் அன்றே-சிகமதே

இஷ்ட மாகிய பூசு ராதிபர்
இந்தச் சிறுவனுக்கு இசையும் தெரிசன
செட்டி யாரென்று நாமதேயமும் - இட்டுவாழ்த்தி.

கத்தியைக் கொடுத்த அந்தணர், நாகந்தையை நோக்கித் தருமவானே! அந்தச் சிறுவன் கையில் இந்தக் கத்தி இருக்கும் வரையில் உயிருக்குப் பயம் இல்லை. இதைக் கை விட்டால் நிச்சயம் உயிருக்கு ஆபத்து வரும்; கை விடாமல் வைத்திருக்கச் செய்யுங்கள்; மேலும் தங்கள் மகன் வியாபாரத் தொழில் செய்யத் தொடங்கும் காலத்தில் பழையனூர் வழியில் மட்டும் போகக் கூடாது;

மற்ற எந்தப் பக்கத்திற்கும் போகலாம் என்று கூறினார்கள்.

அந்தணர் சொல்லிய வார்த்தைகளை அமுதமொழியாகக் கொண்ட நாகந்தை அந்தக் கத்தியைத் தொட்டிலில் கட்டித் தொங்கவிட்டான். பிறகு ஒன்பது கோடிப் பொருளை அன்போடு அந்தணர்களுக்கு வழங்கினான். பொருள் பெற்ற அந்தணர் குழந்தைக்குத் 'தரிசனச் செட்டியார்' என்று பெயர் சூட்டி வாழ்த்தினார்கள்.

அன்னகாலம் - அவ்வளவு காலமும், பிராணன் - உயிர், ஆனி - கேடு, அழிவு, பிசகு - தடை, விலக்கும் வழி. உரமானது - வலிமையுடையது, அடைவு - முறை, வழி. போகொணாது - போக ஒண்ணாது - போகக்கூடாது. தூக்கி - தொங்கவிட்டு. நேசம் - அன்பு, நவம் - ஒன்பது, புதுமை. பூசுராதிபர் - பூசுரர்+அதிபர் - பூசுரர் - அந்தணர், அதிபர் - முதல்வர். சிகம் - செகம், உலகம். இசையும் - பொருந்தும். நாமதேயம் - பெயர். சூறை விடுத்தல் - திருஷ்டி கழித்தல்.

**பாட வேறுபாடு** - 1. கையின் சுரிகை 2. தியானமாய் 3. மெய்யென மேல் **சுவடிச் சொல்** - 4. தொங்த் னேசமுடனவ கோடி.

**(தரிசனன் வளர்ப்பு)**

**சம்பை**

35. மந்திராட் சதைகொடுத்து
மகராச ராயிரென்று
அந்தணர்கள் வாழ்த்தியவர்
தந்தமனை போனார்

நீராட்டி பாலூட்டி நேர்த்தியாய் அமுதூட்டிச்
சீராட்டித் தாலாட்டித் தெரிசனனை வளர்த்தார்

கனகமயம் பூட்டுவார் கண்ணாடி காட்டுவார்
சனகரும் [1]மன்னருமிகத் தயவாகி வளர்த்தார்

தந்தைதாய் உளம்மகிழத் தருக்குடனே தான்வளர்ந்து
மைந்தனும்பிர பலமாகி ஐந்துவய தானான்

பத்திரத்தைத் தெரிசனனும் பாணியக லானிரவு
நித்திரைக்கும் அகலாமல் வைத்துலகில் இருந்தான்.

மேலும் மந்திரம் ஓதி மங்கலப் பொருளாகிய அரிசியைக் கொடுத்து 'எல்லாச் செல்வமும் பெற்று வாழ்க' என்று வாழ்த்தித் தங்கள் வீடு சென்றனர். தரிசனனுக்கு நீராட்டி, பாலூட்டி, அமுதமளித்து, சீராட்டித் தாலாட்டி மகிழ்வோடு வளர்த்து வந்தார்கள். பொன் நகைகளை அணிவித்துக் கண்ணாடியில் அவன் அழகைக் காட்டி மகிழச் செய்வார்கள். இவ்வாறு தந்தையும் தாயும் ஊர் மக்களும் ஆகிய அனைவரும் மிகப் பெருமையோடு வளர்த்து வந்தார்கள். தரிசனனும் வேள்வியிற் பிறந்த கத்தியைத் தூக்கத்திலும் கைவிடாமல் வைத்துக் கொள்ளப் பழகி விட்டான்.

மந்திராட்சதை - மந்திரம் + அட்சதை, அட்சதை - மங்கல அரிசி. மகராசராய் இரு என்று, மகராசர் - பாக்கியம் உடையவர்; எல்லாச் செல்வமும் பெற்றவர். தந்தமனை - தம்தம் மனை - மனை - வீடு. நேர்த்தி - சிறப்பு. அமுது - உணவு, பால். கனகம் - பொன். சனகர் - சனம், மக்கள். தருக்கு - களிப்பு. பிரபலம் - புகழ். பத்திரம் - வாள். பாணிகை. நித்திரை - தூக்கம்.

**பாட வேறுபாடு** - மன்னயன்மிக.

*(தரிசனன் கல்வி)*

## திபதை

36. தெள்ளிமை நாகந்தை செட்டியார் - மகனைப்
பள்ளிக்கு வைத்துப் படிப்பிக்க வேண்டிச்

சகலபு ராணமும் சகலகா வியமும்
[1]அகிலத்தில் அதிசய ஐந்திலக் கணமும்
சாத்திய தத்துவம் சற்குண மான
வாத்தியார் தம்மை வணங்கிய ழைத்து

வேண்டிய பாக்கியம் [2]மிகுத்திடக் கொடுத்து
வேண்டிய வர்க்கொரு[3] வீடும் அமைத்து
[4]உள்ளம் மகிழ்ந்தனை வோர்களும் கூடிப்
பிள்ளைக்கு நீராட்டி பிறகீரம் மாற்றி

அற்புத மானபட் டாடையும் சாத்திப்
பொற்புறும் பலபல பூஷணம் பூட்டி
ஆனையின் மேல்வாத்தி யாரும்அச் சுதனும்
சேனைகள் சூழவே [5]தெருவீதி வந்து

பரிமளம் சேர்பச்சைப் [6]பந்தலின் நடுவே
குருவும் தனையனும் கூட விருந்து
வேதாந்த வேதியர் வேதங்கள் ஓத
நாதாந்த நாதியர் நாட்டியம் கூற

ஆணிப்பொன் னானையப் பாரையுண் டாக்கி
காணிக்கை மாணிக்கக் கனகமும் சொரிந்து
முக்கனி சர்க்கரை முப்பணி யாரம்
விக்கினேசு வரர்க்கு வேணது படைத்து

[7]விரைராசி சேர்த்துநல் வேளையில் எழுதி
அரிஓம் என்றோதிய வமுதம்கொண் டானே

நாகந்தை செட்டியார் மகனுக்குக் கல்விகற்பிக்க நினைத்து, புராணம், காவியம், ஐந்திலக்கணம், தத்துவம் ஆகிய அனைத்து நூல்களிலும் தேர்ச்சிபெற்ற ஆசிரியர் ஒருவரை வணங்கி அழைத்து வந்தார். அவருக்கு வேண்டிய அளவிலும் மிகுதியாகப் பொருளைக் கொடுத்து, ஒரு வீட்டையும் கொடுத்து அதில் இருக்கச் செய்தார்.

கல்விக்குரிய ஒரு நல்ல நாளிலே, குழந்தைக்கு நீராட்டி, ஈரம் போக்கிப் பட்டு உடுத்திப் பல பொன் நகைகளை அணிவித்து அழகு படுத்தினார்கள். ஆசிரியருடன் குழந்தையை யானையின் மீது அமர்த்தி மக்கள் சூழ்ந்துவர தெருவலம் வந்தார்கள். முடிவில் மணம் நிறைய அலங்கரிக்கப்பட்ட பச்சைப் பந்தலில் ஆசிரியரின் முன் குழந்தையை அமர்த்தினார்கள். அந்தணர் வேதம் ஓத, புலமைவாய்ந்த கலைஞர்கள் இசையுடன் நாட்டியம் நிகழ்த்த அந்தப் பந்தலை இறைமயமாக்கினார்கள். பொன்னையும் மாணிக்கத்தையும் குரு காணிக்கையாக வைத்தார்கள். விநாயகக் கடவுளுக்கு முக்கனியும் சர்க்கரையும் முப்பணியாரமும் படைத்தார்கள். இயற்கையாகவும் செயற்கையாகவும் அமைந்த மங்கல வேளையில் ‘அரிஓம்’ என்னும் பிரணவமாகிய அமுதத்தைத் தரிசனனுக்கு ஊட்டினார்கள்.

தெள்ளிமை - தெளிவு, அறிவு. அகிலம் - உலகம். ஐந்திலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி. சாத்தியம் - சாதிக்கத்தக்கது; முடிக்கக்கூடியது; உண்மை. தத்துவம் - உண்மைப்பொருள் (பூதம் 5, தன்மாத்திரை 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியம் 5, மனம், அகங்காரம், புத்தி, குணம், பிரகிருதி ஆகிய 5 போல்வன). சற்குணம் - உயர்ந்த குணம். பாக்கியம் - செல்வம். பிறகீரம் - பிறகு ஈரம். ஈரம் மாற்றி - துடைத்து உலர்த்தி. சாத்துதல் - அணிவித்தல். பொற்புறும் - அழகுபொருந்திய; பொற்பு - அழகு. உறுதல் - பொருந்துதல். பூஷணம் - அணிகலன், ஆபரணம். பூட்டி - அணிவித்து. சுதன் - இராசகுமாரன், மகன். தெருவீதி - ஒரு பொருள் தரும் இரு

சொற்கள். தெருவலம் வந்ததைக்குறிக்க கையாளப்பெற்றுள்ளன. பரிமளம் - மிகுமணம்; வாசனை. பச்சைப்பந்தல் - பசுமையான இலை, தழைகளால் அமைத்த பந்தல். குரு - ஆசிரியர். தனையன் - தனயன் - மகன். வேதாந்தம் - வேதமுடிவு, வைதீகம். நாதாந்தம் - ஞான நெறிகளில் ஒன்று. நாதம் - ஒலி, இசை. நாதியர் - இசைவல்லுநரைக் குறித்தது. காணிக்கை - குருதட்சணை. மாணிக்கம் - நவமணிகளில் ஒன்று; செம்மையானது. கனகம் - பொன். மாணிக்கமும் கனகமும் என உம்மை விரிக்க. முக்கனி - மா, பலா, வாழைப் பழங்கள். முப்பணியாரம் - அப்பவகை; அவை - அம்மகுல்லி என்னும் ஒருவகைச் சிற்றுண்டி, பிட்டு, அடை என்பன. விக்கினேசுவரர் - விக்கினம் + ஈசுவரர், விக்கினம் - இடையூறு, தடை, தீவினைகளை விலக்கும் இறைவன், விநாயகன். அரிஓம் - அரி - திருமால், ஓம் - பிரணவம், அ,உ,ம். அர்த்தம், நாதம், விந்து, கலை கலாதீதை, சாந்தி, சாந்தியாதீதை, உன்மணி, மனோன்மணி, புரி, மத்தியமை, பசியந்தி, பரை என்னும் பதினாறு மாத்திரைகளையுடையது பிரணவம். அமுதம் - அரிஓம் என்னும் பிரணவமாகிய உணவு, இது உருவகம்.

***பாடவேறுபாடு*** - 1. செகதலக்கணமும் சாத்திதத்துவமும் 2.மிசைந்திடக் 3. விட்டாரடிவிட்டு 4. அறபபிங்கி ஸ்நானம் பிள்ளைக்காட்டுவித்து - கற்பிப்போர்க்கொரு காரியம் செய்து 5. தெருவெலாம் 6. பந்தலிலிருந்து 7.விராகிகோத்தநல்

***(தரிசனன் திறம்)***

***சம்பை***

**37.** தெரிசனன் வித்தியா குருவைத்திரி வேளையும் - கமல
[1]சரணந்தொழு தேவித்தை தான்பயிற்றி னானே

வேறுநினை வில்லாமல் வித்தைகள்எல் லாம்மனதில்
ஏறவழ காகப்பதி னாறுவய தானான்
விருத்தியாய்த் தங்கள்குல வித்தையில் வியாபாரக்
கருத்தும் திறமைகளும் ஒருத்தருக்குரைப்ப தானான்

தந்தைதாய் இருவருக்கும் சந்தோஷக் கொழுந்தொடி
மைந்தனுக்குஅப் போது[2] செல்வ மணத்துக்கிசைந்[3] தார்கள்
அந்தமுடன் நிமித்தம்பார்த்து அந்தவூர் தனிலேகொத்
தந்தசெட்டி யாரளித்த செந்திருவைக் கேட்டார்.

தரிசனனோ நாள்தோறும் மூன்று வேளையும் தன் ஆசிரியரின் திருவடித்தாமரைகளைத் தொழுது முறையாகக் கல்விகற்கத் தொடங்கினான்.

கல்வியைத் தவிர, வேறு ஒன்றையும் மனத்தாலும் நினைக்காதவனாகப் கற்றுப் பதினாறு வயது நிறைவடைந்தான். கல்வியில் தேர்ச்சிபெற்ற தரிசனன் தங்கள் குலத்தொழிலாகிய வியாபாரநுணுக்கங்களை மற்றவருக்கு எடுத்துச் சொல்லும் திறமையும் பெற்றான். மகிழ்ச்சியடைந்த பெற்றோர் தரிசனனுக்குத் திருமணம் செய்ய விரும்பி ஒரு நல்ல நாளில் சகுனம் பார்த்துக் கொண்டு சென்று காஞ்சிபுரத்திலேயே வாழ்ந்துவந்த கொத்தந்தை செட்டியாரின் மகளை மணம் பேசினார்கள்.

வித்தியாகுரு - கல்விகற்பிக்கும் ஆசிரியர் (தீட்சாகுரு, வித்தியாகுரு என்னும் இருவருள் ஒருவர்). திரிவேளை - மூன்று நேரம், உச்சிநேரம், காலை, மாலை நேரங்கள். கமலசரணம் - திருவடித்தாமரை, கமலம் - தாமரை; சரணம் - திருவடி, பாதம், தாமரை போன்ற திருவடிகள் எனின் உவமை; திருவடிகளாகிய தாமரை எனின் உருவகமாம். பயிற்றினான் - கற்பித்தான் எனப்பிறவினையாக வந்தது; ஆசிரியருக்காயின் பொருந்தும். தெரிசனன் (தான்) பயின்றான் என்பதே முறை; பயிலுதல் தன்வினை - பயிற்றுதல் பிறவினையாகும். மனதில் ஏற - உள்ளத்தில் பதிய. குலவித்தை - குலத்துக்குரிய தொழில், அது வாணிகம். ஒருத்தருக்கு உரைப்பதானான் - வியாபாரத்தொழிலுக்குரிய கல்வியில் தேர்ந்து பிறருக்கும் நுணுக்கங்களை எடுத்துச் சொல்லும் திறமை பெற்றான். சந்தோஷக்கொழுந்து - மகிழ்ச்சி தளிர்த்தல்; மிகுதல். நிமித்தம் - சகுனம். செந்திரு - இலக்குமி; இலக்குமி போன்றபெண்.

**பாடவேறுபாடு** -1. சரணம் தொழுமதிகவித்தை 2. சொல்ல 3. தானே.

*(தரிசனன் திருமணம்)*

### *திரிபுடை*

38. இருவர் களும்மனது ஒருமித் தேகுலம்
ஏற்றபேர் [1]முகூர்த்தங்கள் ஒதவே

பரியம் கோடிபொன் வழங்கினார் - மெத்தப்
பிரிய மாகப் பவழக்கால் நட்டுப்
பசுமையாய்ப் பச்சைப் பந்தல்சோ டித்துப்
பந்து [2]சனங்களும் சிவிகை யாதியர்
சூழ வேமணஞ் செய்ய லானார்

மாமறை யில்வல்ல [3]பேர்கள் - சாத்திரவழி
தப்பா மல்நற் சடங்குமுடிப் பித்து
ஓமம் [4]வளர்த்திமங் கிலியம்
தரிப்பித் தார்பூமி [5]புகழ

சீத னம்பல பணியும் - தந்துதன்
சிறுமி தனைமணம் செய்து கொடுத்தான்
[6]காத லாய்த்தந்தை தாயும் - களித்துக்
கண்காட்சி யடைந்தார்.

இரு வீட்டாரும் அவர்கள் திருமணத்திற்குச் சம்மதித்துத் தங்கள் குலத்துக்கேற்ற முறையில் திருமண ஏற்பாடுகளை மேற்கொண்டார்கள். நாகந்தை செட்டியார் பெண்வீட்டாருக்குக் கொடுக்கும் அன்பளிப்பாக ஒரு கோடி பொன்னை வழங்கினார். பவழக்கால் நட்டுப் பச்சைப் பந்தல் போட்டார். உற்றார் உறவினரும் சிவிகை எடுப்போர் முதலான பணியாளர்களும் சூழ்ந்திருந்து திருமணம் செய்யத் தொடங்கினார்கள்.

மறையுணர்ந்த சான்றோர் சாத்திரமுறை தவறாமல் பலவகைச் சடங்குகளையும் முடித்தார்கள். மக்களெல்லாம் புகழ்ந்து வாழ்த்த ஓமம் வளர்த்தி மாங்கலியம் அணிவித்தார்கள். சீதனப் பொருள்களும் பலவகை நகைகளுமாகக் கொடுத்து திருமணத்தைச் சிறப்பாக நடத்தினார்கள். தாய்தந்தையர் திருமணக்காட்சியைக் கண்டு ஆனந்தம் அடைந்தார்கள்.

ஒருமித்தல் - ஒன்றுபடுதல் சம்மதித்தல். பரியம் - பரிசம், மணமகனின் பெற்றோர் பெண்வீட்டாருக்குக் கொடுக்கும் அன்பளிப்பு. பவழக்கால் - பவழத்தால் ஆன பந்தற்கால். சோடித்தல் - அலங்கரித்தல். பந்துசனங்கள் - உறவினர். சிவிகை - தண்டிகை. சடங்கு - திருமணத்திற்குரிய செயல்முறைகள். ஓமம் - ஓமத்தீ. மங்கிலியம் - மங்கலியம், தாலி. சீதனம் - மகளுக்குக் கொடுக்கும் பொருள்கள். பணி - நகை.

**பாடவேறுபாடு** - 4. வளர்த்திய 5. மகிழ 6. காதலால்.

**சுவடிச்சொல்** - 1. முகுந்தங்கள் 2. சினங்களும் 3. பெயர்கள்.

(தெருஉலா)

**சம்பை**

39. ஆனைதனை சிங்காரித்து அலங்கார மாய்ஏறி
ஞானவான் சுதன்காஞ்சி
நகரில்வலம் வந்தான்

மேளம்பல திசைமுழங்க மின்னார்கள் ஆடிவர
வேளனைய சுதன்காஞ்சி
வீதிவலம் வந்தான்

செழுங்குமா ரன்காஞ்சித் தெருவுலா வியபின்பு
வழங்கினார் மொய்கனக
மலைபோல வேதான்

தாகமுட னேசெய்த விவாகமது [1]நிறைவேறி
யேகியவர் அவர்மனையில்
போகமுடன் வாழ்ந்தார்.

யானையை அலங்கரித்து பேரறிவாளனாகிய நாகந்தையின் மகன் அந்த யானை மீதமர்ந்து காஞ்சி நகரில் வலம் வந்தான். பலவகை வாத்தியங்கள் இசைக்க மகளிர் நடனமாடிவர முருகப் பெருமானைப் போன்ற தரிசனன் காஞ்சி நகரில் வலம் வந்தான். மணமக்களின் நகர்வலம் முடிந்த பின் மக்கள் மணமக்களை வாழ்த்தி அன்பளிப்பை வழங்கினார்கள். அன்பளிப்புப் பொருள்கள் பொன்மலையைப் போலே குவிந்தன. மகிழ்ச்சி பொங்கத் திருமணம் முடிந்த பின் அவரவர் வீடு சேர்ந்தார்கள்.

ஞானவான் சுதன் - சிறந்த அறிவுடையவனாகிய நாகந்தையின் மகன்; சிறந்த அறிவுடைய மகனாகிய தரிசனன் எனினும் அமையும். மின்னார் - மகளிர்; மின்னல் போன்றோர் என்னும் பொருளது. வேள் - மன்மதன், முருகன் எனலுமாம். குமாரன் - மகன். மொய் - பெயரும் அளவும் மொழிந்து மணமக்களுக்குக் கொடுக்கும் அன்பளிப்பு; மொழி என்பது மொய் எனக் கொச்சையாயிற்று. கனகமலை - பொன்மலை. தாகமுடன் - விருப்பமுடன். ஏகி - சென்று. அவரவர் மனை எனக்கூட்டுக. போகம் - இன்பம்.

**பாடவேறுபாடு** - 1. நிறைவேற வேகியவர்.

(நாகந்தையின் அறிவுரை)

## திபதை

40. சீரணி நாகந்தை செட்டியார் மகனே
வாருமை யாளந்தன் வார்த்தையைக் கேளும்

இன்று முதற்கொண்டு இல்லிடை தனிலே
[1]நின்றெந்தக் கவ்வையும் நிறைவேற்றிக் கொள்ளும்

எத்திசை ஏகினும் இரவுதங் காதே
[2]பத்திரத் தினையென்றும் பாரில் விடாதே

துயிலுஞ் [3]சூரியைச் சோர்ந்து விடாதே
அயலவர் ஆட்டிமேல் ஆசைகொள் ளாதே

[4]வாறமா தினுக்கு மதிமயங் காதே
காரணத் திருவாலங் [5]காட்டிற்போ காதே

மொழிதப்பி ஒருத்தரை மோசஞ்செய் யாதே
வழிதப்பிப் பழைசைக்கு மறந்தும்போ காதே

தம்பமாய் இரவினில் தனித்துப்போ காதே
நம்பின பேரைக்கை நழுவவி டாதே

ஆசாரி யர்பத்தி யதுமற வாதே
ஆசாரி யர்கள்சொல் லடிகட வாதே

பத்தர்கள் சித்தர்கள் பரமஞா னியர்கள்
சித்தம் கலங்கவோர் தீங்குசெய் யாதே

நித்திய தருமத்தை நீதவ றாதே
சத்திபங் காளரைத் [6]தான்மற வாதே

[7]வல்லவி தடுக்க வழிநட வாதே
கல்விகற் றோர்மனம் [8]கன்னப்பே சாதே

வர்த்தக ஞாயத்தில் வட்டிகே ளாதே
உத்தமப் புருஷர்கள் உறவி டாதே

அறிவிலாத் துஷ்டரை யாசரி யாதே
திறலுற முறைகளைத் [9]தீர்ப்புபண் ணாதே

என்றநா கந்தைதான் ஈன்றமைந் தனுக்கு
ஒன்றொன்ற தாய்ப்புத்தி உரைத்திடும் போதில்

மற்றுஞ் சுதனுக்கு மாமனார் ஆன
கொத்தந்தை செட்டியும் கூறுவார் உமது

சனகநா கந்தையார் சாற்றிய தெல்லாம்
மனதிலே வையும் மறவாமல் என்றான்

இப்படி மாதுலன் ஈன்றதந் தையரும்
செப்பின மொழியெலாம் தெரிசனன் கேட்டு

நல்லது புத்தியென்று ஆனந்த மட்டில்
எல்லவ ரும்இன்பம் எய்தினர் தாமே.

ஒருநாள் நாகந்தை தன் மகனை அழைத்தார். இன்று முதல் இல்லறத்திலே இருந்து எல்லாவகையான காரியங்களையும் பொறுப்பாகப் பார்த்துக்கொள்; எந்தப் பக்கம் சென்றாலும் இரவு வேறு எங்கும் தங்காதே; கையிலுள்ள கத்தியை எங்கும் விட்டுவிடாதே; தூங்கும் நேரத்திலும் தவறவிட்டுவிடாதே; மற்றவர் மனைவிமேல் ஆசை வைக்காதே; எந்தப் பெண்களையும் கண்டு புத்திமாறி விடாதே; செல்லக்கூடாத இடம் என்ற காரணத்தால் திருவலாங்காட்டுப் பக்கம் போகாதே;

முறையில்லாத முறையில் பிறர் யாருக்கும் மோசம் செய்யாதே; உன்னை மீறியும், மறந்துங்கூட பழையனூர் பக்கம் போகாதே; கோபத்தோடும் பெருமையோடும் இரவில் தனியே எங்கும் போகாதே; உன்னை நம்பியவருக்குத் துரோகம் செய்யாதே; ஆசிரியரை வணங்க மறக்காதே; அவர் சொல்லை மீறி நடக்காதே; இறைவனுடைய அடியவருக்கும் சித்தர்களுக்கும் பெரிய ஞானிகளுக்கும் உள்ளம் கலங்கி இருப்போருக்கும் எப்போதும் தீங்கு செய்ய நினைக்காதே; நாள்தோறும் தருமம் செய்வதில் சிறிதும் தவறாதே; சக்திபங்காளராகிய சிவபெருமானை என்றும் மறவாதே; மனைவி போகாதே என்ற இடத்திற்குப் போகாதே; கற்றவர் மனம் நோகும்படி கடுஞ்சொற்களைப் பேசாதே; வியாபார முறையில் வட்டி வாங்காதே; நற்குண, நற்செயல்களை உடையவர்களைவிட்டு என்றும் விலகாதே; அறிவில்லாத தீயவர்களைப் பின்பற்றி எதையும் செய்யாதே; தீர்ப்பு சொல்வதில் பகைமையைப் பார்க்காதே என்று ஒவ்வொன்றாய்ப் பலவாறான அறிவுரைகளை எடுத்துக் கூறினார். உடன் இருந்து கேட்ட தரிசனனின் மாமனாரான கொந்தந்தையார் மருமகனைப் பார்த்து உன் தந்தை சொன்ன கருத்துகளை எல்லாம் மறவாமல் மனத்தில் வையும் என்று கூறினார்.

தந்தையும் மாமனாரும் கூறிய அறிவுரைகளைக் கேட்ட தரிசனன் நல்லது அப்படியே நடப்பேன் என்றான். அனைவரும் மகிழ்ச்சியடைந்தார்கள்.

சிரணி - நல்ல அழகு. இல்லிடை - வீட்டில். கவ்வை - காரியம், சொல். பத்திரம் - பாதுகாப்பு; துயிலல் - தூங்குதல். சூரி - சுரிகை - கத்தி. சோர்ந்து விடுதல் - சோரவிடுதல் - தவறவிடுதல். ஆட்டி - மனைவி. வாரமாது - வருகிறபெண். மாதினுக்கு - மாதின்மீது உருபுமயக்கம். மதி - அறிவு. மொழிதப்பி - சொன்ன சொல்லைத்தவறி. மோசம் - வஞ்சனை. பழசை - பழையனூர். தம்பம் - கோபம். கைநழுவ - விலகி விடுமாறு. ஆசரியர் - குரு, கற்பித்த ஆசிரியர். பத்தி - பக்தி. கடவாதே - மீறி நடக்காதே. பத்தர் - அடியவர். சித்தர் - அட்டசித்திகளும் கைவரப்பெற்றவர், யோகசித்தர் அணிமா (அணுப்போல் ஆதல்), இலகிமா (பஞ்சினும் நொய்தலாதல்), ஈசத்துவம் (தேவனாதல்), கரிமா (இரும்பு மலையினும் கனத்தல்), பிராகாமியம் (நினைத்த பேரகமேல்லாம் பெறுதல்), பிராத்தி (வேண்டுவன அடைதல்), மகிமா (மிகவும் பருத்தல்), வசித்துவம் (யாவரும் வணங்க நிற்றல்) என்பன அட்ட சித்திகளாம். பரமஞானியர் - மிகஉயர்ந்த அறிவுபடைத்தோர். சித்தம் - உள்ளம். நித்திய தருமம் - நாள்தோறும் செய்யும் நல்ல செயல்கள். சத்திபங்களார் - உமா தேவியை ஒரு பாகத்தில் கொண்டவர், சிவபெருமான். வல்லவி - வல்லபி - மனைவி. வழிநடத்தல் - வெளியில் போதல். கன்னுதல் - கன்றுதல் - கன்றிப்போதல், நைந்துபோதல். ஞாயம் - நியாயம், நீதி. உத்தமப்புருஷர் - நற்குண, நற்செயல்களை உடையோர். உறவு - நட்பு. துஷ்டர் - தீயவர். ஆசரித்தல் - வழிபடுதல், பின்பற்றுதல், திறல் - பகை, மாறுபாடு. ஒன்றொன்றதாய் - ஒவ்வொன்றாக. சுதன் - மகன். சனகன் - தந்தை. மாதுலன் - மாமன். மாதுலன் ஈன்ற தந்தையாரும் - மாதுலனும் தந்தையாரும் எனக்கொள்ள வேண்டும். செப்பின - சொன்ன. ஆனந்தம் - மகிழ்ச்சி. மட்டில் - மிகுதியால். எல்லவரும் - எல்லாரும்.

***பாடவேறுபாடு*** - 1. நிண்ணதக்கவையும் 2. பத்திரனை பாணிவிடாதே 3. சுரிகை 4.வாரமாதற்கு 5. காட்டைப் 6. தானசவாதே 7. வல்லி.

***சுவடிச்சொல்*** - 8. கண்ணப் 9. தீழ்ப்பு

***(தரிசனனும் பூங்கோதையும்)***

***சம்பை***

**41.** தந்தைதாய் உரைத்த புத்தி தவறாமல் தெரிசனனும்
[1]சிந்தையிலுட் கொண்டுமதி மந்திரி யென[2]விருந்தான்

அதுநாளிற் கலியாணம் ஆனபூங் கோதையரும்
[3]ரதிதேவி போல்வளர்ந்து ருதுவாகி னாளே

பலபேருங் கொண்டாடப் பைங்கிளிக்குத் தான்திரட்டிக்
கலியாணம் செய்தார்கள் [4]வெகுதானம் [5]ஈந்தே.

வேண்டுசிலை மாரன்கணை தூண்டவே - இவர்க்குமயல்
பூண்டுசுகித் திருந்தார்கள் ஆண்டுசதிர் ஏற.
எண்ணமற இருவர்களும் இரதிமதன் - எனவாழ்கில்
வண்ணமயி லாரஞ்சாம் வருஷம்கரு வானாள்.

தரிசனன் தந்தையும் தாயும் சொன்னதைக் கேட்டு அவற்றின்படியே அறிவுள்ள அமைச்சனைப் போல நடந்து வந்தான். சிறிய வயதிலேயே திருமணம் செய்யப்பட்ட பூங்கோதை இரதியைப் போல வளர்ந்து பூப்படைந்தாள். மக்கள் புகழும் அளவிற்கு மஞ்சள் நீராட்டுச் சடங்குகளைச் செய்து பலவகைத் தருமங்களையும் செய்தனர். தரிசனனும் பூங்கோதையும் மன்மதனும் இரதியும் போல நான்கு ஆண்டுகள் மகிழ்ந்திருந்தார்கள். ஐந்தாம் ஆண்டில் பூங்கோதை கருவுற்றாள்.

சிந்தை - உள்ளம். மதிமந்திரி - அறிவுமிகுந்த அமைச்சன். ரதிதேவி - மன்மதன் மனைவி. ருதுவாதல் - பூப்படைதல், பருவமடைதல். திரட்டிக்கலியாணம் - திரட்டுக்கலியாணம், பூப்படைந்த பெண்ணுக்குச் செய்யும் சடங்கு. வெகுதானம் - பலவகை தருமங்கள், வெகு - பல. சிலைமாரன் - (கரும்பு) வில்லையுடைய மன்மதன். கணை - (மலர்) பாணம், அம்பு. மன்மதன் - மனத்துக்குக் கிளர்ச்சியைக் கொடுப்போன், வசந்தகாலம், நிலவு, மணி, மேடை, மணற்குன்று, பூஞ்சோலை, மாலைநேரம், மலர், மணம், அழகு முதலியவற்றைத் தன் பரிவாரங்களாகக் கொண்டவன். மயல் - மையல் - மோகம். சதிர் - சதுர் - நான்கு. கருவானாள் - கருவுற்றாள்.

**பாடவேறுபாடு** - 1. சிந்தையுடன் 2. நடந்தான் 3. மதிதேவிபோல் அவரும் 4.சிலதானம்.

**சுவடிச்சொல்** - 5.ஈய்ந்தே.

(பூங்கோதைக்குச் சீமந்தம்)

**ஏகதாளம்**

42. பரமசிவன் கிருபையால் பாலன்உண் டாகவே
தெரிசன வணிகனும் இதையம் மகிழ்ந்தான்

நாகந்தை யார் நல்ல நாயகி யார்களிப்
[1]பாகந்த மாய்த்துறை யோகந்தம் ஆனார்

நாமிந்த உடல்தப்பிப் போமுந்து பேர்மை
தாமுந் தரித்ததெனச் சீமந்தம் செய்தார்.

இறைவன் அருளால் பூங்கோதை கருவுற்றதையறிந்த தரிசனன் மனம் மகிழ்ந்தான். நல்லநாயகியும் நாகந்தையும் நாம் காலமாவதற்குமுன் பேரக்குழந்தையைப் பெறுவதற்குரிய பேறு பெற்றோம் என்று எண்ணி மகிழ்ச்சியடைந்து சீமந்தக் கல்யாணமும் செய்து வைத்தார்கள்.

கிருபை - அருள். இதையம் - மனம். கந்தம் - நுகர்தல். முந்து - முந்தி - முன்னே. பேர்மை - குழந்தைப்பேறு பெறும் தன்மையைக் குறித்தது. சீமந்தம் - கருப்பம் தரித்த ஆறு அல்லது எழாம் மாதத்தில் செய்யும் சடங்கு, முதுகு நீரிடுதல் எனப்படும்.

***பாடவேறுபாடு*** - 1. பாய்கந்த மாத்திரை.

**(நாகந்தை - கொத்தந்தை மகிழ்ச்சி)**

## திரிபுடை

43. மாதர் புகழ்பூங் கோதையாள் - பத்து
மாத மானது சென்றபின்
சந்தி ரோதயங் களைப்போல் - சுதாவை
யப்போது ஈன்றாள்.
[1]சீர்எப்போது முண்டான - நாகந்தை
செட்டி யார்மகன் வயிற்றி லேயொரு
பேரப் பிள்ளையுண் டாச்சு தெனமனம்
பூரிப் பாகிராய பூரி சர்க்கரைகள்

அவிரை யந்த நாளில்
சிவனடி யார்க்கும் [2]ஈந்தனன் - தெய்வச்
சந்தமெல் லார்க்கும் வழங்கினான்
மாயன் போலேதேவர் ஆலயம் - எதுக்கும்
பாலாபி ஷேகமொடு சிறப்பிடு வித்தான்[3] - உற்ற
பாலர் எவர்க்கும் நல்விருந்த திட்டான் - தமிழ்ப்
பாவல ருக்கே நேர்த்தி யானபொற்
பாகை காலுவை போர்த்துப் பூஷணம்

பூட்டிக்குறை யாற்றினான் - புலவர்
எல்லாம்மிக வாழ்த்தி னாரே - அந்த

நகரத் துள்ளார் எல்லாரும் - [4]கொத்தந்தை
செட்டி யாருஞ்சந் தோஷமாய் - நாகந்தை

பேரனைத் தினமும் ஒருதரம் வந்து காண்பார்.

பெண்கள் எல்லாம் புகழும் அழகுவாய்ந்த பூங்கோதை பத்துமாதம் சென்றபின் ஒருமகனைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தை பூரண சந்திரன் உதித்தது போன்ற அழகுடன் விளங்கியது. நாகந்தை பேரப் பிள்ளை பிறந்தது என்று மனம் மகிழ்ந்து சிவனடியார்க்கெல்லாம் மணமுள்ள சந்தனம் வழங்கி, இனிப்புப் பூரியும் சர்க்கரையுமாகிய தேவருணவை வழங்கினார். திருமால் முதலான தேவாலயங்கள் எல்லாவற்றிலும் பாலாபிஷேகம் முதலான சிறப்புகள் நடைபெற ஏற்பாடுகளைச் செய்தார். இளையோருக்கு விருந்தளித்துச் சிறப்பித்தார். தமிழ்ப் பாவலர்களுக்குப் பொன்னாலான தலைப்பாகை அளித்தும், மேற் போர்வை போர்த்தியும், அணிகலன்களை அணிவித்தும் குறை நீக்கிச் சிறப்பித்தார். புலவர் பெருமக்களும் வாழ்த்தினார்கள். கொத்தந்தையாரும் நகர மக்களும் நாள்தோறும் குழந்தையை வந்து பார்த்துச் சென்றார்கள்.

சந்திரோதயம் - சந்திரன் உதயம்; நிலவு தோன்றுதல். சுதா - சுதன்-மகன். பூரிப்பு - மிகுந்த மகிழ்ச்சி. ராயபூரி - இராயபூரி - இராயன் - அரசன்; பூரி வகையில் உயர்ந்தது. அவிரை - அவிர்+ஐ; அவிர் - அவிப்பாகம், தேவருக்களிக்கப்படும் உணவு. தெய்வச்சந்தம் - தெய்வீக மணமுடைய சந்தனம்; தெய்வம் - மணம்; சந்தம் - சந்தனம். எதுக்கும் - எல்லாவற்றிற்கும் என்ற பொருளில் வந்தது. பாகை - தலைப்பாகை. சாலுவை - சால்வை - மேற்போர்வை. பூஷணம் - அணிகலன்; நகை. குறையாற்றுதல் - குறைதீர்த்தல்; குறைநீக்குதல். ஒருதரம் - ஒருமுறை.

**பாடவேறுபாடு** - 1. சிறெப்போதும் 2. உதவினன் 3. உரவாவர்க்கும் 4. கொத்தந்தையாருஞ்

**சுவடிச்சொல்** - 2. ஈய்ந்தணன்.

**வசனம்**

நாகந்தை செட்டியார் குமாரனான தெரிசன செட்டியாருக்குச் சந்ததி உண்டான பின்பு செட்டியாரும் மகனையழைத்து நமக்கானால் முதுமை யாச்சுதே எப்பவோ[1] எந்நேரமோ தெரியாது; சரீரம் நித்தியம் அல்லவே. ஆனபடியினாலே கடனுடன், பத்திரம் பார்ப்பு, கணக்கு வழக்கு, இதுவது வென்று சகலமும் தெரியப்படுத்தினார். தெரிசனசெட்டி சகலமும் பார்த்துக்கொண்டு தந்தைக்குப்

பிறகு தமக்கல்லோ பாரம் என்று போந்த புத்தியாய்ப் புத்திரன் இருந்தான். (5)

சந்ததி - பிள்ளை. சரீரம் - உடல். நித்தியம் - நிலையானது, அழியாதது. கடன், பத்திரம் பார்ப்பு, கணக்குவழக்கு, இதுஅது என்பன இரட்டைச் சொற்களாய் வழக்கில் வருவன. பாரம் - சுமை, கடமை, பொறுப்பு. போந்த - போதுமான, உரிய.

**சுவடிச்சொல்** - 1. என்னேரமோ.

*(நாகந்தை மறைவு)*

## திரிபுடை

44. போக பூமியில் வாழ்ந்த நாகந்தை
யோக மாய்ச்சிவத் தியானம் சாதித்து
தேகந் தனைவிட்டு நீங்கியே - பர
லோகம் போனார்.

செந்து பந்து செனங்கள் தெரிசன
செட்டி யும்மதி மறந்து நிலத்தினில்
வீழ்ந்து புரண்டழுது - மனம்மெத்த
சோர்ந்து தளர்ந்தார்.

ஊரும் உலகமும் கூடியே - உற
முறையோர் அனைவோருங் கூடியே - பேர்
ஆர வாரமதாய்ச் சந்தனக்
கட்டை யடுக்கினாரே.

செய்யும் சடங்கதெல் லாம்செய்தே - தன்மம்
[1]செய்து பிரேத விமானம் ஏற்றியே
வைய மீதுளர் உருக எடுத்தனர்
ஐய விடத்தே கொண்டுபோய்க்
கட்டை மீது வளர்த்தி
நெய்க்கு டங்கள்சொரிந்து அங்கி மூட்டியே- துயர்
அண்டொ ணாதுகொண் டாத்திய - சலத்
தண்டை போனார்
மூழ்கி னார்மனை அணுகி னார்உற

முறையெ லாம்வந்து வினவினார் - அன்றைப்
பொழுது போய்மற்றை நாளிற் பால்தெளி
கழுவினாரே
[2]உரிமை யாய்த்தினம் எண்ணியே - பிண்டம்
உதவி நாகந்தை யார்க்குத்தான் - செய்யும்
[3]கரும மானதெல் லாஞ்செய்தே - [4]கல்லுக்
கடனும் கழித்தான்.

கருமபூமியாகிய இந்த நிலவுலகத்தில் வாழ்ந்து வந்த நாகந்தையார் சிவத்தியானத்திலே ஈடுபட்டுச் சிலநாளில் மோட்சமடைந்தார். நாகந்தையார் உயிர் நீங்கியதைக் கண்டு தரிசனனும் உற்றார் உறவினரும் புரண்டு அழுது சோர்ந்து கிடந்தார்கள்.

நகரமக்களும் உறவினரும் சேர்ந்து ஆடம்பரத்தோடு சந்தனக்கட்டைகளை அடுக்கினார்கள். இறந்த உடலுக்கான சடங்குகளைச் செய்து, அலங்கரித்து விமானத்தில் ஏற்றி எடுத்துச் சென்றார்கள். நகர மக்கள் உள்ளம் உருகி வருந்த கட்டையின் மீது வைத்தார்கள். குடம் குடமாக நெய்யை ஊற்றித் தீமூட்டினார்கள். தரிசனன் முதலானவர்கள் அடைந்த துயரத்துக்கு ஆறுதல் கூறி நீரில் மூழ்கச் செய்து, அனைவரும் மூழுகிப் பின் வீடு சேர்ந்தார்கள். உறவினர் வந்து துயரச் செய்தியைக் கேட்டார்கள். மறுநாள் பால் தெளித்தலாகிய சடங்கைச் செய்தார்கள். தரிசனன் நாள்தோறும் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்து தன் தந்தைக்குச் செய்ய வேண்டிய கல்லுக்கடன் முதலானவற்றைச் செய்து முடித்தான்.

போகபூமி - கருமபூமி, நல்வினை தீவினைகளுக்குரிய நிலவுலகம். யோகம் - தியானம், அனுட்டானம். சாதித்தல் - செய்துமுடித்தல். பரலோகம் - மேலுலகம், மோட்சம். செந்து - உயிருள்ளவை. பந்து - உறவு. மதிமறந்து - அறிவு மயங்கி, தன்னை மறந்து. பேர் ஆரவாரம் - மிகுந்த ஆடம்பரம். பிரேத விமானம் - பாடை, பிரேதம் - பிணம்; விமானம் - அலங்கரிக்கப்பட்ட பாடை வையமீதுளர்- உலகிலுள்ளோர், ஊரில் உள்ள மக்கள். உருக - மனம் வருந்த. அங்கி - தீ. அண்டொணாது - நெருங்காதபடி. ஆத்துதல் - ஆற்றுதல் என்பதன் திரிபுச்சொல்; ஆற்றுதல் - துயர்தீர்த்தல். சலத்தண்டை - தண்ணீரின் அருகில். அணுகினார் - அடைந்தார். வினவினார் - விசாரித்தார்; அளவளாவி ஆறுதல் கூறினார். பால்தெளி - சவ அடக்கத்தின் மறுநாள் செய்யும் ஒரு சடங்கு. பிண்டம் - பிதுர் தேவதைகளுக்கு இடப்படும் சோற்று உணவு. கல்லுக்கடன் - மரணமடைந்தவருக்குச் செய்யும் இறுதிச் சடங்கு. கழித்தான் - செய்து முடித்தான்.

**பாடவேறுபாடு** - 1. செய்து விமானமேறியே 3. கருமமானதுஞ் 4. கல்லுங்கடனும்.

**சுவடிச்சொல்** - 2. உருமையாய்.

(தரிசனன் பழையனூர் பயணம்)

## ஏகதாளம்

45. தாதை மடியவே தன்னிட மனைவியின்
மீதுள வாசையப் போது சிறுகினான்

நாலா மூலையும் தாம்போய் - வர்த்தகம்
மேலாய்ச் [1]செய்யவேமிக மாலா கினனே

[2]வடக்குப் பழையனூர் வரைக்கே - ஒருதரம்
நடக்க நினைவிவனுக்கு எடுத்தப் போது
அழிவு வருமிதென்று அறியான் - இவன்இந்தப்
பழைய னூர்க்குவரப் பயணமிட் டானே

பத்திரம் இருக்கின்ற [3]வலிமையினால் - எந்தச்
சத்துரு வரினும் செயித்திடுவேனே.
நெஞ்சிற்பெண் பேய்தனக் கஞ்சுவர் - அறிவது
கொஞ்சமென் றேயிவன் மிஞ்சினன் வரவே.

தந்தை இறந்தபின் தன்மனைவியின் மீதுள்ள ஆசையைச் சிறிதுசிறிதாகக் குறைத்துக் கொண்ட தரிசனன் நான்கு திசையிலும் மூலைத் திசைகளிலுமாகச் சென்று தங்கள் குலத் தொழிலாகிய வியாபாரத்தைப் பெருக்குவதில் மிகவும் கண்ணுங் கருத்துமாகிவிட்டான். வடக்கே பழையனூர் வரை சென்றுவர வேண்டுமென்று நினைத்தான். பழையனூரில் தனக்கு வரவிருக்கும் அழிவை நினைத்துப் பார்க்கவில்லை. தன்னிடம் வாள் இருக்கிறது என்ற தைரியத்தாலும், எந்தப் பகைவரையும் வென்றுவிட முடியும் என்ற துணிவாலும், பெண் பேய்க்கு அஞ்சுவது அறிவற்ற செயலாகும் என்று கருதியவனாய்த் தனக்கு இருந்த தடையை மீறிப் புறப்படத்திட்டமிட்டான்.

தாதை - தந்தை. சிறுகுதல் - குறைதல். சிறுகினான் - குறைத்துக் கொண்டான். நாலாமூலை .- நான்கு பக்கமும் உள்ள ஊர்கள். மாலாகினான் - விரும்பினான்; மால் - ஆசை, விருப்பம். நினைவு எடுத்தது. எண்ணம் தோன்றியது. இது - பழையனூர் செல்லும் இச்செயல். பயணமிடுதல் - புறப்படுதல். பத்திரம் - சுரிகை, கத்தி. சத்துரு - பகைவன். அஞ்சுவர் - பயப்படுவர் (அஞ்சுபவரது அறிவு குறைந்த அறிவாகும் என்று எண்ணி). வரவுமிஞ்சினான் - வருகை மீறினான்; தடைக்கு மீறிப் புறப்படத் தொடங்கினான் என்ற பொருளில் அமைந்தது.

பாடவேறுபாடு - 1. செய்யமிக 2. வடக்கே
சுவடிச்சொல் - 3. பலுமையினால்

(தாயிடம் இசைவு வேண்டுதல்)

சம்பை

46. இப்பொழுது பழையனூர்
ஏகியே வரவெனக்கு
[1]அப்பணை தாவென்று - [2]பெற்ற
அன்னைபதம் பணிந்தான்
ஆலம்பொசித் தான்இருக்கு
மாலவனத்து யான்மேவிக்
கோலங்களைப் பார்த்துவரக்
கொடுஞ்சிலவென் றானே.

அத்திசையைப் பாராமல் அன்னமெனக் கிறங்காது
நித்திரையும் பிடியாது [3]உத்தாரம்சொல் என்றான்

பழையனூர் சென்றுவர எனக்கு உத்தரவு தாருங்கள் என்று கூறித் தன்தாயின் திருவடிகளில் பணிந்தான். நஞ்சை உண்டவனாகிய நீலகண்டன் எழுந்தருளியுள்ள திருவாலங்காட்டுக்குச் சென்று அத்திருத்தலத்தின் சிறப்புகளையெல்லாம் கண்டு வர உத்தரவு தரவேண்டும் என்று வேண்டினான். வடக்குத் திசையாகிய அந்தப் பக்கத்தைக் கண்டு வராவிட்டால் எனக்கு உணவு செல்லாது;தூக்கமும் வராது. எனவே உத்தரவு கொடுங்கள் என்று வேண்டினான்.

ஏகிவர - சென்றுவர. அப்பணை - உத்தரவு. பதம் - பாதம், திருவடி(கால்). ஆலம்பொசித்தான் - சிவபெருமான்; ஆலம் - நஞ்சு, விஷம்; பொசித்தல் - புசித்தல், உண்ணுதல். தேவரும் அசுரரும் மந்திரமலையை மத்தாகவும், வாசுகி என்னும் பாம்பைத் தாம்பாகவும் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் கடலிலிருந்து நஞ்சு வெளிப்பட்டது. அதைக்கண்டு தேவர் முதலான அனைவரும் அஞ்சி, ஓடிச் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவபெருமான் அந்த நஞ்சை உண்டு நீலகண்டன் எனப்பெயர் பெற்றனர். இந்த வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு திருவாலங்காட்டு இறைவனை 'ஆலம் பொசித்தான்' என்றார் நூலாசிரியர். ஆலவனம் - ஆலங்காடு; திருவாலங்காடு என்னும் திருத்தலம். வனம் - காடு. மேவி - அடைந்து. கோலங்கள் - அழகு; அலங்காரம்; திருவாலங்காட்டின் சிறப்புகளைக் குறித்தது. கொடும்சிலவு - சிலவுகொடும்; சிலவு - செலவு - உத்தரவு. அன்னம் - உணவு. உத்தாரம் - மறுமொழி; பதில்.

**பாடவேறுபாடு** - 3. உத்திரஞ்சொல்
**சுவடிச்சொல்** - 1. அப்பனைத்தாவென்று 2. பெத்தவன்னை.

### வசனம்

இந்தப்படி தெரிசன செட்டியார் மாதாவை [1]அப்பனை கேட்டபொழுது பெற்றதாய் [2]மெத்த விசாரத்தை யடைந்து பிள்ளைக்குப் புத்தி யென்ன சொல்வாள். (6)

**சுவடிச்சொல்** - 1. அப்பனை 2. மெற்ற.

**(அன்னையின் அங்கலாய்ப்பு)**

### நட்டகுத்தரு

47. இந்த நினைவுனக்கு எடுத்தது மகனே - உனக்
கென்னகுறையா [1]யிருக்குது நீபோக மகனே - நான்
சந்ததிக்கு உந்தனைநான் தவம்செய்து [2]பெற்றேனே மகனே - உன்
தகப்பன் மரித்த தணல்இன்னம் வேகுதே மகனே - அந்தச்
சிந்தை விசாரமுனக் கில்லையோதரன் மகனே - முன்னம்
செப்பின புத்தி சிதைத்துவிட்டாயோ மகனே - மதி
மந்திரி யாம்புத்தி மானென் றிருந்தேனே மகனே - உன்
மனத்தினில் இவ்வாசை வரத்தகு மோதான் மகனே.
கோத்திரம் சொல்லக் குமாரன்இல் லாதேநான் மகனே - சத
கோடிபொன் னைத்தன்ம தானம்செய் தோமே மகனே
குறைமாற்ற நீயெந்தன் வயிற்றில் பிறந்தாயே மகனே - வேத
வாக்கியத் தோர்களைச் சாத்திரம் கேட்டோமே மகனே - அவர்
பார்த்துனக் குக்குல பாதகம் என்றாரே மகனே - அந்தப்
பாவத்தினால் பெண்பேய் கொள்ளுமென்றாரே மகனே - அது

[3] தீர்த்து விடுமென்று திரவியம் தந்தோமே மகனே - ஓமத்
தீக்குள் சுரிகைஉண் டாக்கிக் கொடுத்தாரே மகனே - அந்தச்
செல்வப் பழசைக்குப் போகப் படாதடா மகனே -
போனால்
சென்மப் பழியால் உன் சீவன்போம் என்றாரே மகனே
இப்படிச் சொல்லியப் பிராமணர் சுரிகை கொடுத்தாரே
மகனே - அதைத்
தொட்டிலின் காலுடன் [4] கட்டிவைத் தோமே மகனே -
உன்னை
அல்லும் பகலும் தடவி வளர்த்தோமே மகனே - எந்தன்
ஆவிவிட் டால்கொள்ளி யார்போடு வாரடா மகனே -
பிள்ளை
வல்லவி யைவிட்டு மாளவோ [5] போகிறாய் மகனே - என்
வார்த்தையைக் கேள்அப [6] கீர்த்தியைச் செய்யாதே மகனே.

பழையனூர் செல்ல விடை கேட்ட மகனை நோக்கித் தாய் நல்லநாயகி கூறுகிறாள் - மகனே! இந்த எண்ணம் உனக்கு ஏன் வந்தது? இங்கே உனக்கு என்னகுறை? அங்கே போகப் போகிறேன் என்கிறாயே? நான் உன்னைத் தவம்செய்து பெற்றேனே! உன் தந்தை இறந்து அவர் உடலுக்கு வைத்த தீ இன்னும் அணையக்கூடவில்லையே! அவர் இறந்தது பற்றிய வருத்தம்கூட உனக்கு இல்லையே! உன் தந்தை சொன்ன புத்திமதிகளை அழித்துவிட்டாயே! சிறந்த ஆலோசனைகளைக் கூறும் அறிவுள்ளவன் என்றிருந்தேனே! உன் மனத்தில் இப்படி ஒரு ஆசை வரலாமா? எங்கள் கால்வழிக்கு ஒரு மகன் வேண்டும் என்பதற்காக நூறுகோடி பொன்னைத் தானதருமம் செய்தோம். எங்கள் குறையைப் போக்க நீ வந்து பிறந்தாய். சோதிட அறிஞர்கள் சாத்திரம் பார்த்து உனக்குக் குலபாவம் இருக்கிறது; அதனால் பெண் பேய் உன்னைக் கொல்லும் என்றார்கள். அந்தப் பாவத்தைப் போக்கவேண்டிப் பொருள் கொடுத்தோம்.

அவர்கள் ஓமத்தீ வளர்த்து அதன்மூலம் ஒரு வாளைப் பெற்றுக் கொடுத்தார்கள். பழையனூர் பக்கம் போகக்கூடாது; போனால் முற்பிறவியின் பாவத்தால் உன் உயிருக்கே ஆபத்துவரும் என்றும் கூறிச் சென்றார்கள். அவர்கள் கொடுத்த கத்தியை உன் தொட்டிலில் கட்டிவைத்தோம். இரவும் பகலுமாக உன்னைத் தடவி வளர்த்தோம். நான் உயிர்விட்டால் எனக்கு யார் கொள்ளி போடுவார்கள்? உன் மனைவியையும் மகனையும் விட்டு இறப்பதற்கா பழையனூர்

நோக்கிப்போகப்போகிறாய்? என் பேச்சைக்கேள்! பழியைத் தேடிக்கொள்ளாதே! என்றெல்லாம் கூறினார்.

நினைவு -எண்ணம். சந்ததி - தலைமுறை; பரம்பரையை நிலைநிறுத்தும் குழந்தை. மரித்தல் - இறத்தல். தணல் - தீ. விசாரம் - வருத்தம். செப்பிய - சொன்ன. சிதைத்தல் - அழித்தல். புத்திமான் - அறிவுடையவன். கோத்திரம் - ஒரு குடும்பத்தின் கால்வழி; ஒருசாதிப் பிரிவு. சதகோடி - நூறுகோடி; சதம் - நூறு; கோடி - நூறு லட்சம் அளவு. மாற்ற - நீக்க; போக்க. வேத வாக்கியத்தோர் - மதிக்கத்தகுந்த சான்றோர். சாத்திரம் - வாழ்க்கைநெறி, சடங்கு ஆகியவற்றைக் கூறும் நூல்;இங்கு - சோதிடத்தைக் குறித்தது. குலபாதகம் - குலத்தால் ஏற்படும் பாதிப்பு; பாவம். கொள்ளுதல் தனக்கு உரிமை ஆக்கித் கொள்ளுதல்; பற்றிக் கொள்ளுதல். திரவியம் - பொருள், பெருஞ்செல்வம். ஓமத்தீ - ஓமம் வளர்த்திய தீ. சுரிகை - கத்தி. பழசை - பழையனூர். ஜென்மப்பழி - பிறவியால் ஏற்பட்ட தீங்கு. சீவன் - உயிர். போம் - போகும்; நீங்கும். அல் - இரவு. ஆவி - உயிர். கொள்ளி - பிணத்திற்கு வைக்கும் தீ. வல்லவி - மனைவி. அபகீர்த்தி - புகழில்லாமை, நிந்தை, பழி.

**பாடவேறுபாடு** - 1. யிருக்குதங்கே போகு 3. தீத்திவிடுமென்று கட்டிவையென்றாரே.

**சுவடிச்சொல்** - 2. பெத்தேனே 3. தீத்திடுமென்று 5. போகுறாயி 6.கீற்தியை.

**(தரிசனனும் தாயும்)**

## திரிபுடை

48. அன்னை யானவள் இந்த விதம் சொல்லி
அங்க லாய்த்தவள் வேண்டவே - அவன்
என்ன சொல்லினும் இனியி ரேனெனப்
பன்னிச் சொல்லுவான்.
[1]பெற்ற தாய்சொன்ன புத்தியாம் - [2]முத்ததை நீர்
தள்ளிப் போறேன்போ றேனேன்று
இற்ற நாளுமில் லாத அவமதி
யுற்ற தென்ன
பழைய னூர்வழி மேவி னால்தனி
வழியு மென்றுமுன் னாளிலே - மறை
மொழியி லேசொல்லி யிருக்கச் சேயந்த
வழிசெல் வாரோ.

என்ன காரியம் என்ன கவையுமக்கு
என்ன யோசனையிது - நன்றல்ல
என்னை வேண்டியிப் பயணம் தனைத்தவிர்
என்று பணிந்தாள்.

தாயானவள் பலவாறு வருந்திக் கூறிய வார்த்தைகளைச் சிறிதும் மதியாமல் நீ என்ன சொன்னாலும் இனிநான் இங்கே இருக்கமாட்டேன் என்று கூறினான் தரிசனன். தாய் மீண்டும் அவனை நோக்கி மகனே! பெற்றதாயின் புத்திமதியாகிய முத்துகளை அலட்சியம் செய்து போகிறேன் என்கிறாய்! என்று மில்லாத வெறுப்பு இன்று ஏன் ஏற்பட்டது? பழையனூர் வழி சென்றால் அது உனக்குத் துணை இல்லாத தனி வழியாகிவிடும் என்று சோதிடர் கூறியுள்ளனர். அந்தவழியில் செல்லலாமா? உனக்கு அங்கு என்ன வேலை? என்ன தேவை? இது என்ன எண்ணம்? என்னைப் பற்றியாவது(எனக்காகவாவது) இந்தப் பிரயாணத்தை விட்டுவிடு என்று வேண்டினாள்.

அங்கலாய்த்தல் - வருந்துதல், துக்கித்தல். பன்னி - மீண்டும் மீண்டும் (சொல்லுதல்). புத்தியாம் முத்து - அறிவு சொல்லுதலை முத்தாக உருவகித்துக் கூறுதல். இற்றநாள் - இற்றைநாள் - இன்றைய நாள்வரை. அவமதி - வெறுப்பு, நிந்தை. மேவுதல் - அடைதல். தனிவழி - துணையில்லாத பிரயாணம். மறைமொழி - வேதமொழி, இங்கு சான்றோர் கூறிய கூற்று. கவை - தேவை; அறிவு எனலும் ஆம். என்னை - என்ன. தவிர் - விட்டுவிடு.

சுவடிச்சொல் - 1.பெத்ததாய் 2. முற்றதை.

(கொத்தந்தையின் வருத்தம்)

**சம்பை**

49. அந்த வேளையில் மாம னார்வந்து மருமகனிட
சந்திர வதனம்பார்த்துத் தான்என்ன புகல்வான்

பொல்லாத விடமென்று போகவேண் டாம்என்றால்
நில்லாமல் நீபோற வல்லாண்மை [1]தீதே

சிறியாருக்கு அறியாது தெரியச் சொன் னால்அதனைக்
[2]குறியாயுற் றவர்வாழ்வார் நிறைவாகத் தானே

போறதே போக்காகப் போறவருக்கு ஆர்சொலினும்
ஏறுமோ ஏறாதேயுன் இச்சையென்ன செய்வோம்.

சிறுபிள்ளை யாய்எதுவும் தெரியார்க்குச் சொல்லாமல்
அறிவுதிறமை வல்லவர்க்கு ஆருமென்ன சொல்வார்

பிரமையாய்ப் போறவனைப் பிடிக்கவச மோபூருவ
[3]கர்மம் அவர்க்கும்செய்யும் மர்மம்எவர் கண்டார்

சொல்லுவது மெய்யாலுன் வல்லவியும் கூடவர
நல்லதென்று மாமன்அவன் இல்லினுக்குப் போனான்.

தாய் புத்திமதி சொல்லிக் கொண்டிக்கும்போது அங்கே தரிசனனின் மாமனார் கொத்தந்தைவந்து மருமகன் அழகிய முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார். நீ விரும்புவது பொல்லாத இடம்; அங்குப் போக வேண்டாம் என்றால் அதைக் கேட்காமல் நான் போவேன் என்று பிடிவாதம் பிடிப்பது நல்லதல்ல. அனுபவமில்லாத சிறியவர்களுக்குத் தெரியாததை எடுத்துச் சொன்னால், அதை ஏற்று நடப்பவர்கள் மகிழ்வோடு வாழ்வார்கள். தான் போனதே போக்கு என்ற கொள்கை உடையவர்களுக்கு யார் எதைச் சொன்னாலும் ஏற்காது. உன் விருப்பம்; நாங்கள் என் செய்வோம்? நல்லது எது? தீயது எது? என்பதைப் பகுத்து அறிய முடியாதவர்களுக்கே புத்திமதி சொல்வார்கள். அறிவும் திறமையும் உள்ளவர்களுக்கு யாரும் எதையும் சொல்ல வேண்டியிருக்காது. அறியாமையால் மதிமயங்கிப் போகிறவனைப் பிடித்து நிறுத்தமுடியுமா? முன்வினைப்பயனால் அவர்களுக்கு ஏற்படவிருக்கும் இரகசியங்களை யாரால் அறியமுடியும்? சொல்வதைக் கேட்பாயானால் உன், மனைவியையும்கூட அழைத்துச் செல்லுவதே நல்லது என்று கூறிவிட்டுத் தம் வீட்டுக்குச் சென்றார்.

சந்திரவதனம் - நிலவு போன்ற (அழகிய) முகம். புகலுதல் - சொல்லுதல். வல்லாண்மை - பிடிவாதமான வலிமை. சிறியார் - அனுபவமில்லாதவர். குறியாய் - நோக்கமாக. நிறைவாக - முழுமையாக;மகிழ்வாக. ஏறாது - உள்ளத்தில் ஏற்காது. இச்சை - விருப்பம். பிரமை - அறியாமை, மயக்கம். வசமோ - முடியுமா? பூர்வகர்மம் - ஊழ்வினை, பழவினை. மர்மம் - இரகசியம். வல்லவி - மனைவி. இல் - வீடு.

**பாடவேறுபாடு** - 1. என்னே? 3. கர்மவனுகூலஞ் செய்யும்.

**சுவடிச்சொல்** - 2. குறியாயுத்தவர்வாழ்வா.

(உறவினர் பேச்சு)

## திரிபுடை

50. [1]மற்றும் உறவினர் வந்து தெரிசனன் - தன்னையே
பார்த்து ஏனையாஇந்தப் புத்திதனை நினைத்தீர்
முன்னாள் சொல்லை[2] வியர்த்த மாக்கி - எதிர்
பள்ளங் கிணறு இருக்குதெனச் சொல்லி இரு
கண்ணானது இல்லாத பேர்களும் - குதிப்பன்
என்றதில் குதிப்பரோ - [3]சற்றும்
[4]மதியில்லாதே.
போகொணா தென்ற பழைய னூருக்குப்
போகக் காரியம் என்ன - உம்மிடத்
திரேகம் மிகச்சுகி யாச்சுதே - இந்தத்
தாகம் வேண்டாம்.
எமக்கெலாம் அறிவு உரைக்கும் உமக்கினி
எவர் சொல்வார்
சொன்னாலும் மனதினில் உமக்குச்சரிப் படுமோ
தம்முடக் கணக்கமைக்க வேணும்.

தொடர்ந்து தரிசனின் உறவினர் வந்தார்கள். தரிசனனைப் பார்த்து ஏன் இந்த எண்ணம் தோன்றியது? முன்னாளிலே சொன்ன சொற்களையெல்லாம் பாழாக்கிவிட்டுப் போகக் கூடாது என்ற பழையனூருக்குப் போக வேண்டிய அவசியம் என்ன? எதிரில் பெரிய கிணறு இருக்கிறது என்று சொல்லிய பிறகு இரண்டு கண்ணும் தெரியாதவன் சற்றும் அறிவில்லாமல் நான் குதிப்பேன் என்று கூறுவானோ? உம் உடம்பு மிகவும் சுகம் பெற்றது. இந்த ஆசை உமக்கு வேண்டாம். எங்களுக்கெல்லாம் புத்திமதி சொல்லி வரும் உமக்கு நாங்கள் என்ன சொல்லமுடியும்? சொன்னாலும் அது சரியென்றுபடுமா? தாம் செய்வதைத் தாமே பொருத்தமாகச் செய்யவேண்டும் என்று சொல்லிச் சென்றார்கள்.

வியர்த்தம் - வீண், பயனில்லாமை. குதிப்பன் - குதிப்பேன் என்னும் தன்மை ஒருமை வினைமுற்று, அன் ஈறு பெற்று வந்தது. மதி-அறிவு, புத்தி. போகொணாது - போக ஒண்ணாது என்பது இடைக்குறையாகியது. திரேகம்- தேகம், உடல். சுகியாதல் சுகம்பெறுதல். தாகம் - ஆசை, அமைக்க - பொருந்தச்செய்ய.

**பாடவேறுபாடு** - 2. விரத்தமாக்கி 4. மதிப்பில்லாதே.

**சுவடிச்சொல்** - 1. மைத்தும். 3. சத்தும்.

## வசனம்

இப்படி உறவின் முறையாரும் மாமனாரும் மனையாட்டியும் தாயார் முதற்கொண்டு எத்தனைப் புத்திசொல்லி நிறுத்தினாலும் கெடுமதி கண்ணுக்குத் [1]தோற்றாமல் தெரிசன செட்டியார் பதறிப் பயணமாகினன். (7)

கெடுமதி - அழிவுக்குரிய கெட்டபுத்தி

**பாட வேறுபாடு** - 1. தோணாமல்

**சுவடிச்சொல்** - 1. தோய்த்தாமல்

***(தரிசனன் வீட்டைவிட்டு நீங்குதல்)***

## தரு

**51.** எல்லாரும் வந்திவனை மல்லாடிச்
சொல்லச் சொல்ல
நில்லாம லேஎழுந்து வல்லாண்மையாய்ப்
பைதான் எடுத்துவலக் கைதான்[1] எடுத்து எனச்
செய்தான் நிலைபிரிந் து[2]ன்மதமாகியே
மதியாமல் போற - செட்டிச்
சதியாரும் எங்ஙனே - [3]அவ
மதியாகப் பின்தொடர்ந்தாள்
விதிகூடி யேகுட்டனும் எடுக்க
மதிகெட்டு இவள்நடக்க - வந்த
செட்டியும் தடுக்க - மனை
விட்டு நடந்தார்

அனைவரும் பலவாறு வேண்டியும் நில்லாமல் ஒரே பிடிவாதமாய்ப் புறப்பட்டான். வலதுகையில் ஒரு பையை எடுத்துக் கொண்டான். தன்னை மறந்து மதிமயங்கியவனாய்ப் புறப்பட்டுச் சென்றான். யாரையும் மதிக்காமல் செல்லுகிற தரிசனனைப் பின் தொடர்ந்து மனைவி பூங்கோதை தன் மகனையும் விட்டு விட்டு நடந்தாள். தரிசனன் தடுக்கவும் கேளாது விதி நடத்தி வைக்க இருவரும் வீட்டைவிட்டுச் சென்றார்கள்.

மல்லாடி - போராடி. வல்லாண்மை - ஆடவர் வலிமை. எனச்செய்தான் - என்ன செய்தான் என்றால்; இடைக்குறை. உன்மதமாகி - மதிமயங்கி. சதியார் - மனைவியார். குட்டன் - ஆண்குழந்தை.

பாடவேறுபாடு 1. எடுத்ததென 2. மைதாகினமே. 3. அவதியாக

(தீய சகுனங்கள்)

சம்பை

52. தெரிசனனும் முன்நடக்கத்
தேவியார் பின்நடக்க
இருவர்களு மேகாஞ்சி புரிகடந்து போனார்
போறவரைத் தான் காஞ்சி
புரத்திருத்தில் ஒருவர்களும்
மீறிவளை யாமலே மாறியிருந் தார்கள்
கபடங்கள்ளம் அறியாத
காலமாகை யாலிவனை
விபரமுடன் பழசைவழி விலக்காமல் இருந்தார்
எவரும்மதி மறந்திருக்கில்
இவர்கள் இருவருமேவில்
அவர்கள் எதிராக[1] ஒற்றைக் குரலியமு தாளே
அடிக்கடிக்குக் கொடிதடுக்கும்
அறிந்துமவன் திரும்பாமல்
வடக்குத்திசை யாகமன முடுக்குடனே போனான்
காடைவல மாச்சுநரை
யாளிடம தாச்சு[2] எண்ணெய்க்
கூடைகொண்டு வாணியனும் ஓடிஎதிர் வந்தான்
பிட்டையிட்டு நாய்பேயும்
குட்டிவல மேயாயும்
செட்டிமகன் திரும்பாமல் முட்டநடந் தானே

முன்னே தரிசனனும் பின்னே குழந்தையைவிட்டுப்பிரிந்த பூங்கோதை யுமாகக் காஞ்சிமாநகரைத் தாண்டிச் சென்றார்கள். காஞ்சிபுர மக்கள் யாருமே அவர்கள் செயலை மீறித் தடுக்காமல் ஒதுங்கி நின்றார்கள். சூதுவாதுகளும் பொய்யும் வஞ்சனையும் இல்லாத மக்கள் இவனைப் பழையனூர் வழிசெல்ல வேண்டாமென்று தடுக்காமல் விட்டுவிட்டார்கள். எல்லோரும் மதிமயங்கி இருக்க இருவரும் புறப்பட்டபோது ஒருபெண்ணின் அழுகுரல் கேட்டது; காக்கைகள்

அடிக்கடி தடையாகக் குறுக்கிட்டன. இவற்றை அறிந்திருந்தும் திரும்பி வராமல் வடக்குநோக்கியே சென்றான். காடை என்னும் பறவை இடமிருந்து வலம் சென்றது; நரைத்தவள் இடமாகச் சென்றாள்; வாணியன் ஒருவன் எண்ணெய்க் கூடையுடன் எதிரில் வந்தான்; நாயும் பேயும் குட்டியுமாக ஊளையிட்டுக் கத்தியவாறு வலமாக வந்தன. இவ்வளவையும் பொருட்படுத்தாமல் தரிசனன் நடந்தான்.

காஞ்சிபுரி - காஞ்சிபுரம். கடந்து - தாண்டி, விட்டுநீங்கி. இருத்தில் - இருத்த என்றிருத்தல் வேண்டும்; இருத்த - தங்கச் செய்ய. மீறி - எதிர்த்து. வளையாமல் - தடுத்து நிறுத்துவதற்குச் சுற்றி நிற்காமல். மாறி - ஒதுங்கி. கள்ளம் கபடம் - பொய்யும் வஞ்சனையுமாகிய தீயகுணங்கள். விலக்காமல் - போவதைத் தடுத்து நிறுத்தாமல். மதிமறந்து - புத்திமயங்கி, தங்களையே மறந்தவர்களாய். இருக்கில் - இருக்கும்போது. மேவில் - அடைந்தபோது - ஒற்றைக்குரலி - ஒருத்தி மட்டும் தனியாக (அழுதாள்). கொடி - காக்கை. தடுக்குதல் - தடையாதல்.

**பாடவேறுபாடு** 1. ஒரு விதவியழுதாளே

**சுவடிச்சொல்** 1. ஒற்றக்குரலி 2. எண்ணை.

*(மனைவி பூங்கோதை பின்தொடரப் பேரம்பாக்கம் அடைதல்)*

## திபதை

53. [1]பாரியா ளவளும் [2]பின்பற்றி முன்வாற
காரியம் சொல்லியிரு காலையும் பிடித்துக்
கொண்டழுது எந்தன் குழந்தையை யெடுத்துக்
கொண்டுமே பின்னைநாம் கூடவே போவோம்.

திரும்புஇப் போதென்று தேவியென்ன சொல்லினும்
[3]திரும்பாமல் அவளைத் திரும்பிப்போ வென்பான்
காரண மோவென்று காதலன் பிறகே
பாரிநொந் தேவிதித்த படியாள் நடந்தாள்

அன்றைய தினத்தில் இருவர்களும் சாப்பாடு
ஒன்றுமில் லாமலப் போதோடி வந்தார்
வாயும் வறண்டவர் மாரழல் எடுக்க
பேய்நினை வாகப் புறப்பட்டு வந்தார்

பிளவிலையும் தின்னப் பிரியமில் லாமல்
கள்வரைப் போலே கடுகியே வந்தார்
அன்னமு மன்னவர் தன்னையும் போலே
கன்னியும் இவனும் கனதூரம் வந்தார்

தையலும் இவனும் தனிமானைப் போலே
வெய்யிலில் மெத்த விடாய்ச்சுக் களைத்து
உடம்பெலாம் வேர்த்துவந்து உப்பது பூத்து
விடுங்கண்ணுக் குக்கானல் வெள்ளம் போல

ஓடும் தண்ணீர்த் தவளையும் தப்பி (வெயிலில்)
[4]குன்றி யிளைத்திடும் கொள்ளையைப் போலும்
வெள்ளத்தில் பட்ட விளைச்சலைப் போலும்
வெள்ளத்தடி பட்ட மீனது போலும்

இங்கிருந்து அங்கிருந்து இளைப்பரி கரித்து
பொங்கெலாம் குங்கிப் பேய்போல் விழித்து
வேகமாய் அவர்கள்கை வீசியே நடந்து
போகவே பொழுதுமப் போபோக லாச்சு

தூரப்போ னவருக்குச் சோதிப் பந்துவாழ்
பேரம்பாக் கத்தில் பிற்பகல் சென்று
மாடுகணம் வந்தபின் வாணிகர் வீதியில்
நாடினார் இவர்களை நண்புள்ளார் கண்டு

திருக்கச்சி யம்பதி செட்டியார் மைந்தன்
வரத்தனம் செய்தனம் வாருமென்று அழைத்துச்
செட்டிக்கெல் லாம்பெரு செட்டியார் கண்ணந்தை
செட்டிமகன் வீட்டுக்குத் தெரிசனன் தன்னையும்

அருமையாய்க் கொத்தந்தை யார்மகள் தனையும்
இருவர்களையும் அன்பாய் இட்டுவந் தாரே

மனைவி பூங்கோதை அவனைப் பின்பற்றியவளாய் ஏற்பட்ட சகுனங்களால் எதிர்காலத்தில் நடக்கவிருக்கும் தீமைகளை எடுத்துக்கூறி, அவன் காலைப் பிடித்துக்கொண்டு அழுது வீடு சென்று, குழந்தையை எடுத்துக் கொண்டு

வருவோம் என்று வேண்டினாள். தரிசனன் அவள் பேச்சைக் கேட்காமல் நீ திரும்பிப் போ என்று கூறினான். விதிப்படி நடக்கட்டும் என்று எண்ணி அவள் பின்தொடர்ந்தாள். அன்று முழுவதும் உணவு இல்லாமல் நடந்தார்கள் வாய் வறண்டது; மார் எரிச்சல் எடுத்தது; பேய் நினைவாகவே நடந்தார்கள். வெற்றிலைப் பாக்கும் போட்டுக்கொள்ளாமல் திருடரைப் போல் விரைந்து நடந்தார்கள். அன்னத்தையும் அன்ன வாகனராகிய பிரமனையும் போல இருவரும் வெகு தூரம் நடந்தார்கள். ஆண்மான், பெண்மான்களைப் போல இருவரும் வெயிலில் நடந்தனர். தண்ணீர் தாகமெடுக்க களைத்து உடல் வியர்த்து உப்புப் பூத்தது. சூரிய ஒளியில் வெண்மணல் எல்லாம் வெள்ளம் போலத் தோற்றமளித்தது. ஓடும் தண்ணீரில் உள்ள தவளையானது தவறி வெளியில் வந்து மெலிந்து இளைத்ததைப் போலவும், வெள்ளத்தில் சிக்கிய விளைந்த பயிரைப் போலவும், வெள்ளத்தில் அடிபட்ட மீனைப் போலவும் சோர்வு மிகுதியாயிற்று. அழகு குறைந்து பேய் போல விழித்துக் கைவீசி நடக்கத் தொடங்கினார்கள். இப்படி வரும்போது மாலை நேரம் ஆயிற்று.

தரிசனனுடைய சுற்றத்தினர் வாழ்கின்ற பேரம்பாக்கம் என்னும் ஊரை அடைந்தார்கள். ஆடுமாடுகள் எல்லாம் வீட்டை வந்து சேர்ந்த அந்தி நேரத்தில் வாணிகர் வீதியின் வழியே சென்றார்கள். அவர்களைக் கண்ட உறவினர்கள், காஞ்சிபுரத்துச் செட்டியார் மகன் எங்கள் ஊரைத் தேடி வர, நாங்கள் பெருந்தவம் செய்தவர்களானோம் என்று மகிழ்ந்து அழைத்துச் சென்றார்கள். அவ்வூரிலுள்ள கண்ணந்தை செட்டி மகன் வீட்டிற்கு இருவரையும் அன்போடு அழைத்துச் சென்றார்கள்.

பாரி - மனைவி. முன்வா்றகாரியம் - எதிர்காலத்தில் நடக்கப்போகிறசெயல்; முன்-முன்னால், எதிர்காலத்தைக் குறித்தது. வாறகாரியம் - வருகிற, வரப்போகிற செயல். பின்னை - பின்னால். தேவி-மனைவி. விதிப்படி-தலை எழுத்தின்படி; என்ன நிகழ வேண்டுமோ அதன்படித்தான் நடக்கும் என்ற கருத்தில் அமைந்தது. வாய் வறண்டு - வாயில் எச்சிலும் ஊறாமல் வறண்டு போக. அழல் - நெருப்பு; எரிச்சல். பிளவிலை - பாக்குவெற்றிலை. பிரியம் - விருப்பம். கள்வர்-திருடர். கடுகி - விரைவாக. **அன்னம்** - அன்னப்பறவை; அன்னவர் - அன்னவாகனத்தோன்; பிரமன். கன்னி - மனைவி. கனதூரம் - நீண்டதூரம். தையல் -பெண்; மனைவி விடாய்ச்சு - தாகமெடுத்து. களைத்து - சோர்ந்து. வேர்த்து - வியர்த்து; வியர்வை உண்டாகி. கானல் வெள்ளம் - சூரிய ஒளியில் வெண்மணல், வெள்ளம் போல் தோன்றும் தோற்றம்; பொய்த்தோற்றம். குன்றி - குறைந்து, மெலிந்து. பொங்கு - பொலிவு, அழகு. குங்கி - குறைந்து. பந்து-சுற்றம்; உறவினர். பேரம்பாக்கம் - ஓர் ஊர்ப் பெயர் கணம்-கூட்டம். வாணிகர் - வியாபரம் செய்வோர்; செட்டியார் இன மக்கள். நண்புள்ளார் - நண்பர்கள். நண்பு - நட்பு. கச்சி - காஞ்சி. கச்சியம்பதி - காஞ்சிபுரம் என்னும் திருத்தலம். வரத்தவம் செய்தனம் - தாங்கள் எங்களூர் வருவதற்கு நாங்கள் பெரிதும் புண்ணியம் செய்தவர்களானோம்.

**பாடவேறுபாடு** - 1. பாரியானவளும் 3. திரும்பானவளை
**சுவடிச்சொல்** - 2. பின்பத்தி 4. குன்னி

### வசனம்

இட்டுவந்து இரத்தினக் கம்பளியின் பேரிலே [1] உட்கார வைத்து, உறவின் முறையார் அதிசயப்பட்டு நீர் ஒரு நாளும் வீடுவிட்டு வெளியே வராதவர் இன்றைக்கு ஏது காரணார்த்தமாகப் [2]புறப்பட்டு வந்தீர்? சதியும் பதியும் வெளிப்பட்ட காரியம் என்ன? திரேகம் எல்லாம் சுட்ட வழுதலை போல வெய்யிலிலே அடிபட்டிருக்கிறது. இத்தனை அவமதியும் அவதியுமாய் வந்த காரியம் என்னவென்று விசிறி [3]விடாயாற்றித் தெரிசன செட்டியை உறவின்முறை கேட்கும்போது அதற்கு [4] உத்தரம் என்ன சொல்லுகிறான் எனில் - (8)

இட்டுவந்து - அழைத்து வந்து. நீர் - நீங்கள். காரணார்த்தமாக - காரணமாக. சதி - மனைவி. பதி - கணவன். வழுதலை - கத்திரி (கத்திரிக்காய்). அவதி - வருத்தம்; அவமதி - நிந்தனை; இழிவு. விடாயாற்றுதல் - தாகத்தைத்தீர்த்து. உத்தரம் - பதில்.

**சுவடிச்சொல்** - 1 உள்க்கார 2. பிறப்பட்டு 3. விடாயாத்தி 4. உத்திரம்

**(பேரம்பாக்கத்தில் உறவினரிடம் தரிசனன் கூறுதல்)**

### சம்பை

54. ஆலங்காட் டீசர்திரு ஆலயமும் [1]அவ்வூரும்
கோலம்பார்க் கவே[2]யின்னக் காலமே வந்தோம்

வரும்போது இவளும்கூட வருகவே - யாம்இவளைத்
திரும்பிப்போ மனைக்கென்று சிலதூரம் வந்தோம்

வனக்குரங்குப் பிடிபிடித்து மனையாட்டி வரும்போது
[3]மெனக்கெட்டிங்கு வரும்பொழுது மெனக்குஞ்சிரி யாச்சு

பின்னையொன்றும் இல்லையென்று பெரியசெட்டி யார்மகனும்
சொன்னபொழுது அவனுடைய கன்னியென்ன சொல்வான்.

உறவினர் தரிசனனைப் பார்த்து எங்கே புறப்பட்டீர்கள் என்று கேட்க,

திருவாலங்காட்டு ஈசரையும் அவர்தம் ஆலயத்தையும், அத்திருத் தலத்தையும் கண்டு களிக்கக் காலையில் புறப்பட்டேன்; வரும்போது பூங்கோதையும் உடன்புறப்பட்டாள். திரும்பிப்போ என்று சொல்லியும் குரங்குப் பிடியாய் என்னைத் தொடர்ந்து வந்தாள். அதனால் நானும் சரியென்று அழைத்து வந்தேன் என்று தரிசனன் கூறினான்.

ஆலங்காடு - திருவாலங்காடு. ஆலங்காட்டீசர் - திருவாலங்காட்டில் கோயில் கொண்டுள்ள சிவன். கோலம் - அழகு. இன்னக்காலமே - இன்றைய காலையில்; இந்தநேரம் எனினுமாம். மனைக்கு - வீட்டிற்கு. வனம் - காடு. குரங்குப்பிடி - விடாப்பிடி. மெனக்கெட்டு - மனக்கிடுதல் - முயற்சி செய்து.

**பாட வேறுபாடு** - 1. அவ்வூர் 2. யின்று 3. மெனக்குமிங்கு வரும்பொழுது

**(உறவினரிடம் பூங்கோதை பேச்சு)**

## திரிபுடை

55. சிறந்த உறமுறை யார்களே - இவர்
 செனிக்கச்சே பழசையினிற் பழியென்று
பிறந்த போது [1]பார்த் தறைந்தார் - மறை
 யறிந்த மேலோர்
நிலையை நீங்கப்பெண் பூதத்தால் - உயிர்
 நீங்குவர் என்று முதலிலே
சொல்லிச் [2]சோலியும் இருக்கில் - இப்போது
 அவ்வூருக் கலவரமதாய்
அன்னை உறவினர் என்ன சொல்லினும்
 அவையெலாம் தள்ளிப் புறப்பட்டார் - நான்
என்ன செய்குவேன் குழந்தை தனையும்விட்
 டிவர்பின் [3]அடைந்தேன்
குழந்தை எவ்விதம் அழுகுதோ - இவர்
 கொண்ட கோலம்அல்லவோ இக்குறை என்று
விழுந்தெழுந்து அங்கே பயப்பட்டு
 ஏங்கி யழுதாள்

தரிசனன் கூறியதைக் கேட்ட பூங்கோதை சொல்லத் தொடங்கினாள். உறவினர்களே! இவர் பிறந்தவுடன் சோதிடம் பார்த்தார்கள். பழையனூர் பக்கம்

சென்றால் உயிருக்குத் தீங்குவரும் என்று சோதிடர் கூறியிருக்கிறார்கள். அதுவும் ஒரு பெண் பூதத்தால் உயிர்போகும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படியிருக்க இப்போது அந்த ஊருக்குச் செல்லத் துணிந்திருக்கிறார். தாயும் உறவினரும் போக வேண்டாமென்று சொன்ன சொற்களையெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் புறப்பட்டு விட்டார். நானும் வேறு வழியில்லாமல் குழந்தையைத் தனியே விட்டு இவருடன் புறப்பட்டு விட்டேன். குழந்தை எவ்வாறு அழுகிறதோ? என்றெல்லாம் கூறி அழுதாள்.

செனிக்கச்சே - செனித்தபோது; செனித்தல் - பிறத்தல். பழசை - பழையனூர். பழி - தீங்கு. மறை - வேதம், சோதிடம். நிலையைநீங்க - பழையனூர் பக்கம் போகக்கூடாது என்ற நிலையைவிட்டு நீங்கி, அப்பக்கம் சென்றால். சோலி - வேலை. கலவரமதாய் - (உள்ளக்) கலக்கத்தோடு. அவ்வூருக்கு அலவரம் எனப்பிரித்தால் - அலவரம் - தொழிலின் பொருட்டு எனக்கொள்ளலாம். தள்ளி - பொருட்படுத்தாமல்விட்டு. கோலம் - விடாப்பிடியாக மேற்கொண்ட செயல்.

**பாடவேறுபாடு** - 2. சொல்லியுமிருக்கச்சே - போயவ்வூருக்குக் கவலையாய் 3. துடர்ந்தேன்

**சுவடிச்சொல்** - 1. பத்தரைத்தார்

***(உறவினர் அறிவுரை)***

***சம்பை***

56. வாக்கியமிப் படிகேட்டு மனதுருகியே - பேரம்
பாக்கத்தனி லேவாழும் பந்து செனமெலாம்
தான்சாக மருந்து[1] தின்னத் தான்துணிவரோ - கணக்கை
யாஞ்சோஞ்சிப் பாராமல் ஏன்சாகப் போறீர்

ஏதையா சகலமும் [2]கற்றே
எவருக்கும் பெரியவராயும்
பேதையர் ஏதும்அறி யாதகணக் கானீர்
பொல்லாதென்றால் அதனை
எல்லாம் தவிருமென்று
வல்லாண்மை அவ்வை சொன்ன
வார்த்தையறியீரோ
அலைச்சலாய்க் குழந்தைதனை

அவளும் எடுக்காமல்
அவரில்லாச்சே கெட்டத்தனமாய்
இத்திடைக்கு வரலாமோ
பழிதாக்கும் ஊரென்று
பார்க்கப்போறேன்என்று
வழிநோக்கு வந்ததென்
மரியாதி யில்லா

காஞ்சி புரத்திலும் ஆலங்காடு அதிகமோ - அதுக்கு
[3]வாஞ்சைஎடுத் தோடினீர் வந்ததவங் கண்டீர்

பேரம்பாக்கத்திலே வாழும் உறவினர்கள் பூங்கோதை சொன்னதைக் கேட்டு மனம் உருகினர். தான் சாக மருந்து உண்போர் உலகில் உண்டோ? தன் செயலை ஆய்ந்து பார்க்காமல் ஏன் இந்த முடிவுக்கு வந்தீர்? நீர் எல்லாவற்றையும் அறிந்தவர்; எல்லோருக்கும் பெரியவர். இருந்தும் ஒன்றும் தெரியாதவர் ஆகி விட்டீர். பொல்லாங்கைத் தவிர் என்று கூறிய அவ்வை சொல்லை அறிந்தவர். அவசரமாய் குழந்தையையும் எடுக்காமல் இந்தப் பக்கத்திற்கு வந்திருக்கலாமா? எப்படிப் பழி வருகிறது பார்ப்போம் என்று நினைப்பது சரியாகாது. காஞ்சியை விட திருவாலங்காடு எந்த விதத்தில் உயர்ந்தது? அதைக் காணவா ஓடி வந்தீர் என்றெல்லாம் கூறினார்கள்.

வாக்கியம் -தரிசனன் மனைவி கூறிய கூற்று. பந்துசெனம்-உறவினர். ஆஞ்சோஞ்சி - ஆய்ந்து ஒய்ந்து என்பதன் வழக்குத்தொடர்; பொறுமையாகச் சிந்தித்து என்பது பொருள். சகலம்-எல்லாம். பேதையர் - சிந்திக்கும் ஆற்றலில்லாதவர்கள். கணக்கு ஆனீர் - (அறியாத) தன்மைபோல் ஆனீர். தவிரும் - விட்டுவிடும். வல்லாண்மை - எல்லாம் உணர்ந்த (வலிய அறிவுத்திறம் மிக்க) அவ்வை- அவ்வையார். அலைச்சல் - தொல்லைகள். அவர் இல்லாச்சே - அவர் இல்லாபொழுது; அவர் - தந்தை. மரியாதி - மரியாதை; சரியானமுறை; நல்லது. வாஞ்சை - விருப்பம், ஆசை.

**சுவடிச்சொல்** - 1. திண்ணத்தான் 2. கத்தே 3. வசுஞ்சை

**வசனம்**

உறவுளோர் இப்படி ஓதி வெறுக்கில் மறுமொழி தெரிசன மன்னன் என்ன சொல்லுவான்.

(9)

(பேய் இல்லை; மனப்பேயே எனல்)

### திரிபுடை

57. காயம் எடுத்திடும் போதிலே - அஞ்சு
பேயுண் டாச்சுது பேயல்லாம் - மற்ற
பேய்என் பதுமனப் பேயல்லால் - மறு
பேயும் உண்டோ

பேய்க்குப் பயந்த கக்கு தாளித்த - பேர்களும்
பேயிலும் அவப் பேய்கண்டீர் என்ன
வாக்கியம் சொல்லுகிறீர் என்கையில்
மந்திர வாளும் இருக்க

அலகை யுடன்கூடத் தாடும் - ஈசர்
சன்னதிக்குப் போய்வர நீங்கள் - யாவரும்
சிலவு தரினும் தாரமல் விடுகினும்
[1]நிலைத் தில்லேனே.

தரிசனன் உறவினர்களைப் பார்த்துக் கூறுகிறான். நாம் பிறக்கும்போதே நம்மோடு ஐம்பொறிகளாகிய ஐந்து பேய்கள் தோன்றி விடுகின்றன. அவற்றைத் தவிர வேறுபேய் இல்லை. பேய் என்பது மனப்பேய் மட்டுமேயாகும். பேய்க்குப் பயந்தவர்களே பெரும்பேய் ஆவார்கள். மேலும் என்னிடம் மந்திரவாள் ஒன்றும் இருக்கிறது. நான் காண இருக்கும் இறைவனோ அந்தப் பேய்களுடன் கூத்தாடுபவன் ஆவான். நீங்கள் விடைகொடுத்தாலும் தடுத்தாலும் நான் சென்றே வருவேன் என்று கூறினான்.

காயம் - உடல், அஞ்சுபேய் என்றது ஐம்பொறிகளை; அவை- மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன. அவப்பேய் - பெரும்பேய். அலகை - பேய். சிலவு - செலவு - விடை. வீடுகினும் - விட்டாலும். நிலைத்திலன் - நிற்கமாட்டேன்.

சுவடிச்சொல் - 1. நிலைதிலனே

(தரிசனன் பிரிய, பூங்கோதை காஞ்சி அடைதல்)

## திபதை

58. நில்லேன்என் றிவனும் நிகழ்த்திய வார்த்தை
எல்லோரும் கேட்டுமக்கு என்னாணை எம்மைக்
கொல்லுவீர் ஐயாவென்று கூறவே கேளும்
நல்லதும் முடக்கச்சி நகரியே சேர்ந்து

பெற்றதாய் வல்லவி பிள்ளைக ளுடனே
பத்துநாள் சென்றுபின் பயணமாய் வாரும்
நாங்களும் பத்துபேர் நலமுடன் வாரோம்
தீங்கில்லா மல்சென்று சேவித்து வருவோம்

கூட்டமாய் அனைவரும் கூடிப்போய் ஆலங்
காட்டில்வாழ் ஈசரைக் கண்டு தான்வருவோம்
இன்றைப் பயணம் எங்கள்மேல் தயவு
பண்ணியே நினது பதிசேரும் என்றார்

இப்படி நீங்கள் எல்லோரும் சொல்லச்சே
அப்படியே நல்லது ஆகட்டும் என்றான்
சொன்னபின் இவர்க்குச் சந்தோஷம் உண்டாக
அன்னம் கறிபருப்பு[1] அதிசீக்கிரத்தில்சமைத்து

[2]வெந்நீர் வைத்துத் தானாடி வைத்துக்
[3]கழுத்தினில் சந்தனம் கஸ்தூரி பூசிப்
போசனம் செய்வித்துப் [4]பிளவிலை கொடுத்து
நேசம தாய்ப்பின்னும் நீதியே சொலிஇனி

நித்திரை [5]கொள்ளும் என்றவர் அவர்கள்
மனைதனில் துயலவே வணிகேச னுக்குப்
பெண்கள்மேல் இச்சைப் பிராந்திகொண் டிரவில்
கண்கள்நித் திரையிலாக் காமுகர் போலும்

சோரமாய்ப் புருஷனைத் [7] தூங்கவைத் தொருவன்
பேரினில் இச்சையாயப் போவது போலும்
விழிதுயிலான் பெண்டைவிட் டோடிப் போக
வழியது பொழுதுவிடி வதுபார்த் திருந்தான்.

[8] குக்கிடம் கூவவே கூப்பிடாது எழுந்து
அக்கணம் மனைவியை யறியாமல் நடந்து
ஊரைவிட் டுத்தான் ஓடியே போனான்
காரிருள் விடிந்தபின் காதலி எழுந்து

காலையில் காண்கிலேன் கண்டனை என்றாள்
ஓலமிட்டு அழைத்தந்த ஊரெங்கும் பார்த்தார்
[9] என்னது ஊருக்குநாம் இடங்கொடுத் தோம்என்று
அன்னவர் மாதினுக்கு ஆள்துணை கூட்டிக்

காஞ்சிக்கு அனுப்பவே [10] காரிகை தானும்
[11] நீஞ்சொணா வெள்ளத்தின் நேரான துக்கம்
[12] பரந்து நடக்கவே பாவை முலைப்பால்
[13] சுரந்து அசைவுக்குத் துளிதுளி வீச

மகன்பிரமை யாய்அதி வாயுவே கமதாய்
செகம்புகழ் காஞ்சியில் சேர்ந்திருந் தாளே.

தரிசனன் கூறியவற்றைக் கேட்ட உறவினர், இப்போது உங்களுடைய காஞ்சிபுரத்திற்குச் செல்லுங்கள். பத்துநாள் கழித்து தாயும், மனைவியும், குழந்தையுமாகப் புறப்பட்டு வாருங்கள். நாங்களும் உங்களுடன் வருகிறோம். அனைவரும் சேர்ந்து சென்று திருவாலங்காட்டு ஈசரைக் கண்டு வணங்கி வருவோம். எங்கள் மீது அருள்கூர்ந்து இன்றைய பயணத்தை நிறுத்திக் காஞ்சிபுரத்திற்குச் செல்லுங்கள் என்று கூறினார்கள்.

தரிசனனும் அப்படியே ஆகட்டும் என்று சம்மதித்தான். அனைவரும் மகிழ்ச்சி அடைந்தார்கள். மிகவிரைவாக உணவைத் தயாரித்தார்கள்; வெந்நீரில் நீராடச் செய்தார்கள்; சந்தனம், கஸ்தூரி முதலான வாசனைப் பொருள்கள் பூசச்செய்து உணவளித்து உபசரித்தார்கள். வெற்றிலைப் பாக்கு கொடுத்து அன்போடு பேசியிருந்து இருவரையும் தூங்கச் செய்துவிட்டு அவரவர் இல்லம் சென்றார்கள்.

எல்லோரும் தூங்கியபின், பெண்கள் மேல் ஆசையாய் மோகம் கொண்டு இரவெல்லாம் தூக்கம் கொள்ளாத காமுகரைப் போலவும், கணவனைத் தூங்கவைத்து விட்டு மற்றொருவன் பேரிலே ஆசை கொண்டு திருட்டுத் தனமாய்ச் செல்ல விரும்பும் பெண்ணைப் போலவும், மனைவியை விட்டு ஓடிப்போக நினைத்த தரிசனன் பொழுது விடிவதை எதிர்பார்த்து விழித்துக் கொண்டிருந்தான்.

கோழிகூவியது. சத்தமில்லாமல் எழுந்தான். மனைவிக்குத் தெரியாமல் வெளியே வந்தான். ஊரை விட்டே சென்றுவிட்டான். இருள் நீங்கியது. பொழுது விடிந்தது. பூங்கோதை எழுந்தாள். கணவனைக் காணவில்லை. மற்றவர்களைப் 'பார்த்தீர்களா?' என்று கேட்டாள். உரத்தகுரலில் கூப்பிட்டாள். ஊரெங்கும் தேடியும் காணவில்லை. இந்த ஊரில் தங்க இடங்கொடுத்தோமே என்று உறவினர் வருந்தி, பூங்கோதைக்குத் துணையாகச் சிலரை அனுப்பிக் காஞ்சிபுரத்தில் கொண்டு போய் சேர்த்தார்கள். நீந்திக் கரையேற முடியாதபடி பெரு வெள்ளத்தில் சிக்கிக் கொண்டது போலப் பெருந்துக்கத்தோடு நடந்து வந்த பூங்கோதைக்குப் பால் சுரக்கலாயிற்று. நடக்க நடக்கத் துளித் துளியாகப் பால் சொட்டத் தொடங்கியது. மகன் மீது நினைவாகவே வாயுவேகமாக வந்து காஞ்சிபுரத்தை அடைந்தாள்.

*நிகழ்த்திய - கூறிய. கேட்டுமக்கு - கேட்டு + உமக்கு. நல்லது உம்முடகச்சி நகரியே எனப்பிரிக்க. உம்முட - உங்களுடைய. நகரியே - நகரமே என நகரமக்களைச் சுட்டியது. அன்னம் - சோறு. கறி- காய்கறிகள். ஆடிவைத்து - நீராடச்செய்து; குளிக்கச் செய்து. கஸ்தூரி - நறும்மணப்பொருள், மான்மதம். போசனம் - உணவு, உண்ணுதல், பிளவிலை - பாக்குவெற்றிலை. நேசம்- அன்பு. நித்திரை - உறக்கம், தூக்கம். மனை - வீடு. துயிலல் - தூங்குதல். வணிகேசன் - வணிகன் + ஈசன்; வணிகர் தலைவன். பிராந்தி - மயக்கம் காமுகர் - காமவெறி கொண்டோர். சோரம் - வஞ்சனை, களவு, விபசாரம். இச்சை - விருப்பம். விழி-கண். துயிலாள் - தூங்காதவள். பெண்டு - பெண், மனைவி. குக்கிடம் - குக்குடம் - சேவல். காரிருள் - மிகுந்த இருட்டு. கண்டனை! - கண்டாயோ? ஓலமிடுதல் - முறையிடுதல், அபையக்குரலில் அழைத்தல். அன்னவர் - பேரம்பாக்கத்து உறவினர். மாதினுக்கு - தரிசனன் மனைவிக்கு. நீஞ்சொணாவெள்ளம் - நீந்திச் செல்லவும் முடியாத பெருவெள்ளம். நேரான - நிகரான, ஒப்பான. துக்கம் - வருத்தம். பரந்து - விரைந்து. சுரந்து - ஊறி. பிரமை - மயக்கம், அதேநினைவு. அதிவாயு - பலமான வேகத்துடன் வீசும் காற்று.*

***பாட வேறுபாடு*** - 2. வெண்ணீர் வைத்துதானமடி 3. கழற்சந்தனம் 4. பிளவிலை 5. கொள்ளுமென்றகல 6. பிராந்துப்பிறந்து 7. தூக்கிவைத்து. 8. குக்குடம் 10. காரிகையாளும் 11. நீஞ்சொணா தூக்கத்தை நேரா வெள்ளம் 12. பார்த்து

***சுவடிச்சொல்*** - 1. அதிசீக்கிரமத்திலே 9. என்னதூறுக்கு 13. சுரத்தச்சவுக்குத்

## வசனம்

நாகந்தை செட்டியார் மருமகள் காஞ்சிபுரமே போய்ச்சேர இப்பால் தெரிசன செட்டியார் பேரம்பாக்கத்தை விட்டு இப்பால் அரைக்காத வழி வடதிசை நோக்கி [1]வந்தவளவிலே முன்னாலே கறுவிக்கொண்டிருக்கிற நீலி எந்தவிதமாக வந்து சந்தித்தாளெனில் (10)

அரைக்காதவழி - காதம் என்பது 4 கூப்பிடுதூரம் என்பர்.

**பாடவேறுபாடு** - 1. வந்தளவிலே முன்னாலே

*(தரிசனன்முன் நீலி)*

## ஏலச்சிந்து

59. சின்னஞ்சிறு தேவடியாள்
என்னவே வடிவுகொண்டு
அன்னம் போல நடந்துதான் - இவனைக் கண்ணில்
சன்னை செய்து முன்னே நின்றாளே

பட்டுச்சேலை கட்டிக்கொண்டு
திஷ்டியில்மை இட்டுக்கொண்டு
பொட்டுமிட்டு நாணயமாக - வடக்கேபோற
செட்டிகண்ணுக்குத் தென்பட்டாளே.
கையிலே வளையல் கொஞ்ச
காலிலே சிலம்பு கொஞ்ச
மெய்யெல்லாம் [1]பொன்போலே
மின்னவே - செட்டிமயங்கத்
தெய்வகன்னி போலே வந்தாளே
[2]நெற்றிதனில் சுட்டிதொங்க
ரத்தினப்[3]பிர திமைபோலே
[4]சித்திரத்திலே ஒருத்தியாய் - செட்டியார்தம்மை
எத்தவே[5] நீலி எதிர்த்தாளே.

தரிசனன் பேரம்பாக்கத்தை விட்டுச் செல்லும் வழியில் நீலியானவள் பருவமடைந்த அழகிய பரத்தையைப் போல வடிவெடுத்து அன்னநடை நடந்து

கண்ணால் சாடை செய்து பிற இன்பக்குறிகளையுஞ்செய்து தரிசனன் முன்னே வந்தாள். அப்போது அவள்பட்டுச் சேலை உடுத்தி கண்ணில் அழகாக மைதீட்டி நெற்றியில் பொட்டு இட்டு, கையில் வளையல் ஒலிக்க, காலில் சிலம்பு ஒலிக்க உடல் பொன்போல ஒளிவிட தரிசனன் மயங்குமாறு தேவகன்னியைப் போல, மிகவும் ஒழுங்காகத் தரிசனன் முன் காட்சியளித்தாள். அப்போது அவள் நெற்றிச்சுட்டி விளங்க இரத்தினத்தாற்செய்யப்பட்ட ஒரு சிலையைப் போலவும் பெண் ஓவியம் போலவும் காணப்பட்டாள்.

சின்னஞ்சிறு - பருவமடைந்த வயது, தேவடியாள் - பரத்தை. என்ன - என்னுமாறு, போல, சன்னை - சரசம், இன்பக்குறிகள். திஷ்டி - கண். நாணயம் - உண்மை, நேர்மை. கொஞ்சுதல் - இனிமையாய் ஒலித்தல், மெய்- உடல். தெய்வக்கன்னி - தேவமகள். சுட்டி - நெற்றிச்சுட்டி என்னும் நகை. பிரதிமை - விக்கிரகம், சிலை, எத்த - வஞ்சிக்க. எதிர்த்தாள் - எதிரில் தோன்றினாள்.

**பாடவேறுபாடு** - 1. பெண்போல. 5. நிலை எதுத்தாளே

**சுவடிச்சொல்** - 2. நெத்திதனில் 3. பிரதமை 4. சித்திரத்திலை

*(நீலிகூற்று)*

### ஏகதாளம்

60. நீலியும் சிறுபெண்ணைப்போல் வந்து - வணிகனை
மாலாகி னேன்என்னை மருவும்என் றாளே

காமனைப் போல் இந்தக் கானகத் தினில் வந்தீர்
மாமயல் [1]ஆகினேன் மருவும்என் றாளே
வாடிய பயிருக்கு மழைபோல - நீர்என்னைக்
கூடிச் சுகித்துவிளை யாடுவீர் என்றாள்.

அழகிய பருவப்பெண் வடிவிலே வந்த நீலி தரிசனனை அணுகி, உன்மீது மோகமானேன் என்னைச் சேரும் என்று கூறினாள். இந்தக் காட்டிலே மன்மதனைப் போலவும் வாடிய பயிருக்கு மழை பொழிந்தது போலவும் மையல் கொண்ட என்முன் வந்தீர்கள். என்னை அணைந்து சுகம் தாருங்கள் என்று வேண்டினாள்.

மாலாகினேன் - மயக்கமானேன், வேட்கையுற்றேன். மருவுதல் - தழுவுதல். காமன் - மன்மதன். கானகம் - காடு. மாமயல் - மிகுந்த மோகம்.

**பாடவேறுபாடு** - 11. பெண்ணைப்போல் 5. நிலை எழுத்தாளே

(தரிசனன் நீலியை இகழ்தல்)

**சம்பை**

61. காட்டிலிந்த தெரிசனனைக் கடுநீலி
வளைத்துக் கொண்டு
கேட்டபோது இவனுக்குக் கிலேசமன தாச்சு

தழையிருண்ட அடவிதனில் [1]அழகுமயில்
போல வந்து
தழுவுமென்று நீகேட்ட மொழியுனக்கு அடாது
மானமுள்ள [2]ஆண்புருஷர் ஆனவர்கள்
கெட்டாலும்
[3]மானமழி யார்கள்மத்தி யானவழி பார்ப்பார்
நீவலியத் தழுவும்என்று நிகழ்த்தினால்
[4]யான் வந்து
பாவகர்மம் தனக்காயுளப் படுவதில்லை [5]பெண்ணே
வண்ணமயி லேயெந்தன் மனையாட்டி
[6]யன்றியெந்தப்
பெண்ணெதிர வந் தாலும்இரு கண்ணெடுத்துப்பாரேன்
அதுவுமின்றி ஊர்ப்பயண மாய்நடந்து
போறவர்க்கு
இதமேது போடியென்று [7]மதியாமற் போனான்.

கொடியவளாகிய நீலி காட்டில் தரிசனனைத் தனியாக மடக்கிக் கொண்டு தன்னைத் தழுவுமாறு கேட்டபோது தரிசனனுக்கு வருத்தம் உண்டாயிற்று. மரங்கள் அடர்ந்த காட்டில் அழகான மயில்போல வந்து என்னைத் தழுவும் என்று கூறுவது ஒரு குலப்பெண்ணுக்குத் தகாத செயலாகும். ஆண்கள் எவ்வளவு தாழ்ந்து இருந்தாலும் மானங் கெட்ட செயலிலே ஈடுபடமாட்டார்கள் நடுநிலையிலிருந்து மாறித் தீயவழியில் செல்லமாட்டார்கள். பெண்ணே! நீ வலிய வந்து கூறும் இந்தப் பாவச் செயலிலே இறங்கமாட்டேன். என் மனைவியையல்லாமல் வேறொரு பெண்ணைக் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன். மேலும் ஊர்ப்பயணம் செய்பவர்களுக்கு இன்பம் ஏது? என்று அவளைப் பொருட்படுத்தாமல் சென்றான்.

கடுநீலி - கொடியவளாகிய நீலி. கிலேசம் - துன்பம். அடவி - காடு. அடாது - தகாது.

மானமழியார் - பெருந்தன்மையிலிருந்து நீங்கமாட்டார்கள். மத்தியான வழி - நடுநிலமை. வலிய - தானாக, கட்டாயமாக. பாவகர்மம் - தீமைதரும் செயல். உளப்படுவது - இணங்குவது, சம்மதிப்பது. வண்ணம் - அழகு. இதம் ஏது - இன்பம் ஏது? மதியாமல் - சிறிதும் பொருட்படுத்தாமல்.

***பாடவேறுபாடு*** - 1. அழகுமலை 2. மான்புருஷர் 3மானமழியார்களத்தியானவழி 4. யானந்த 5. பெண்ணை

***சுவடிச்சொல்*** - 6. யன்னி 7. மதியாமல்ப்

**வசனம்**

மதியாமற் போகிற வணிகன்முன் எந்த விதமாகி நீலி [1]வேற்றுருக் கொண்டாள் எனில் (11)

***சுவடிச்சொல்*** - 1. வேத்துருவுக்

***(மாறுவேடத்தில் நீலி)***

***அடதாளம்***

62. செழிக்கும் அடவியில் இவனைத் தாண்டிமுன்
சீக்கிர மாய்ப்[1]போயரை நாழிகை
வழிக்கப்பால் அந்த [2]நாகலோகத்து வனிதை யானாள்

திரளும் முலைகளும் [3]இருளும் அளகமும்
சிறுத்த 4இடையும் தேவர்கள்
மிரளும் காளக்கண் ஆகியே
[5]மானதுருகி இருந்தாள்

[6]புனுகு சந்தனம் பூசியே - அழகு
ஒழுக வேதாள நீலியும்
வழியிலே செட்டி வாறபோது - எதிர்
வந்து நின்றாள்
செகப்பியாய் வெகு குலுக்கியாய் - மெள்ளச்
[7]சிரித்து நடந்தே செட்டியார்
[8]அபிப்பி ராயத்தைக் காணவே - சைகை
யாக அழைத்தாள்

உடனே நீலி புறப்பட்டாள். அடர்ந்த அந்தக் காட்டில் அரைநாழிகை வழிக்கு அப்பால் சென்று, தரிசனன் அவ்வழி வருவதற்கு முன் அழகான நாகலோகப் பெண்ணாக வடிவெடுத்தாள்.

பேயாகிய நீலி திரண்ட நகில்களும், கறுத்து அடர்ந்த கூந்தலும் மெலிந்த இடையும் தேவர்களும் மயங்கக்கூடிய கரிய கண்களும் உடையவளாய் புனுகும் சந்தனமும் பூசி அழகுவிளங்க தரிசனன் வரும் வழியில் எதிரில் வந்து நின்றாள். நல்ல சிகப்புநிறம் வாயந்த அவள் புன்முறுவல்செய்து, உடலைக் குலுக்கி நடந்து தரிசனனின் உள்ளத்தை அறிய பலவகையான இன்பக்குறிகளைச் செய்து அருகில் அழைத்தாள்.

செழித்தல் - வளப்பமாய் அடர்ந்த. அரை நாழிகை - 12 நிமிடம். நாக லோகம் - கீழுலகம் ஏழில் ஒன்று; நாகர்வாழும் உலகம்; தேவலோகம் எனினுமாம். வனிதை - பெண். அளகம் - கூந்தல். இருளும் அளகம் - கறுத்து அடர்ந்த கூந்தல். மிரளும் - அஞ்சி வசமாகக் கூடிய. காளம் - கருமை; நஞ்சு எனினுமாம். செகப்பி -. சிகப்பி - சிவப்பு நிறமுடையவள். அபிப்பிராயம் - எண்ணம், கருத்து. சைகை - குறி

**பாடவேறுபாடு** - 1. போய்நாழிகை 3. அளகமும் 5. மானதிருந்தாள் 7. சிறுத்தயிடையுஞ்

**சுவடிச்சொல்** - 2. னாகலோகத்து 4. வுடவும் 6. புழுகு 8. அவிப்பிராய

**(தரிசனன் மறுப்பு)**

### ஏகதாளம்

63. அழைத்தளவே [1]இவன்ஆச்சி முன்னாள் சொன்ன
பழிக்கு விநாயக [2]பிரார்த்தனை இதுதான்

ஆமென [3]எண்ணிக்கொண்டுஅரிவையரேவனப்
பூமியில் நீவந்த புதுமைகள் ஏது?

காட்டகத் தேதெய்வக் கன்னிகை போலவென்
நாட்டகத்துக்கு எதிர்வர ஞாயமது அலவே

சீராய் உன்னிடம் சேர்ந்திருநீ என்முன்
வாராதே யென்று வணிகன்சொன் னானே.

நீலி செய்த சைகைகளை உணர்ந்த தரிசனன், முன்பு தாய்சொன்ன பழிவாங்கும் செயலுக்கு இதுவே தொடக்க நிலையாகும் என்று எண்ணினான். மனத்திடம் கொண்டு பெண்ணே! இந்த நடுக்காட்டில் நீ வந்த காரியம் என்ன? இக்காட்டின் வழி போகிற என்எதிரில் தேவமகள் போல வந்தது ஒழுங்கான செயல் ஆகாது. ஒழுங்காய் உன் இருப்பிடத்தை நோக்கிப் போய்விடு என கடிந்து கூறினான்.

ஆச்சி - தாய். விநாயக பிரார்த்தனை - தொடக்க நிகழ்ச்சி. வனப்பூமி - காடு. என் நாட்டகத்துக்கு - என் நாட்டத்திற்கு - என் பார்வைக்கு. உன்னிடம் - உன் இருப்பிடம்

**பாடவேறுபாடு** - 1. யிவனளுக்கு

**சுவடிச்சொல்** - 2. பாறதனையிதுவோ 3. வென்றிக்கொண்.

## வசனம்

இப்படி செட்டி [1]யிசைத்ததைக் கேட்டு முறப்பழிகாரி அங்கு எப்படிச் சொல்வாள் (12)

**பாடவேறுபாடு** - 1. யேசஅதைக்

### (நீலியின் விண்ணப்பம்)

### சம்பை

64. [1]நானுத்தர காசி கச்சி நகருக்கு வந்தேன் - தெய்வ
மானத்தை யென்கண்ணெதிர் பிரசாதித்தது இப்போது

எண்ணப்படி யேசிவனும் [2]எதிரனுப்பவே வந்தீர் - [3]இன்றைக்கு
என்னைப் புணரும் இதென் விண்ணப்பம் என்றாள்

[4]மாரனுக்கு மங்கையர்க்கும் மத்தவிடத் தேயன்றோ
மாரமேஎன் நசைதீர மருவுமென் றாளே

கிளியேறும் [5]துரைநீயும் கிளிநான்என் மேல்ஏறிக்
களிகூர்வை யாளிவெளி பாரென்றாளே

நான் வடதிசையிலுள்ள காசி என்னும் தலத்தைச் சேர்ந்தவள். காஞ்சியாகிய தலத்துக்கு வந்தேன். தெய்வமானது அந்த நகரத்தை இங்கேயே எனக்குக் காட்டிவிட்டது. என் எண்ணப்படியே இறைவனும் உம்மை என் எதிரில் அனுப்பியிருக்கிறான். மன்மதனுக்கும் இரதிக்கும் ஏற்ற இடம் இது. இங்கே உம்மை அனுப்பியிருக்கிறான். நானோ கிளி; நீரோ மன்மதன். என் விருப்பப்படி ஆண்சிங்கம்போல என்னைச் சேர்ந்து களிப்பீர் என்றாள்.

உத்தகாசி - வடதிசையிலுள்ள காசிமாநகரம். கச்சி-காஞ்சி. அதை - கச்சிநகரத்தை. பிரசாதித்தது - கொடுத்தது. மாரன் - மன்மதன். களி - மகிழ்ச்சி, இன்பம். கூர்வை - அடைவாய். யாளி - சிங்கம்.

**பாடவேறுபாடு** - 1. நாணுத்தர 2. எதிர்ப்பவே 4. மானுக்கு 5. துரைநீயுன்.

**சுவடிச்சொல்** - 3. யிண்ணைக்

### வசனம்

இவ்விதம் பேசிய ஏந்திழையாருக்கு வணிகன் அப்பதோ, பதில் வார்த்தை என்ன சொல்வான். (13)

ஏந்திழை - பெண்

**(தரிசனன் நீயார் என நீலியை வினவுதல்)**

### சிந்து

65. நீயார் என்னைப் [1]போகிப்பன் என்பது
நீதியல்ல மானே - என்
வாயால் [2]இவ்விசேஷம் சொன்னாலும்
வரும்பாவம் என் தனக்கே (நீயார்)
[3]வேறுகுலத் தாரழகாய் இருந்தாலும்
மெல்லியர் ஆனவர்கள்
ஏற முகம்பார்க்க லாகவே யாகாது
எந்தனைக் கண்டுருக - (நீயார்)
பாரி யல்லால்பர தாரத்தைக் கண்ணாலும்

பார்க்கிறது இல்லை கண்டாய் - என்
பேரினில் மோக விகாரம் உனக்குப்
பிறந்தென்னை நீ வேண்ட - (நீயார்)
கொஞ்சிய பேச்சும் 4குளிர்மதி முகமும்
5குலிகளும் நாணயமு
மபரஞ்சியு மாய்இள வஞ்சியு மாயெனைக்
கெஞ்சி மயல்மிஞ்ச - (நீயார்)
முன்னே பின்னென்னைக் கலந்துற வாடிய
மோகினி யார்போல
நீ யார் பெண்ணே?

பெண்ணே! நீயாரோ! நான் யாரோ! என்னை அடைய விரும்புவது சரியல்ல. என் வாயால் இந்தச் செய்தியைச் சொன்னாலும் எனக்குப் பாவம் வந்துசேரும்.

வேறுகுலத்து ஆண்கள் எவ்வளவு அழகாய் இருந்தாலும் பெண்கள் அவர்களை இந்த எண்ணத்தோடு பார்க்கவே கூடாது. அப்படியிருக்க நீ ஏன் என்னைக் கண்டு மயங்க வேண்டும்?

நான் என் மனைவியைத் தவிர வேறு பெண்களையோ பிறர் மனைவியையோ கண்ணாலும் பார்க்க மாட்டேன். என்மேல் மோகம் ஏற்பட்டது எதனால்? அழகிய மதிமுகத்தோடு பொன்போன்ற உடல் ஒளிவீச, கவர்ச்சியான உடல் உறுப்புகளோடு மிகவும் ஒழுங்கானவளைப் போல வந்து கொஞ்சி கொஞ்சிப் பேசிக் கொண்டு வரும் இளமை வாய்ந்தவளாகிய நீ யார்? என் ஊர், பெயர் எதுவும் உனக்குத் தெரியாது; முன்னாலே என்னோடு கலந்து உறவாடிய மோகனியைப் போல வந்த நீயார்? என்றெல்லாம் அவளை விரட்டினான்.

போகிப்பேன் - அனுபவிப்பேன். விசேஷம் - இந்தச் செய்தி. மெல்லியர் - மகளிர். பாரி - மனைவி. பரதாரம் - பிறர்மனைவி. மதிமுகம் - நிலவு போன்ற முகம். குலி - உடல்உறுப்பு. அபரஞ்சி - பொன் போன்ற உடல். வஞ்சி - பெண். நாமம் - பெயர். பரியாசம் - கேலி. மோகினி - தேவதை.

**பாடவேறுபாடு** - 1. போகிப்பளென்பதும் 2. இவ்விசேழம் 3. வேறுகுலத்தழகாய் 4. குபேரன் முகமும் 5. குலுக்கிய நாகணய மாயவரஞ்சியுமாய் 6. அறிந்தவள் போலவே 7. என்னை.

(நீலி நகரத்தைத் தோற்றுவித்தல்)

## திபதை

66. நீதிதான் அல்லவென்று நிறுத்தியே - நடக்க்க்
கோதையும் மறைந்தனள் கொடியகா னத்தில்
செட்டிக்கு முன் இவள் சீக்கிர மாய்ச்சென்று
பட்டண [1]மாகப் பலப்பல பேயை
கடைபோட்டு வில்லென்று கட்டளை யிட்டு
மடவா ருடன்இவள் மாமயில் போலே
பொன்ஆ பாரணமும் [2]பொற்றுகில் ஆடையும்
மின்னார் தமக்கெலாம் வேந்தமை யாகிச்
சிலமட வார்திமி தித்தியென் றாட
பலமட வார்வினை [3]பற்றியே பாட
[4]வெண்சா மரம்[5]சில மெல்லியர் வீசப்
பெண்சே ணையிலிந்தப் பெண்பெரு மாளும்
[6]வெகுநாக ரீகமாய் வியாபாரி வாற
திசைநோக்கி [7]நீலி செருக்காய் இருக்கில்
தெரிசன செட்டியும் [8]சிந்தையு ள்ளாக்கி
அரிசிவ னேயிந்த ஆத்மீகம் என்ன?
வனத்திலே தனித்தொரு மான்வாறது என்ன?
[9]மனத்தில்என் மேலவள் [10]மயலாவது என்ன?
கடிந்துநான் வரஅவள் காணாது மென்ன?
தொடர்ந்துமுன் னால்வந்து [11]தோற்றவது என்ன?
[12]உம்மையல் லாமலொன்று உறுவதும் உண்டோ?
அம்மையப் பாவென்றுஅவன்வரும் போது
பட்டண வீதியும் பலபல கடையும்
திட்டமாய் இவள்பல [13]தெரிவைய ருடனே
கேளிவி லாசசங்கீதவாத் தியமும்
மேளவாத்தியத்துடன் [14]வீற்றிருந் தவளைக்
கண்டிது புதுமையாம் காட்டினில் என்று
வண்டிமேல் [15]இருந்துதாழ வாரது போலே

தேங்குநீர் மடையைத் திறந்தது போலே
ஆங்கம் எடுத்துப்பா ராமல்சீக் கிரமதாய்ப்
போவது கண்டிவள் பூதவர்த் தகரை ஏவினாள்
அவர்கள்வந்து ஏனையா போறீர்
எங்கில்லா வஸ்துவும் [16]இவ்விடத் துண்டு
எங்கள்வியா பாரம்சற்று இருந்துநீர் பாரும்
நிலந்தொழும் காஞ்சி நிலத்தினுக்கு எங்கள்
தலங்களில் இருக்கின்ற சம்பிரமும் பாரும்
ஏதொரு சரக்குமக்கு என்னவேண் டியது
மாதிரி காட்டுறோம் வாருமென் றழைக்கில்
தீர்ககமாய் தெரிசன செட்டியும் பெண்பேய்
மார்க்கம்ஈது என்றவன் மனதிலே வைத்து
வர்த்தகம் [17]செய்யநான் வரவில்லை. [18]வேறே
[19]விரக்தியாய்ப் போகின்றேன் மேவிடா தென்று
நில்லாம லேயிவன் ஏகவே பின்னும்
பொல்லாத நீலியப் புறமென்செய் தனளே

மோகம் கொள்ளுவது சரியல்லவென்று கூறிய தரிசனனை விட்டு மறைந்த நீலி அவனுக்கு முன்னால் விரைந்து சென்று அந்தக்காட்டில் ஒரு பட்டணத்தை உருவாக்கினாள். பல பேய்களையும் அழைத்துக் கடை போட்டு விற்கச் செய்தாள். சில பெண்களுடன் சேர்ந்து அவர்களுக்குத் தலைவியாக விளங்கினாள். அப்போது பொன்நகைகளைப்பூட்டிக் கொண்டு பொன்னாலான ஆடையும் உடுத்தி அழகான மயில் போலக் காட்சியளித்தாள். தலைவியாகிய அவள் முன் இருந்த பெண்களில் சிலர் அவளுக்கு வெண்சாமரம் வீசினர்; சிலர் வீணை வாசிக்கச் சிலர் பாடினர்; சிலர் ஆடினர். இவ்வாறு பெண் சேனை சூழ அச்சேனைகளின் மத்தியில் தரிசனன் வருகிற திசையை நோக்கி நாகரிகமாகவும் மிகப்பெருமிதத்தோடும் வீற்றிருந்தாள் நீலி.

சிவபெருமானே! இந்த உயிர்களின் குணம் தான் என்ன? இந்தக் காட்டிலே ஒரு பெண் தனியாக வந்ததன் காரணம் என்ன? என்மேல் அவள் மோகம் கொண்டது எதனால்? நான் கடிந்து பேசியவுடன் அவள் மறைந்து போனது எப்படி? தொடர்ந்து எனக்கு முன்னால் வந்து மீண்டும் மீண்டும் தோன்றுவதற்குக் காரணம் என்ன? அம்மையப்பா! எல்லாம் வல்ல உனக்குத் தெரியாமல் ஒன்று நடைபெறுமா? என்றெல்லாம் எண்ணியவனாய் வழி நடந்தான். வழியில் திடீரென

நகரவீதிகள் பலவற்றையும் அவற்றின் இடையில் கடைகள் பலவற்றையும் கண்டான். மாதர்களின் கலைநிகழ்ச்சிகள் நடைபெறும் ஒரு மன்றத்தில் பாடலும் ஆடலும் இசைக்கருவிகளின் ஒலியும் நடைபெற்றன. அவற்றின் இடையில் பல பெண்கள் சூழ அவள் வீற்றிருப்பதையும் பார்த்தான். நடுகாட்டிலே நகரமும் கடைகளும் பிறநிகழ்ச்சிகளும் புதுமையாக இருக்கிறதே என்று வியந்தான். உடனே வண்டியானது மேடான இடத்திலிருந்து தாழ்வான இடத்தை நோக்கி வருவது போலவும், நீர்த் தேக்கத்திலிருந்து மடையைத்திறந்து நீரை வெளியேற விட்டது போலவும் வெகுவிரைவாகத் தலையை நிமிர்ந்து கூடப் பாராதவனாய் செல்லத் தொடங்கினான். அவனைக் கண்ட நீலி பெண் வியாபாரிகள் வடிவிலிருந்த பூதகணங்களை ஏவினாள். அப்பெண்கள் தரிசனனை வழிமறித்து, ஏனையா போகிறீர்கள்? எங்கும் கிடைக்காத பொருள்களெல்லாம் இங்கு இருக்கின்றன. எங்கள் வியாபாரத்தைப் பாரும். காஞ்சிபுரத்திற்கும் எங்கள் தலத்திற்கும் உள்ள வியாபார நடவடிக்கைகளைச் சிறிது பாரும். உங்களுக்கு என்ன பொருள் வேண்டும்? மாதிரி காட்டுகிறோம்; வாருங்கள் என்று அழைத்தார்கள்.

இச்செயல்கள் எல்லாம் அந்தப் பெண் பேயின் சூட்சியேயாகும் என்று உறுதியாய் நினைத்த தரிசனன் அந்த வியாபாரப் பெண்களைப் பார்த்து, நான் வியாபாரம் செய்ய இங்கு வரவில்லை; மிகவும் வெறுப்போடு செல்லுகிறேன்; நீங்கள் அழைப்பது பொருந்தாது என்று கூறி விட்டு அங்கு நிற்காமலே சென்று விட்டான்.

கோதை - பெண். வில் என்று - கடை விற்குமாறு. மடவார் - மகளிர். பொற்றுகில் - பொன்னாடை. மின்னார் - மின்னலை ஒத்த நிறமுடைய மகளிர். வேந்தமை - தலைமை. சாமரம் - கவரி மான் முடியாலான விசிறி. சேனை - படை. பெண்பெருமாள் - நீலி. செருக்கு - களிப்பு, கெம்பீரம். ஆத்மீகம் - ஆத்மாவின் குணம், உயிர்க்குணம். மான் என்றது நீலியை. கடிந்து - கோபித்துப்பேசி. உறுவது - நிகழ்வது, நடப்பது. தெரிவையர் - பருவமகளிர். கேளிவிலாசம் - மகளிர் வினோத நிகழ்ச்சிகள். தாழ - கீழே. மடை-மதகு, நீரடைப்பு. ஆங்கம் - தலை நிமிர்ந்து என்னும் கருத்தில். பூதவர்த்தகர் - பேய்க்கணங்களாகிய வியாபாரிகள். வஸ்து - பொருள். தலம்-இடம். சம்பிரம் - நடவடிக்கை. சரக்கு - பொருள். தீர்க்கம் - முடிவு. மார்க்கம் - செய்யும் வழி. விரக்தி - வெறுப்பு. மேவிடாது - பொருந்தாது. ஏக - செல்ல.

**பாடவேறுபாடு** - 1. மாகவே 5. சிறுமெல்லியர் 7. நீலியும் 8.சிந்தையகலுக்கு 9.வனத்தில் 10. மயலானது 12. உம்மையல்லால் வேறுதவுவருண்டோ 15. இருந்துதான் 16. இவ்விடத்திலுண்டு 18. என்று 19. விறுத்தியாய்

**சுவடிச்சொல்** - 2. பொத்துயில் 3. பத்தியே 4. வெண்ஞ்சாமரம் 6. வெகுனாகரீக 11. வீத்திருந் 17. செய்யனாள்

### (கையில் குழந்தையுடன் நீலி தொடர்தல்)

### மாளவிராகம்

67. [1]முன்னாள் எறியும் குழந்தையை - மனம்
முன்னியே பசுங்கள்ளிக் [2]கொம்பினைப்

பின்நாள்அக் குழந்தைய தாகவே - கையில்
ஏந்திக் கொத்தந்தை யார்மகள்
போலவே பின்தொடர்ந்தாள்.
செட்டிப் [3]பணிதியும் பட்டுச் சேலையும்
செல்வக் குழந்தையும் ஆகி இராத்திரி
விட்ட விடத்திருந் தோடி வருகிற
விதம தாய்நீலி தனமதாய்ப் - பின்தொடர்ந்தாள்
[4]அவதி யாயந்தக் கச்சிக்கே - குழந்தையும்
அன்பாய் எடுத்தோட் [5]வந்தனள்
எவருந்துணை இல்லை நில்லுமென்றும்
கவலை யாதுமில் லவளைப்போலப்
பின்தொடர்ந்தாள்
ஓடி நான்வரும் அதட்டியால் - பிள்ளை
உடம்பெலாங் [6]கன்னி வெய்யிலிலே - மிக
வாடி அழும்பிள்ளை தன்னைத்தான் - கையில்
வாங்கும் என்றந்த [7]வணிகனார்
[8]பின்தொடர்ந்தாள்

முற்பிறவியில் தன்னைக் கொலை செய்துவிட்டுத் தன் குழந்தையைக் கள்ளிக் கொம்பின்மீது வீசி எறிந்துவிட்டுச் சென்றதை நினைத்தாள். உடனே தான் கொத்தந்தையின் மகள் பூங்கோதை போல வடிவெடுத்தாள். அவள் குழந்தையைப் போன்ற ஒரு குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு தரிசனனைத் தொடரத் தொடங்கினாள். செட்டிப் பெண்ணுக்கு உரிய நகைகளை அணிந்தாள்; பட்டு உடுத்தினாள்; இரவு அவன் விட்டுவந்த பேரம்பாக்கத்திலிருந்து ஓடி வருவது போலவும், அதே சமயம் பேரம்பாக்கத்திலிருந்து காஞ்சிக்கு ஓடிச் சென்று குழந்தையையும் எடுத்துக் கொண்டு பெருந்துன்பத்தோடு ஓடிவருவதுபோலவும் அவனைப் பின்தொடர்ந்தாள். யாரும் துணையில்லாமல்

வருகிறேன் நில்லுங்கள் என்று கூறியவாறே நெருங்கிவந்தாள். நான் ஓடிவந்த அதிர்ச்சியால் குழந்தையின் உடம்பெல்லாம் கன்றிப்போயிற்று; வெயிலின் கொடுமையால் சோர்ந்து அழுகிறது; குழந்தையைச் சற்றே கையில் வாங்குங்கள் என்று கூறியவாறே வந்தாள்.

எறியும் - எறிந்த, வீசிவிட்ட. முன்னி - நினைத்து. பணிதி-நகை. இரைத்திரி விட்ட இடம் - பேரம்பாக்கம். தனமதாய் - தன்மையாய்; நீலித்தன்மையாய் என்றாகலாம். தகர ஒற்று இல்லை. அவதி - பெருந்துன்பம். கச்சிக்கே என்பது - கச்சிக்குச் சென்று திரும்பிவந்தாள் என்னும் பொருளாதல் வேண்டும். குறையாக உள்ளது; பாடவேறுபாட்டில் அத்தொடர் காணப்படுகிறது. அதட்டி - குலுக்குதல். கன்னி - கன்றிப்போதல்.

**பாடவேறுபாடு** - 1. முந்தநாள் 2. கொம்பை 3.பனதி 4. அவதியாய்க் கச்சிக்கேகியே 5.வந்தேன் 6. கண்ணி 7. வணிகன்

**சுவடிச்சொல்** - 8. பின்தொடர்ந்தாள் (எல்லா இடத்திலும்)

**(தரிசனன் நீலியை விரட்டுதல்)**

## திரிபுடை

68. பின்தொ டர்ந்துகைக் குழந்தைப் பிள்ளையைப்
 பிடியும் பிடியு மென்றாள் - அப்போதவன்
சிந்தை தனில்மனை யாட்டி யோயிவள்
 வந்த தேதுபாரி யாகிலும்
[1]பால னேதந்தப் பாணிப் பாய்ப்பெண்
 பசாசுப்போல - வேஷ
தாரி யாகவந் தாளென்றே - கையில்
 சூரி யெடுத்தான்.
வானி லேமின்னல் வரத்தும் போக்கும்இவ்
 வாறு போலிந்த வழியில் அடிக்கடி
நீநின் றாயிது ஞாயம் அலவினித்
 தான்நில் லாதே
அரிகை ஆயுத மாக இருக்கும்என்
 சுரிகை தனக்கிரை யாகப் போறாய்
உரிய கணக்கறிந்து ஒதுங்கிப் போவென
 ஒதுங்கிப் போனாள்

போக வேகருங் காக்கைப் போலலை
வாகி வாரவன் வாய்வ றண்டதி
தாகம் பொறுக்கப்ப டாம லே[2] விர
காகி வாரான்.

குழந்தையைப் பிடியுங்கள் என்று வேண்டிய அவளை நோக்கினான். இவள் மனைவியா? எப்படிவந்தாள்? மனைவியாகவே இருந்தாலும் சிறுவனை எப்படி எடுத்து வந்தாள்? என்றெல்லாம் எண்ணினான். அந்தப் பெண் பிசாசே இந்த வேடத்தில் வந்திருக்கிறது என்ற முடிவுக்கு வந்தான். உடனே கையில் கத்தியை எடுத்தான். ஆகாயத்தில் மின்னல் வருவதும் மறைவதும் போல நான் வரும் வழியிலே அடிக்கடி தோன்றுகிறாய். இது நல்லது அல்ல. இனியும் என் எதிரில் நின்றால் திருமாலைப் போன்று கையில் ஆயுதத்தோடு இருக்கின்ற என் கை வாளுக்கு இரையாகி விடுவாய் என விரட்டினான். உடனே அவ்விடத்தைவிட்டு நீங்கி விட்டாள். தரிசனன் மேலே நடக்கத் தொடங்கினான். காக்கை போல அலைந்து, சோர்ந்து, வாய் வறண்டு, தண்ணீர் தாகத்தோடு வருகிறான்.

பாலன் - ஆண்மகன், குழந்தை. பாணிப்பு - அதுபோல. வான் - ஆகாயம். வரத்தும் போக்கும் - வருவதும் போவதும். இரை - உணவு. அலைவாகி - அலைந்து. விரகாகி - மனம் நொந்து, சோர்வாகி.

**பாடவேறுபாடு** - 1. பாலனெதிர்த்த 2. விறவாகி.

***(தாகத்துடன் வரும் தரிசனன் முன் நீலியின் தண்ணீர்ப்பந்தல்)***

***ஏகதாளம்***

69. வருகிற வணிகனுக் கெதிருற [1]நீலியும்
ஒருபுதுமை யைவெகு விரிவொடு செய்தாள்

பார்க்க அழகாய் [2]மாயத் தண்ணீர்
வார்ப்பவள் போலதிர் காப்பவ ளானாள்

பசும்பந் தற்கீழ் மணற்ப ரப்பி
நித்திரை களுக்கு இசைந்தனள் நீலி

பேய்த்திரள் அதனை இவள்பேத்தி இவளும் பாப்பாத்தி
என்றே தண்ணீர் வார்த்து நின்றாள்

நீரொடு மோரொடு சாலொடு கரகமும்
[3]சீருற இவளந்தக் காரடம் ஆனாள்

முறைதனி லேசெட்டி கணவனென் றேயந்த
[4]நெறிதனி லேயெதிர் உறவிருந் தாளே

தாகத்தோடு வருகிற தரிசனன் எதிரில் மாயமாய் ஒரு தண்ணீர்ப் பந்தலை அமைத்தாள் நீலி. பச்சைப் பந்தல் போடப்பட்டது; கீழே மணல் பரப்பி தூங்குவதற்கும் ஏற்ற இடம்போல அமைக்கப்பட்டது. பேய்க் கூட்டத்தில் ஒன்று இவள் பேத்தியாக இருந்தது. இவள் ஒரு பாப்பாத்திபோல குடத்தின் அருகில் நின்று தண்ணீர் வார்ப்பவளைள் போல இருந்தாள். சால், கரகம் என்னும் பெரியதும் சிறியதுமாகிய பாத்திரங்களில் நீரும் மோரும் நிறைத்து வைத்து அழகான மாயக்காரியாய் நின்றாள். தரிசனன் தாகத்தோடு வருகிற வழியில் கணவனை எதிர்பார்த்திருக்கிற மனைவிபோல எதிரிலே நின்றாள்.

மாயம்- வஞ்சகம், தந்திரம். பசும்பந்தல்-பசுமையான இலைகளைக் கொண்டு போடப்பட்டபந்தல். சால், கரகம் - தண்ணீர் வைக்கும் பெரிய, சிறிய பாத்திரங்கள். காரடம் ஆனாள் - வித்தைக்காரிபோல அங்குத் தண்ணீர் வார்த்தாள். நெறி - வழி (தரிசனன் தாகத்தோடு வருகிற வழி). எதிர் உற - எதிரில் தோன்றுமாறு.

***பாடவேறுபாடு*** - 1. நீலியங்கு. 2. தண்ணீர்ப் பந்தலுமாய் 3. சீருடனிவளந்த 4. முறைதனிலே.

***(தண்ணீர்ப்பந்தலிலிருந்த பேய்கள் ஓடுதல்)***

***சம்பை***

70. தீர்த்தமன தாய்மிக விடாய்த்துவரு வான்பந்தல்
நேர்த்தியும் பிராமணத்தி வார்த்தையும்கண் டானே

பேய்ப்பந்தலென் றறியாமல்
பெருந்தாகத் தாலிதுதண்
ணீர்ப்பந்தலென் றேசெட்டியும்
நிசமாகக் குறித்தான்
தண்ணீர்வெண் ணீறுழலை
தான்அடங்க நீர்மோரும்
உண்ணீரென் றேசெட்டியை

உபசரித்துப் பின்னையும்
இட்டான பாக்கியமும்
இவ்விடத்துண்டு இவ்வேளைப்
பட்டினியாய்ப் போகாமல்
பசியாறும் என்றாள்
தெரிசினன்அப்போதுபந்தல்
சேரவந்து கையில்இருந்த
சுரிகையைப்பந் தலின்மீது
சொருகவந்து அப்போது
காயும்பாணம் சல்லடைகள்
கன்றிலிட்டொன் றாய்க்கொகுத்த
மாயமாய்ப்பறந்துஅப்
பேயெலாம் போச்சே

தண்ணீர்த் தாகத்துடன்வரும் தரிசனன், பந்தலின் அழகையும் பாப்பாத்தியின் பேச்சையும் பார்த்தான். இது மாயப்பந்தல் என்பதை நினைத்துக்கூடப் பார்க்காமல் பந்தலை அடைந்தான். தண்ணீர்த் தாகம் அடங்க நீரும் மோரும் அளித்து உபசரித்த பாப்பாத்தி தங்கள் விருப்பத்திற்கேற்ற எல்லாப் பொருள்களும் இங்கே இருக்கின்றன. பட்டினியாய்ப் போக வேண்டாம். இந்தவேளை பசியாற உண்டு போகலாம் என்றாள். தரிசனன் கையிலிருந்த கத்தியைப் பந்தலில் சொருக நினைத்துப் பந்தலின் அருகில் வந்தான். உடனே சூரியனின் கதிர்கள் பந்தல் துவாரங்களின் வழியே நுழைந்து சூட்டை உண்டாக்கின. உடனே அப்பேய்கள் எல்லாம் பந்தலைவிட்டு மாயமாய் மறைந்துவிட்டன.

தீர்த்தமனம் - தண்ணீர் தாகத்துடன். விடாய் - தாகம். நேர்த்தி - சிறப்பு. குறித்தான் - நம்பினான். உழலை - தாகம். இட்டான - விருப்பமான. காயும் பாணம் - சூரியனின் கதிர்கள். சல்லடை - துவாரம்.

**(பிசாசுவடிவில் நீலி)**

## திபதை

71. பழிகாரி நீலி பசாசுரூப மாகி
விழிபெரு முற்றி விசாலம தாகி

செவிபெரு மூக்கு சில்லறை வீடு
கவளங்கொள் வாய்வெல்லம்
காய்ச்சும் இல்லம்போலே

வரம்பென்ன னாத கவளப்பல் ஒருமார்செங்
குரங்கென்ன நாக்களமே கஞ்சிகள் உண்டாய்

நடப்பென மரங்களை நாடலாம் தொம்பாகி
இடையிறுக் கச்சிறு கிரிதன பாரம்

அங்கம்ஐங் காணி அகலம் பெருத்து
துங்கம்எட் டுப்பனை தூரம் வளர்ந்தே

படிநடு நடுங்கவார் பரித்தவள் மூச்சு
விடுவது அகோரமாய் விழிபுகை எழும்ப

கைதட்டி யேஆங் காரமாய் எழுந்து
கைவிட் டேவணி காதியா வென்று
சீறிநின் றாள்அந்தத் தெரிசனன் தனக்கும்
கூறவாய் இலைகெற்பம் குபீரென்று எரிந்து

மார்புதிடுக் கிட்டு வாய்மிக வறண்டு
வேர்வை உடம்பெலாம் வேர்த்திவன் சோர்ந்து

காலனி லும்பூதா காரமாய் இருந்த
நீலியைக் கண்டி அதிரசீ வன்அதி

உள்ளம் பயந்துபின் உறுதிய தாகி
தெள்ளிமை சுரிகையைச் செங்கையில் எடுத்துப்

பிழைக்கிலம் என்றவன் பிதற வெறீஇய
வழிக்குமுன் வந்து வளைத்துக்கொண் டாளே.

நீலி பிசாசு வடிவமெடுத்தாள். அப்போது அவளுடைய கண்கள் பெரிய முற்றத்தைப்போலத்தோன்றன;செவிகள் விசாலமாயின; மூக்கு சிறிய அறையை உடைய வீடுபோல இருந்தது; உணவு உண்ணும் வாய் வெல்லம் காய்ச்சும்

கொப்பரை போலக் காணப்பட்டது; பற்கள் ஒவ்வொன்றும் ஒருமார் நீளமுடைய வரப்பு போலிருந்தன. தனங்கள் பெரிய மலை போன்றன; ஐந்து காணி நில அளவில் உடல் பருத்துப் பரந்திருந்தது; எட்டுப்பனையளவு உயர்ந்து காணப்பட்டாள்; பூமியானது நடுநடுங்க ஆரவாரம் செய்தாள். அச்சம் உண்டாகும்படி பெருமூச்சு விட்டாள். கண்களிலிருந்து புகை எழும்பியது. மிகக் கர்வத்தோடு கைகளைத் தட்டியவாறே எழுந்தாள். வணிகர்களின் தலைவனே! என்று உரத்துக் கத்தினாள்.

பேய் வடிவத்தைக் கண்ட தரிசனன் வாய்திறக்கவில்லை. வயிறு எரிந்தது; வாய்வறண்டது; மார்பு திடுக்கிட்டது; உடல் வியர்த்தது; எமனைக்காட்டிலும் பயங்கர வடிவோடு காணப்பட்ட அவளைக் கண்டு சோர்ந்து, பயந்து இறுதியாகத் தெளிவடைந்தான். இனி பிழைக்கப் போவதில்லை என்ற மனக்கலக்கமடைந்து கையில் கத்தியை எடுத்தான். உடனே பிசாசு வடிவிலிருந்த நீலி அவன் மேலே செல்லமுடியாமல் வளைத்துக் கொண்டாள்.

ரூபம் - வடிவம். விழி - கண். பெருமுற்றி-பரந்த முற்றம். கவளம்-உணவு. இல்லம்-வீடு; கொப்பரை எனினுமாம். வரம்பு- அணை. கிரி-மலை. காணி-நில அளவு; 11 / 3 ஏக்கர் கொண்டது. அங்கம்- உடல். துங்கம் - உயரம். படி-பூமி. ஆர்ப்பரித்து - ஆரவாரம் செய்து. அகோரம் - அச்சம் உண்டாகும் வடிவம். வணிகாதிபர் - வாணிகர்தலைவர்(விளி). சீறி-உரத்துக்கத்துதல். கெற்பம் - வயிறு. காலன் - எமன். தெள்ளிமை-தெளிந்து. வெறீஇய-கலங்கி.

(நீலியின் சூட்சி)

**சம்பை**

72. மறித்துக்கொண்டு பெரும்பூத மாயெதிர்த்த போதுசெட்டி
குறித்தசுரி கையில்உன்னைக் கொல்லுவேன் என்றெழுந்து

கொக்கரித்து வாளெடுத்துக் கொல்லுவன்என் றேயிவனும்
கொக்கரிச்ச போதிவளும் எக்கரிச்சுக் கொண்டு

துள்ளடக்கத் தான்உன்னைத் தொடர்ந்துவந்த என்னைத்
துள்ளடக்க வரும்சினத்தை உள்ளடக்கும் என்றாளே

பட்டுடுத்திப் பணிபூண்டு பழையனூ ரார்க்குநல்ல
கட்டுரைத்துன் மார்பிளக்கக் கிட்டுவேன் என்றாளே

செட்டிமரபு ஆனோர்க்குச் சேவுகமுண் டோவறின
கெட்டுழலு றாய்அதனை விட்டுவிடென் றாளே.

பூத வடிவில் நின்று அவனைத் தடுத்த உடனே, தரிசனன் சூரிகையால் கொல்லவேண்டும் என்று எண்ணி எழுந்தான். உன்னை வாளால் கொல்லுகிறேன் என்று கத்தினான். உடனே அவள் உன் துள்ளலை அடக்கவே நான் உன்னைத் தொடர்ந்து வந்தேன் என்று எதிர் கர்ச்சனை செய்து உன்துள்ளலை அடக்கு என்றாள். மேலும் பட்டு உடுத்தி, நகைகள் அணிந்து பழையனூரார் முன் வந்து பேசி உன்னைக் கொல்ல வருகிறேன்; செட்டி மரபில் பிறந்தவருக்கு வேறு தொழில் ஏது? வீணாக ஏன் சுற்றித்திரிகிறாய் என்றும் கூறினாள்.

மறித்து - தடுத்து. எக்கரித்தல் - எதிர்த்துக் கொசித்தல். துள்ளடக்க - துள்ளிக்குதிப்பதை அடக்க. கட்டுரைத்து - உறுதியாகச் சொல்லி. கிட்டுவேன் - அடைவேன்; வருவேன். சேவுகம் - சேவகம் - தொழில். வறின - வறிதே - வீணே. உழலுறாய் - ஆடுகிறாய், சுற்றித்திரிகிறாய்.

*(தரிசனனின் சினம்)*

**ஏகதாளம்**

73. எனவே தெரிசனன் இனிமெல்லதாய் - உனை
வாளினுக்கிரை பண்ணவென்றே

நேசங்கள் போல்பல வேசங்கொண்டெனைப்பரி
யாசம்செய் தால்இனி மோசம்போ வேனோ

தனைக்கொல்ல வரும்பசு தனைக்கொலமுயன் றார்எனின்
உனைக்கொல்லு வேனென்று சினத்துவந் தானே.

இவளை எப்படியும் வாளால் கொல்லவேண்டும் என்று கருதினான். பலவாறாக வடிவமெடுத்து என்னை ஏளனம் செய்தால் சும்மா விட்டுவிடுவேனா? பசுவேயானாலும் அது தன்னைக் கொல்ல வந்தால் சும்மா விடலாமா? பசுவைக் கொல்லலாம் என்பார்கள். அதேபோல பெண்ணேயாயினும் உன்னைக் கொல்லுகிறேன் என்று கூறி வந்தான்.

பரியாசம் - பரிகாசம் - கேலி. மோசம் - ஏமாறுதல்

*(நீலி மன்னித்தல்)*

## திரிபுடை

74. செட்டியார் இந்தவித மாய்ச்சொல்லிச்
சினத்துவந்த வேளை நீலிசொல்வாள்
கெட்டபால் நல்லபால் ஆவதோ
விட்டுவிடு என்றாள்
பழைய பழிக்கும் என்தமையன் பழிக்கும்
பழைய னூருக்குக் கொண்டுபோய்
இன்னையப் பொழுது போன பின்உன்
பிராணனுக் கழிவுசெய் வேனே
விதியும் உனக்கின்று முடிந்த தால்இந்த
வேளையி லேவரப் பிரமையாய் - நல்ல
மதியும் கொடுத்தெல் லோர்க்கும் ஈசுவரன்
பொதுவல் லோதான்
வார்த்தை வார்த்தைக்கு வெட்டு வேன்என்று
மந்திர வாள்கையில் எடுக்குறாய்
இன்று ராத்திரி காலத்தில்
இருக்குதுன் சாமார்த்தி யமெல்லாம்
உன்னை நான்கொல்லப் பாரமோ-என்
உபாயம் எழுபது பேருக்கும்
சேவை வழிபண்ணத் தான்உன்னைச்
சீவனுடன் இப்போ மன்னித்தேன்.

தரிசனன் கோபத்தோடு அவளைக் கொல்ல நினைத்தபோது நீலி சொல்லுகிறாள். ஒருமுறை கெட்டுப்போன பால் மீண்டும் நல்லபால் ஆகாது. இனி கதையை விடு. முற்பிறவியில் என்னைக் கொன்ற பழிக்கும் இப்பிறவியில் என் அண்ணனைக் கொன்ற பழிக்கும் சேர்த்து இன்றைய இரவே உன்னைப் பழையனூருக்குக் கொண்டுபோய் அங்கேயே கொல்லுகிறேன். உனக்கு விதி முடிந்ததால்தான் இப்படிவர எல்லோருக்கும் எண்ணம் தோன்றியது. இறைவன் பொதுவானவனல்லவா் பேசும்போதே வெட்டுவேன் என்கிறாய்; கையில் வாளை எடுக்கிறாய் இன்று இரவு உன் திறமையைப் பார்க்கிறேன். எழுபது பேரையும் தண்டிக்கவே இப்போது உன்னைச் சும்மா விடுகிறேன் என்றாள்.

சினத்து -கோபித்து; கோபமாக. கெட்டபால் - திரிந்துபோன பால். ஆவதோ-ஆகுமோ? (ஆகாது). பழையபாதி-முற்பிறவியில் புவனபதியும் நவக்கியானியுமாய்ப் பிறந்து கணவன் மனைவியாக வாழ்ந்த காலத்து, திருவாலங்காட்டுக்கு வந்தபோது கருவுற்றிருந்த நவக்கியானியையும் கருவையும் கொன்ற பழி (பாட்டு எண் 101-104 காண்க). தமையன் பழி - நீலன் தங்கிய மரத்தை வெட்டிய பழி. இண்ணையப் பொழுது - இன்றையப் பொழுதுஇன்றைக்கு. பொழுதுபோனபின் - மாலைக் காலத்தில்; சூரிய மறைவுக்குப் பிறகு. பிராணன்-உயிர். விதி - தலைவிதி; இங்கு வாழும் நாள். பிரமை- உண்மை; அதிசயிக்குமாறு. மதி-புத்தி. மந்திரவாள்-தரிசனன் வைத்திருந்த சுரிகை. பாரமோ?- கடினமோ? (இல்லை).

### வசனம்

மன்னித்தேன் என்ற மாகநீலி சொல் தனக்குச் செட்டிதான் என்ன சொல்வான். (தாய், ஊரார், மனைவி கூறியவற்றை நினைந்து தரிசனன் வருந்துதல்)

(14)

**(தாய் சொன்னது உண்மையாயிற்று என வருந்துதல்)**

### சிந்து

75. என்தாய்சொன்ன சந்தேகங்கள் இப்போ மெய்யாச்சே
வந்தாள் அவளைமோசம் போக்கிவந்தேன்
தணியாய் அவர்கை நோக்கி ......(என்தாய்)

எத்தனை புத்தி யூரார் உரைத்துச்சொன் னார்கள் சீராய்
அத்தைச்சித் தத்தில் எண்ணாமல்
இத்துறா சென்றேன்விதி நேராய்
- நினைத்தது . . . . (என்தாய்)

கந்திருந்தும் மோசம் போனேன் - காட்டில்
ஒருத்தன்நான் நினைத்தது
வருமென்று காணேன் - புத்தில்
இருந்த ஆந்தையானேன். . . . . . . . (என்தாய்)

பெண்டாட்டி யையிட்டு வந்து - பேரம்
பாக்கத்தில்பிறிந்து

கொண்டாட்ட மாயோடி வந்து
குன்றினேன் ஆவிகள் நொந்து . . . . . . . (என்தாய்)

குந்தகம் உண்டென்றந் நாளில்
[1]கூறின படிஇந் நாளில்
வந்தது கண்டேன்பெண் பூதம்
வரவே என்உயிர் சேதம் . . . . . . . (என்தாய்)

என்தாய் சொன்னசந் தேகங்கள்
இப்போமெய் யாச்சே

பழையனூருக்கு என்று புறப்பட்டபோதே என்தாய் தடுத்தார்கள். அவர்கள் சொன்னது உண்மையாகிவிட்டது. மனைவியை நடுவழியில் விட்டுப் பிரிந்துவந்தேன். ஊரார் சொன்ன வார்த்தைகளைச் சிறிதும் மதிக்காமல் வந்தேன். பலவழிகளிருந்தும் அவற்றை எல்லாம்விட்டு தனிமையாய் புற்றில் நுழைந்த ஆந்தைபோல் விழிக்க நேர்ந்தது.

மனைவியைப் பேரம்பாக்கத்தில் விட்டுவந்ததன் பயன் இப்போது உயிருக்கே ஆபத்து வந்தது. கேடுவரும் என்று அன்றே சொன்னார்கள். இன்று பெண்பூத வடிவில் வந்துவிட்டது என்றெல்லாம் நினைத்து வருந்துகிறான் தரிசனன்.

வந்தாள் அவளை என்றது என்றது மனைவியை. மோசம்போக்கி - வஞ்சனைசெய்து. சித்தம் - மனம். இத்துறா- இத்துரா - அற்பத்தனமாய். கந்து - வேறுவழி. புத்து - புற்று; வளை. இட்டுவந்து - அழைத்துவந்து பிறிந்து-பிரிந்து விட்டுநீங்கி. கொண்டாட்டம் - மகிழ்ச்சி; பொழுதுபோக்கு. குன்றினேன்-வருந்தினேன். ஆவி- உயிர். குந்தகம் - குழப்பம்; கேடு. சேதம் - அழிவு.

**சுவடிச்சொல்** - 1. கூடினபடி.

(தரிசனன் ஆயுதம் வீசத் தொடங்குதல்)

### ஏகதாளம்

76. தாய்சொன்ன வார்த்தையைத் தாண்டிவந்தே - இந்தப்
பேய்முன்னி லேதவிப் பாயெண்ண மாச்சே
நயனங்க ளின்எதிர் சயனங்கள் பார்த்தும் - இப்

பயணம்வந் தேநெஞ்சில் வயணம்எண் ணாதே
ஆட்டியைத் தான்துணைக் கூட்டி - வராமல் இக்
காட்டினில் [1]தனிக்குறங் காட்டம தானேன்
பேயெனச் சொல்லப் போபோ வெனத்தள்ளி - வர
பாதையில் வந்தகப் பட்டுக்கொண் டேனே.
நாலிரு கண்ணுள்ள தேவன் அல்லோர்க்கு
நீலியி னாலிந்தச் சோலிவிளைத் தானே
உரலுக்குள் இருந்துகொண்டு உலக்கைக்குப் பயப்பட்டுச்
சாவதற் கிடமில்லை சரியது வாச்சே
பள்ளத்தில் நீருள்ள பாங்கன் றேபுது
வெள்ளத்து ஏறிய மீனது வாச்சே
ஆயுதம் எடுத்துச் சதங்க மாச்சென்று
போயவள் மேல்வலு வாயிவன் வீசில்

தாய்ச்சொல்லை மீறிவந்து இந்தப் பேயின்முன் தவிக்க நேர்ந்துவிட்டதே! கண் எதிரே பல தீய சகுனங்களைப் பார்த்தும் மீறி இப்பிரயாணத்தைத் தொடங்கினேன். இவற்றையெல்லாம் நான் நினைத்துப் பார்க்கவில்லையே! மனைவியை உடன் அழைத்துவராமல் காட்டில் ஒற்றைக்குரங்குபோலக் கெட்டுத்திரிய நேர்ந்ததே! பேய் என்று சொன்னவர்களைப் பழித்து வந்தேன். வழியில் அந்தப் பேயிடமே சிக்கினேன். பிரமதேவன் மற்ற எல்லோருக்கும் நீலியால் இந்தத் தொல்லையைக் கொடுக்கவில்லையே! உரலுக்குள் அகப்பட்டுக் கொண்டேன். இனி உலக்கைக்குப் பயந்தால் பயன்என்ன? பள்ளத்து நீரில் இருந்து புதிய வெள்ளத்தில் ஏறிய மீனைப்போலத் தவிக்கலானேன். இந்த நிலை பலமுறை நடந்துவிட்டதே! இவ்வாறு எண்ணி வருந்தியவாறே அவள்மீது கத்தியை வீசினான் தரிசனன்.

தாண்டி - மீறி. முன்னில் - எதிரில். நயனம் - கண். சயனம் - சகுனம் என்பதன் கொச்சைச் சொல்; சகுனம்-நிமித்தம். வயணம் - வகை; பலவகை விருப்பம். ஆட்டி - மனையாட்டி; மனைவி. குரங்காட்டம் - குணம் கெட்ட செயல்களைக் குறித்தது. நாலிருகண்ணுள்ள தேவன் - எண்கணன்; பிரமன். அல்லோர் - மற்றவர். சோலி - தொந்தரவு. விளைத்தான் - விளைவித்தான்; உண்டாகச் செய்தான். பாங்கு - மாதிரி. சதங்கம் - பலநாள். வீசில் - வீச.

**சுவடிச்சொல்** - தனிகுறங்காட்டம்.

(நீலிக்கு அஞ்சி தரிசனன் திருவாலங்காடு அடைதல்)

## திபதை

77. வீசவே நீலி வெருவிமுன் ஓடி
தேசிகன் மேலே திரும்பிய போதில்
கொக்கரிப் பாள்இரு கூர்விழி களிலே
அக்கினிப் பொறிகள் அதிகமாய்ச் சொரிவாள்

மற்றுந . . . தசின்ன வணிகன் எதிர்த்தே
பத்தியாய் வீசில்அப் பால்ஓடிப் போவாள்

மறுகியே செட்டி மனது கலங்கப்
பிற்கே யதட்டிப் பிடிக்கிறேன் என்பாள்

தெரிசனச் செட்டியும் திரும்பிக்கை வாளால்
அரியுறேன் என்று அண்டையில் வரவே

அந்தரத் தெழும்பிமுன் னாகவெ மும்பிப்பின்
வந்தெதிர்ப் பாள்இந்த வணிகனும் சூரி

வீசவே மாயமாய் விலங்கியே பின்னும்
கூடலிட்டு இவனைக் குறுக்கவே வளைப்பாள்

தாக்குடன் சூரிதனை எடுத்தவன் மேலே
நோக்குவாள் செடியில் நுழைந்தோடிப் போவாள்

இந்தஅட வாய்ச்செடியின் முன்னே நீலி
வந்தெதிர்த் தேபின்பு மாயமாய்ப் போனாள்

உடம்பெல்லாம் இவனுக்கு உதறல் எடுத்தே
ஓட்டபின் அலறிக்கொண்டு ஓடியே அவனும்

முன்பின்னும் பார்த்திவன் முடுக்குடன் ஓட
அன்புள பழனந்திரு வாலங்காட் டினுக்கு

இடைப்பட்டு வம்பை ஈசுவரன் கோயில்
உடையதவ் விடத்திரு ஊராருங் கூடிச்

சபையாய் இருந்த சனங்களைக் கண்டே
[1] அபயமிட் டானப்போ தவர்களும் பார்த்து

எதிரோடிய சோடியை ஏன்பிள்ளாய் மெத்த
அதிரெடுத் தாய்இனி அஞ்சாதே யென்று

தழுவிக்கொண் டிவனைச் சபைக்கிட்டுப் போனார்
பழையனூ ரார்க்கெல்லாம் பணிகுறேன் என்றுகை

கூப்பி யிச்சபை காக்கவே அபையம்
செய்குறேன் என்றும் தெய்வமே அபையம்

தொண்டைநன் னாட்டுத் துரைகளே அபையம்
மண்டலா திபர்க்கு வணங்குறேன் அபையம்.

மருவும் மகாகுல மன்னரே அபையம்
பரவிய தொருபூமி பாலரே அபையம்

ஆதர வானவே ளாளரே அபையம்
கோதிலா மேழிக் கொடியரே அபையம்

அபையம்நான் உங்கள் அடைக்கலம் என்று
சபைதனில் செட்டியும் சாற்றிநின் றானே.

தரிசனன் கத்தியை வீசிய உடனே நீலி பயந்து ஓடி தரிசனன் முன்னால் பாய்ந்து கொக்கரித்தாள். கண்களில் தீப்பொறி பறக்கப் பார்த்தாள். இந்தச் சிறியவனை எதிர்த்து நாமும் வீசினால் பயந்து ஓடி விடுவான். பிறகு அவன் மனம் கலங்குமாறு செய்வேன் என்று சும்மா இருந்தாள். திரும்பவும் தரிசனன் வாளை எடுத்துக் கொண்டு நெருங்கினான். மேலே எழும்புவாள்; முன்னால் தோன்றுவாள், பின்னால் வந்து எதிர்ப்பாள்; இப்படிப் பலவாறு தாக்கத் தொடங்கினாள். தரிசனன் சூரியை வீசியவுடன் விலகிவிடுவாள். பிறகு நெருங்கிவந்து தாக்குவாள். சூரியை எடுத்து அவன் மீது வீசுவாள். செடிகளுக்குள் நுழைந்து ஓடுவாள். இப்படிப் பலவாறு தாக்கிவிட்டுத் திடீரென மறைந்துவிட்டாள்.

தரிசனன் உடல் நடுங்க, அலறி ஓடினான். முன்னும் பின்னுமாகப் பார்த்துக் கொண்டே ஓடினான். திருவாலங்காட்டுக்கும் பழையனூருக்கும் இடையிலுள்ள திருவம்பை என்னும் இறைவன் கோயிலில் இரண்டு ஊர்மக்களும் கூடியிருந்ததைக் கண்டான். அவர்கள் முன் ஓடினான். அவர்களும் தரிசனனைப் பிடித்து நிறுத்தி ஏன் நடுங்குகிறாய்? அஞ்சாதே! என்று கூறித் தழுவிக்கொண்டனர்.

பழையனூராருக்கெல்லாம் என் வணக்கம் என்றுகூறிக் கை கூப்பினான். இச்சபையோர் என்னைக் காப்பீர்களாக! தெய்வமே! தொண்டைநாட்டுத் துரைமார்களே! இந்த நில மண்டலத்தின் தலைவர்களே! உயர்ந்த குலத்தலைவர்களே! பரந்த இந்த நிலவுலக மக்களே! ஆதரவளிக்கும் வேளாள குலத்தவரே! குற்றமற்ற கலப்பைக் கொடியைப் பெற்றவர்களே! நான் உங்கள் அடைக்கலம், காப்பாற்றுங்கள் என்று கூறி நின்றான் தரிசனன்.

வெருவி-பயந்து. தேசிகன் - வணிகன். கொக்கரித்தல் - கெற்சித்தல், பலவாறு கத்துதல். விழி - கண். அக்கினி - நெருப்பு. மறுகி - மனம் குழம்பி. அந்தரத்து - மேலே. சூரி - கத்தி (மடக்குக்கத்தி). கூடவிடுதல் - நெருங்குதல். அடவாய் - (இந்த) விதமாக. உதறல் - நடுக்கம். பழனம் - மருதநிலம்; பழையனூர் எனினுமாம்.

இருஊரார் - பழையனூராரும் திருவாலங்காட்டு மக்களும். அபயமிட்டாள் - ஓலமிட்டு முறையிட்டாள். சோடி - சோடு - இரண்டு; கணவன் மனைவி; இங்கு சோடி என்றது தங்களிடம் அடைக்கலம் புகுந்த நீலியின் சோடியாகக் கருதிய தரிசனனைக் குறித்தது. பிள்ளாய் - மகனே!(விளி). அதிர் - நடுக்கம், பயம். அஞ்சாதே - பயப்படாதே. இட்டுப்போதல் - அழைத்துப்போதல். துரைகளே! - மேன்மக்களே! (சான்றோர்களே !) விளி. மண்டலாதிபர் - மண்டலம் + அதிபர்; மண்டல அதிபர்; மண்டலாதிபர் - மண்டலம் - நாடு. அதிபர்-தலைவர். மருவுதல் - பொருந்துதல். மகாகுலமன்னர்-(பொருந்திய) உயர்குல மன்னர். பூமிபாலரே! (பரந்த) நாட்டுத்தலைவர்களே! (மன்னர்களே). ஆதரவு - அன்பு, உதவு. வேளாளர் - பழையனூர் வேளாண்குடிமக்கள். கோது - குற்றம். மேழிக்கொடி - கலப்பைக் கொடி. மேழிக்கொடியர் - பொதுவாக மருதநில மக்களாகிய வேளாளரைச் சுட்டியது. அடைக்கலம் - புகலிடம். (தற்காப்பு) சாற்றுதல் - சொல்லுதல்.

**சுவடிச்சொல்** - பெயமிட்டாளப் போதவர்க்கும் பார்த்து.

## வசனம்

இந்தப் பிரகாரம் வந்த செட்டியார் கை, கால் நடுங்க, உடம்பு அதிர் எடுக்க அபையமிட்டு உங்கள் அடைக்கலம் என்றபோது, அபையஸ்தம் கொடுத்து எதனாலே பயந்து வந்தாய் என்று கேட்டபோது, காஞ்சிபுரத்துப் பெரிய

செட்டியார் மகன் இந்தத் திருவாலங்காட்டுக்கு வரவேண்டி வந்தேன். வருகிற வழியிலே ஒரு பெண் பூதம் என்னைக் கொல்ல வந்தது. ஈசுவரன் கடாட்சத்தினாலே தப்பிவந்தேன் என்று செட்டியார் சொல்லக்கேட்டு அங்கேயிருந்த பேர்கள் எல்லாம் அதுக்கோ பயந்தாய்? அது எம்மாத்திரம் இல்லையென்று செட்டியாரைச் சபைநடுவே வைத்துக்கொண்டு இருந்தார்கள். அந்த வேளையிலே நீலி எந்த விதமாய் வருகிறாளோ வென்னில் (15)

அபையஸ்தம் - புகலிடம்; பயம்நீங்க உதவும் கை. கடாட்சம் - அருள்.

(பூங்கோதை உருவில் நீலி)

## ஏசல் சிந்து

78. பாடகம் வெள்ளிக் கொலுசு பாதத்தில் அணிந்துகொண்டு
பூடகமாய்ச் செட்டிப்பெண் போல உருவெடுத்து
நாடக மாய்அங்கே வந்தாளே.
கையில்இட்ட பொற்கடயம் காதிலே செட்டிமை
வையகத்துச் செட்டிப்பெண் போலே வடிவுகொண்டு
மெய்யெனத் தானங்கே வந்தாளே.
பார்வையில்மை இட்டுக்கொண்டு
பட்டுச்சேலை கட்டிக்கொண்டு
சீருடைய செட்டிப்பெண் போலே கள்ளி
குழந்தை வீரிட்டது மங்கைவந் தாளே
பந்துமுலை தான்குலுங்க பாலகனும் தான்கதற
அந்தமாய்க்கொத் தந்தைசெட்டி யார்பெற்ற பெண்போலே
சிந்தையுடன் அங்கேவந் தாளே.
வேண்டிபொன் ஆபரணம் பூண்டுகொண்டு காடுதப்பித்
தாண்டிவந்த செட்டியார் மேலே தன்பிள்ளைதனைத்
தீண்டவிட வென்று வந்தாளே.
முத்துமுத்தாய் வேர்வரும்பச் சிற்றிடை மிகத்துவள
வஸ்திரமுட் டாக்கு மூடியே சபைநடுவே
பத்தினிப்பெண் போலே வந்தாளே.

முந்தியும் செட்டி யார்பெண்சாதி பிந்திவந்தாற் போல்இவளும்
மைந்தனை இடுக்கி கொண்டுதான் அழுதழுக்கைச்
சிந்திக்கொண்டு வந்து நின்றாளே.

தரிசனன் சபையோரிடம் அடைக்கலம் ஆனபோது நீலி அங்கே வருகிறாள், அவள்,

பாடகம். கொலுசு ஆகிய காலணிகளை அணிந்தாள்; கையில் பொன்னாலான கடகம் எனப்படும் வளையல் அணிந்தாள்; காதில் வாணிகக்குல மகளிர் அணியும் அணிகளைப் பொருத்தமாக அணிந்தாள்; கண்ணல் மை தீட்டிப் பட்டுச் சேலை உடுத்தி இவள் செட்டியார் குலப்பெண்ணே என்று பார்த்வர் நம்புமாறு வேடம் பூண்டு, பூங்கோதையின் உருவெடுத்து அந்தச் சபையின் முன்தோன்றினாள். அப்போது அவள் கையில் வைத்திருந்த குழந்தையும் வீரிட்டு அழுதது. தேவையான அளவு பொன்நகைகளை அணிந்திருந்த அவள், தன்னிடம் காட்டில் தப்பி வந்த தரிசனனிடம் குழந்தையை அனுப்ப வேண்டும் என்ற எண்ணத்தோடு வந்தாள். நகில்கள் குலுங்க, சிறிய இடையானது துவள சேலையால் முட்டாக்கு போட்டுக் கொண்டு, வியர்வை தோன்ற மிகவும் ஒழுக்கமான பெண்போலக் காட்சியளித்தாள். இடுப்பில் குழந்தையுடன் அழுத கண்ணும் சிந்திய மூக்கும் உடையவளாகி நின்றாள்.

பாடகம் - காலணிகளில் ஒன்று. பூடகம் - வெளிவேஷம், பொற்கடயம் - பொன்னாலான கடகம், கைவளை. செட்டிமை - வாணிககுல மக்களணியும் அணிகள். பார்வை - கண். சீருடைய - புகழ்பெற்ற. கள்ளி - வஞ்சனை உள்ளமுடையவள், திருட்டுத்தனமுடையவள். வீரிட்டது - திடீரெனக்கதறி அழுதது. அந்தம் - அழகு, உறுதி. பூண்டு - அணிந்து. வேர்வரும்ப - வேர்வை தோன்ற. சிற்றிடை - மெலிந்த இடுப்பு. துவளுதல் - அசைதல். வஸ்திரம் - ஆடை; சீலை. முட்டாக்கு - முக்காடு.

**(பழசை ஊரார் முன்னிலையில் நீலிதரிசனனிடம் பேசுதல்)**

## திரிபுடை

79. நின்ற நீலியச் சபையை வலம்வந்து
நின்று கும்பிட்டுத் தேம்பி யேயிரு
கண்ணில் நீரது உதிரவே
என்னமென்று சொல்லுவாள்
பின்னோ டேயென்னை அழைத்து வந்தவர்
பேரம் பாக்கத்தில் இரவி ருந்தவர்

என்ன நினைப்பில் என்னையங் கேவிட்டு
முன்னே வந்தீர்?
பாங்கி லேபள்ளி தூங்கு நீர்என்று
படுத்துக் கொண்டிருந்த யானும் இருளது
நீங்கவேஎழுந்தேன் உங்களை
எங்கும் காண்கிலேனே
ஊரெல்லாம் அரிப்பு அரித்துப் பார்த்துப்பின்
ஒருத்தி யாய்வடக் காக வருகிற
தாரியாக வந்தேன் - உலாவுவார்
ஆருங் காணேன்
தவித்துத் தவித்துத் தண்ணீரைக் குடித்து - இருள்
தழைக்க கானகத்தில் வந்தேன் - என்னைத்
தவிக்க நீர்விட்டு வந்தது உலகத்தில்
எவர்க்கு மேவும்?
என்ன கொடுமை செய்தேன் எதனைவிட்டுக்
கன்னக் காரரைப்போல் வந்தீரிது தன்மமோ
சபையோர்க்குச் சொல்லுமிந்த அநியாயம்
அடுக்குமோ இந்தநடக்கை பழையனூ ரார்களே!.
கொண்ட கணவனே இந்தப் படிக்கு
நினைத்து வந்தாரய்யா
என்னைக் கெடுக்க வேண்டி
வாணிய ருடன்நானும் தொடர்ந்துபின்
வாரது இவர்க்குச் சம்மதியல்லா எனக்கு
ஆளனோ அல்லவோ என்மேற்
குற்றம் கேளும் என்றாள்.

வந்துநின்ற நீலி அந்தச் சபையை வலமாகச் சுற்றி வந்தாள். பின் நின்று வணங்கினாள். இரு கண்களிலும் நீர்வடியத் தேம்பி அழுதவாறே தரிசனனைப் பார்த்து, தங்கள் கூடவே என்னை அழைத்து வந்தீர்; பேரம்பாக்கத்தில் இரவு என்னோடுதங்கினீர்; ஏன் என்னையங்கே விட்டு விட்டுவந்தீர்?

என் அருகிலேயே தூங்குகிறீர்கள் என்று எண்ணி இருந்த நான் பொழுது விடிந்தபின் எழுந்து பார்த்தேன். தங்களைக் காணவில்லை. ஊரெல்லாம் தேடியும்

காணாமல், வடக்கே வருகிற வழியாகத் தனிமையாகவே வந்தேன். ஆள் நடமாட்டம் எதுவும் இல்லாத வழியில் பயந்து பயந்து தண்ணீரைக் குடித்து இருண்ட காட்டின் வழியில் வந்தேன். கன்னமிட்டுத் திருடும் திருடரைப் போல என்னை விட்டு விட்டு ஓடி வரும்படியாக நான் என்ன கொடுமை செய்தேன்? இந்த அநியாயத்தை இந்தச் சபையோரிடமே சொல்லுங்கள்.

பழையனூர் சபையோர்களே! தாலிகட்டிய கணவனே இவ்வாறு மனைவியை விட்டு விட்டு வருவது தகுமா? இவருடன் நான் வருவது இவருக்கு விருப்பம் இல்லையா? என் கணவனல்லவா? என்மேல் என்ன குற்றம் கேளுங்கள் என்று முறையிட்டாள்.

சபை - சபையிலுள்ளோர். பின்னோடோ - பின்னாலேயே (கூடவே). பாங்கில் - அருகில். பள்ளித்தூங்குறீர் - படுத்துத்தூங்கிக்கொண்டிருக்கிறீர் . அரித்து - தேடி. தாரியாக - தனிமையாக, தனிவழியாக. தவித்து - தாகம் எடுக்க. இருள்தழைக்க - இருள் நிறைந்திருக்க. கானகம் - காடு. தவிக்க - அவதிப்பட. மேவும் - பொருந்தும். கன்னக்காரர் - கன்னமிடுபவர், திருடர். தன்மமோ - நீதியாகுமோ? அடுக்குமா? - செய்யத்தகுமா? (தகாது) சம்மதி அல்ல - விருப்பம் இல்லை. வாரது - வருவது. ஆளன் - தலைவன், கணவன்.

(நீலி என்று அறியாத கிராமத்தார் பேச்சு)

### சம்பை

80. கொல்லவந்த நீலியென்று குறிப்பறிய மாட்டாமல்
எல்லவரும் வணிகனுக்குச் சொல்லுவார் அப்போது
செட்டியா ரேகொண்ட தேவிதனைக் கையுடனே
இட்டுவந்து நடுக்காட்டில் விட்டுவந்த தென்ன?
தன்மனைவி யார்இப்படித் தவிக்கிறதெல் லாம்உனக்கு
நன்மையல்ல காண்என்று நாட்டவர்சொன் னாரே

இவள் தரிசனனைக் கொல்லவந்தவள்; நீலி; மாறுவேடத்தில் இருப்பவள் என்பதையெல்லாம் சிறிதும் அறியாத பழையனூரார் தரிசனனைப் பார்த்து, செட்டியாரே! திருமணம் செய்து கொண்ட மனைவியை உடன் அழைத்து வந்து நடுக்காட்டில் விட்டுவந்தது ஏன்? தன் மனைவி தவிப்பதைப் பார்த்துக் கொண்டிருப்பது உமக்கு நல்லதல்ல என்று கூறினார்கள்.

நாட்டவர் - பழையனூரார்

### வசனம்

இப்படிக் கிராமாதிபதிகள் சொல்லக் கேட்டுச் செட்டியார் என்ன சொல்லுவார். (16)

*கிராமாதிபதிகள் - ஊர்த்தலைவர்கள், கிராமம் + அதிபதிகள், கிராம அதிபதிகள், கிராமாதிபதிகள்.*

*(ஊராரிடம் தரிசனன் நீலியைப் பற்றிக் கூறுதல்)*

### ஏகதாளம்

81. நீங்களும் அவளுடன்ஏன் கூடினீர்கள்
பூங்கிளி போலவந்த பாங்குஅறி யீரோ!
காட்டினில் எனைக்கட்டி வளைத்தாள் - வெகு
தாடகி பூடகி நாடகி கண்டீர்
பாதகி மயக்கம்செய் தோதகி
இவள்மெத்தக் காதகி
எனைக்கொல்லும் பூதகி - கண்டீர்
மாயப் பிசாசிந்த மார்க்கம்கொண் டாளிந்த - நீலி
ஏது அதற்குச் சகாயத்தைச் சேறீர்!
பழிபோடு வாள்அவள் மொழிமெய் யல்ல - தற்பழிமேவிய
பழசையின் ஊரவரே!

உண்மை அறியாமல் நீங்களும் அவளுடன் சேர்ந்து கொண்டீர்கள். இவள் அழகிய கிளி போல இருக்கிறாள் என்று நம்பி விட்டீர்கள். இவள் வந்த தன்மை உங்களுக்குத் தெரியாது. இவள் ஒரு அரக்கி; நடிப்பவள்; வெளிவேஷக்காரி; துரோகி; ஆளை மயக்கும் வஞ்சகி; காதகம் பிடித்தவள்; என்னைக் கொல்ல வந்த பேய்; மாயப் பிசாசு. என்னைக் கொல்லுவதற்காக இந்த மாறுவேடத்தைக் கொண்டு வஞ்சக வழிகளைக் கையாளுகிறாள். இவளுக்கு நீங்கள் எந்த உதவியும் செய்யவேண்டாம். பொய்யே பேசுவாள்; அவள் சொல்வதெல்லாம் மெய்யல்ல. காட்டில் என்னை வளைத்துக் கொண்டு பலதொல்லைகளைக் கொடுத்தவள் இவள். பழயனூர் சான்றோர்களே! தங்கள் மீது பழியைச் சுமத்த வந்திருக்கிறாள். பழியைத் தேடிக் கொள்ளாதீர்கள் என்று கூறினான் தரிசனன்.

பூங்கிளிபோல - அழகிய கிளியைப்போல. வந்தபாங்கு - வந்ததன்மை. தாடகி - அரக்கி. நாடகி - கூத்தாடி. பூடகி - வெளிவேடக்காரி; வீம்புக்காரி. பாதகி - துரோகி. தோதகி

- வஞ்சகி. காதகி - காதகம் பிடித்தவள், கொலைகாரி. பூதகி - அரக்கி, பேய். மார்க்கம் - வழி. சகாயம் - உதவி, நன்மை. சேறீர் - செய்கிறீர் என்பதன் கொச்சைநடை. தற்பழி மேலிய - தங்கள்மீதே பழியைத் தேடிக்கொள்ளும்.

## வசனம்

சிறப்புள்ள செட்டியார் செப்பிய வார்த்தையை நிறுத்தி யச்சபைக்கெல்லாம் நீலி என் சொல்வாள் (17)

செப்பியவார்த்தை - கூறியசொல்.

*(நீலி தான் கொத்தந்தை செட்டியின் மகளே எனல்)*

## திபதை

82. சத்திய மாய்ச்சொல்வன் தப்புரை யல்ல
கொத்தந்தை செட்டிக் குமாரத்தி நான்என்னைத்
திருக்கச்சி நாகந்தை [1]செட்டி குமாரன்
திருக்கலி யாணம் சிறப்புடன் செய்தார்
மிக்கவர் வேதியர் வேந்தர்கள் அறிய
அக்கினி சாட்சியாய் [2]அருந்ததி பார்த்துக்
கனதையாய் உறமுறைக் காஞ்சி புரத்தார்
அனைவரும் அறியவே அரசாணி [3]சுற்றி
வீணையின் ஓசையும் மேளவாத் தியமும்
வானக வித்துவ வாக்கிய ஒலியும்
செயசெயவென் றானை சேனைகள் சூழச்
[4]செயசெயவென் றந்நகர் தெருவெல்லாம் [5]உலவி
வையகம் மெச்சவே வந்தவர் எல்லாம்
மொய்கள் வழங்கவே [6]முகூர்த்தம் ஆக்கி
மாலையிட் டார்இந்த மணவாள ருக்குச்
சீலமாய்க் கொத்தந்தை செட்டியார் தமது
கப்பலிலே அஞ்சு கப்பலில் இவர்க்கு
மெய்ப்புடன் சீதனம் வேணது கொடுத்தார்
[7]வைபோக மாய்இந்த மண்டலம் மதிக்க

மெய்போல் வாழ்ந்து விளங்கி யிருந்தோம்
அஞ்சு பிராயம் அறியாத என்னைக்
கொஞ்சியே மணம்செய்து கொண்டநாள் அதிலே
[8]பக்குவ மானேன்ஒரு பாயிட மானார்
மிக்கசந் சோஷமாய் மெய்ப்புள கிதமாய்
இரவிலும் பகலிலும் என்னைவிட் டகலார்
இரதியும் மதனும்போல் இருக்குநா ளையிலே
தற்பரன் கருணையால் சந்ததி ஒன்று
கெற்பனை யாயினேன் [9]கீர்த்தியாய் நல்வான்
[10]பிள்ளையைப் பெற்றேன் பேராசை யான
கொள்ளையிவ் வளவென்று கூறவொண் ணாது
பிள்ளைப் பிரியமும் பெண்டாட்டி ஆசையும்
புளிச்சிப்போச் சிவர்க்குப் [11]புறம்பாச்சு நெஞ்சு
களிச்சதெல் லாம் இப்போ கசப்பாச்சு தையோ!
மதலையைப் பெற்றநாள் முதல்இது வரைக்கும்
இதுதப்பு அதுதப்பென்று எந்நேரம் கோபம்
சண்டைசெய் வார்என்கைச் சாப்பாடும் வேண்டார்
அண்டவொட் டார்எதிர் ஆகப் படாது
[12]வேசிகள் இச்சைதான் மிகவெடுத் தென்னை
ரோசிவிட் டாரிந்த லோகத்தில் உண்டோ?
பின்னையும் என்னைப் பெரும்பூதம் என்றும்
தன்னைக் கொல்லவந்த தாடகி யென்றும்
சூதுசொன் னார்வெகு சுமுத்திரை போலே
ஏதுசெய்வேன் என்பேச்சு ஏறுதோ சபையில்
பெருமையாய் ஆண்பெண்ணைப் [13]பெற்றெடுத் தோரே!
[14]உரிமையாய்ப் பாலைவார்த்து உண்டிருப் போரே!
பாக்கு [15]வெற்றிலை பொசிப்பவர்க ளேபழைய
னூர்க்கதி பதிகளே ஓரவஞ் சகமாய்
மண்ணோரம் சொல்லிலும் மாநிலம் தனிலே
பெண்ணோரம் சொல்லிப் [16]பிரிக்கவொண் ணாது

பிரியத்தகா வார்த்தையென் பிராணநா யகர்க்குத்
தெரியப் படச்சொல்லிச் சேர்த்துவி டீரே

தரிசனன் கூறியதை மறுத்து நீலி சொல்லத் தொடங்கினாள். சத்தியமாய்ச் சொல்லுகிறேன்; நான் சொல்வதில் எவையும் தவறானவையல்ல. நான் கொத்தந்தை செட்டியாரின் மகள். காஞ்சிபுரத்தைச் சேர்ந்த நாகந்தை செட்டியாரின் மகனாகிய இவர் என்னைத் திருமணம் செய்து கொண்டார். பெரியவர்கள், அந்தணர்கள் அரசர்கள் முன்னிலையில், அக்கினி சாட்சியாய், அருந்ததி பார்த்து, காஞ்சிபுரத்து மக்களும் உறவினரும் கூடியிருந்து திருமணத்தை நடத்தினார்கள். அரசாணைக்கால் சுற்றினோம். வீணை ஒலித்தது; மேளங்கள் முழங்கின; தேவர்கள் வாழ்த்தினார்கள்; செய செய வென்ற ஒலி எங்கும் ஒலித்தது; தெருவலம் வந்தோம்; வந்தவர் எல்லாம் மொய் வழங்கினர். இத்தகு சிறப்புகளோடு திருமணம் நடைபெற்றது. இவரும் எனக்குத் தாலிகட்டி மாலை மாற்றினார். என் கணவரான இவருக்கு என் தந்தை ஐந்து கப்பல்களும் வேண்டிய சீதனப் பொருள்களும் கொடுத்தார். உலகம் புகழ வாழ்ந்து வந்தோம். ஐந்து வயதிலேயே என்னை மணந்து கொஞ்சிக் குலாவி வந்தார். நான் பருவமடைந்தது முதல் என்னைவிட்டுப் பிரியாமல் சுகித்திருந்தார். இரவும் பகலும் பிரியாமல் இரதியும் மன்மதனும் போல வாழ்ந்து வந்தோம். இறைவன் அருளால் நான் கருப்பம் அடைந்தேன். ஆண்மகன் ஒருவனைப் பெற்றெடுத்தேன். பெருமகிழ்ச்சியடைந்தேன். அதன் பிறகு இவருக்கோ என் மீதும் குழந்தையின் மீதும் வெறுப்பு உண்டாகிவிட்டது. மனம் மாறிவிட்டார். மகிழ்ந்ததெல்லாம் போய்க் கசப்பு வந்து சேர்ந்தது. குழந்தை பிறந்தது முதல் எப்போதும் கோபம்; எடுத்ததெல்லாம் தப்பு; எப்போதும் சண்டை என்ற நிலை உருவாயிற்று. நான் இடும் சாப்பாடும் பிடிக்காது; அருகில் நெருங்க விடுவதில்லை; எதிரில் வரக்கூடாது என்ற நிலை உருவாகிவிட்டது. பரத்தையர் மேல் கொண்ட மோகமே என்னை இவ்வாறு அழிக்கச் செய்கிறது. என்னைப் பூதம் என்றும், தன்னைக் கொல்ல வந்த அரக்கி என்றும் வஞ்சகமாய்ப் பேசச் செய்துவிட்டது. நல்லவர் போலப் பேசவும் செய்கிறார். என்பேச்சு இங்கே யாருக்கு ஏற்கும்? ஆண் பெண் ஆகிய குழந்தைகளைப் பெற்ற பெருமைக்கு உரியவர்களே! பால் உணவை உண்டு மகிழ்ந்திருப்பவர்களே! இந்தப் பழையனூரின் தலைவர்களே! ஒருதலைச் சார்பாகப் பேசுதல் நல்லதல்ல. வஞ்சனை உள்ளத்தோடு ஒருவர் பக்கமாய்ப் பேசினாலும் பேசி விடலாம். ஆனால் பெண்ணுக்கு எதிராக மட்டும் பேசிவிடக் கூடாது. அப்படிப் பேசி எங்களைப் பிரித்து விடக்கூடாது. பிரியக் கூடாது என்ற வார்த்தையை என் கணவருக்கு எடுத்துச் சொல்லி எங்களைச் சேர்த்துவையுங்கள் என்று வேண்டினாள்.

வேதியர் - வேதம் ஓதுவோர், அந்தணர். அக்கினி - தீ. அருந்ததி - ஒரு நட்சத்திரம்.

கனதை - கனதி - பெருமை. அரசாணி - அரசாணிக்கால் - திருமணமேடையில் நாட்டப்படும் கொம்பு, அரசாணைக்கால் என்பதன் திரிபு. வானகம் - தேவருலகம். வித்துவவாக்கியம் - வாழ்த்தொலி. வையகம் - நிலவுலகம். மெச்ச - புகழ. மொய்கள் - மகமைப் பணமாக வழங்கும் அன்பளிப்புகள். சீலம் - நல்லொழுக்கம். சீதனம் - மகளுக்குக் கொடுக்கும் அன்பளிப்பு. வேணது - வேண்டியவை யாவும். வைபோகம் - மகிழ்ச்சி மண்டலம் - நிலவுலகம். பிராயம் - வயது. பக்குவமாதல் - பூப்படைதல். புளகிதம் - மகிழ்ச்சி, மயிர் சிலிர்த்தல். இரதி - மதன் - மன்மதனும் அவன் மனைவி இரதியும் போல. தற்பரன் - சிவபெருமான். கெற்பனை - கருப்பந்தரித்தல். புறம்பாச்சு - தனிமை. களிச்சது - களித்தது என்பதன் கொச்சைச்சொல்; களிப்படைந்தது; மகிழ்ச்சியடைந்தது. மதலை - குழந்தை. அண்டவொட்டார் - அருகில் வரவிடமாட்டார்; எதிர் ஆகப்படாது - எதிரில் வரக்கூடாது. வேசி - பரத்தை. இச்சை - ஆசை. ரோசி - உரோசி - தேய்த்து, அழித்து. சூது - வஞ்சகம். சுமுத்திரை - நல்லவர், நிதானமானவர். ஏறுதோ - கொள்ளப்படுமோ! பொசித்தல் - உண்ணுதல். ஓரவஞ்சகம் - ஒருவர் பக்கமாகப் பேசுதல். மண்ணோரம் - ஒருவர் பக்கமாகப் பேசுதல். பெண்ணோரம் - பெண்ணுக்கு எதிராகப் பேசுதல். ஒண்ணாது - கூடாது.

**பாடவேறுபாடு** - 1. செட்டியார் மைந்தன். 5. உலாவி. 6. முகூர்த்தமுண்டாச்சு. 8. பருவமானேன். 9. சீர்த்தியாய். 10. பிள்ளைபெற்றெடுக்கவே பெண்டாட்டியாசை, புளிச்சுப்போச்சிவர்க்கு (இடை வரிகள் இல்லை). 11. பிடம்பாச்சுநெஞ்சு. 12. வேசியளிச்சை. 16. பிரிக்கொணாதெந்தன் 17. பிரியத்தின் வார்த்தை.

**சுவடிச்சொல்** - 2. அருந்துதி. 3. சுத்தி. 4. செயசெயென்றன்னகர். 7. வைய்யோக. 13. பெத்தெடுத்தோரே. 14. உருமையாய்ப்பால் வார்த்து. 15. வெத்திலை

## வசனம்

சேர்த்துவிடீர் என்று சேயிழைசொன்ன வார்த்தையை நீக்கியே வணிகன் என் சொல்வான் (18)

### (தரிசனன் இவள் கள்ளியே எனல்)

### சம்பை

83. [1]பொருந்தஇவள் என்மனைவி போலவந்து உங்களுக்கும்
பொருந்தச்சொன்ன பேச்செல்லாம் தெரிந்தவர்கள் அலவே
காட்டில்இவள் வீடுசுடு காட்டுப்பிணம் ஆகாரம்
நாட்டிலுள்ள பேய்க்கெல்லாம் பாட்டியிவள் ஆமே
முகத்தழகும் கண்ணழகும் முலையழகும் பல்லழகும்
மிகுந்தநல்ல பணிபூண்டு மினுக்குவள் [2]மெய்யல்ல

கள்ளியிவள் எனைத்தொடர்ந்து கொல்லத்துணிந்திருக்கிறாள்
கள்ளியே இவள்கையில் பிள்ளையும் என்றானே
முந்திஎன்னைக் கொன்று - உங்களை
மோசம் போக்கவே நினைந்து
[3]வந்திருக்கி றாள்இவள் - என்
மனைவி யென்றிராதீர்
கும்ப முலைப்பால் சிதறக் - குடி
மாது போல வந்தாள்
நம்ப வேண்டாம் - [4]தொண்டை
நாடுபடைத் தோரே

சேர்த்து வையுங்கள் என்ற நீலி வேண்டுகோளை மறுத்துக் கூறுகிறான் தரிசனன்.

தொண்டை நாட்டில் வாழும் சான்றோர்களே! என் மனைவியைப் போல வந்து உங்களிடம் கூறியவை எல்லாம் உங்களுக்குத் தெரியாது. அவை உண்மையும் அல்ல. இவள் இருப்பிடம் காடு; சுடுகாட்டுப் பிணமே இவளுக்கு உணவு; நாட்டிலுள்ள பேய்க்கெல்லாம் இவள் தலைவி. இவளுடைய அழகான முகம், அழகிய கண்கள், நகில்கள், அழகான பற்கள் ஆகியவை உண்மையானவையல்ல. பலவகை நகைகளை அணிந்து விளங்குவது எல்லாம் உண்மையானவையல்ல. இவள் என் மனைவியைப் போல வடிவம் எடுத்த திருடி. இவள்கையில் இருப்பது குழந்தை அல்ல; கள்ளிக் கொடியினால் உருவாக்கப்பட்ட உருவம். என்னைக் கொல்லுவதற்காக இந்த உருவம் கொண்டிருக்கிறாள். முதலில் என்னைக் கொல்ல வேண்டும்; பிறகு உங்கள் மீது பழியைச் சுமத்த வேண்டும் என்றே இங்கு வந்திருக்கிறாள். என் மனைவி என்று நினைக்காதீர்கள். தனங்களிலிருந்து பால் துளிக்குமாறு குடும்பப் பெண்ணைப் போல வந்திருக்கிற இவளை நம்ப வேண்டாம் என்று கூறினான்.

கள்ளி - திருடி, தீய எண்ணமுடையவள். மோசம் போக்க - பழி உண்டாக்க. கும்பம் - குடம், கலசம். குடிமாது - குடும்பப்பெண். தொண்டைநாடு - காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்ட நாடு.

**பாடவேறுபாடு** - 1. பொருந்தவேயென். 2. மெய்யெல்லாம். 3. வந்திருக்கிறாள் எந்தன்.

**சுவடிச்சொல்** - 4. தொண்டனாடு.

*(வேசியர் மருந்தால் கொண்டவனே கூற்றுவனானால் எனல்)*

## அர்த்த சந்திரிகை

84. இப்படிச் சொல்லவவள் ஏங்கிநின்று அழுவாள்
மெய்ப்படுமோ இவ்வி சேஷமது என்பாள்
கொண்டவனே யெந்தன் கூற்றுவன் என்பாள்
கண்டீர்க ளோஇவர் [1]காரடம் என்பாள்
ஆசைமக னுங்கள்ளி யாச்சுதே என்பாள்
வேசியர் மருந்தின்று மேலிட்டது என்பாள்
நீலியென்ற பெயர்என்றும் நிலைச்சுதே என்பாள்
நாலுபே ரும்என்னை நகைக்கலாச் சென்பாள்
புவியிற்பெண் பிறந்தது போதுமென்று அலைவாள்
எவருக்கும் பழிப்பதற்கு இடமாச்சு என்பாள்
மேனாள் எழுதிய விதியோ வென்பாள்
நானோ பாவிஇந் நாட்டினில் என்பாள்
மண்மேல் இனிமழை வருமோ வென்பாள்
எண்ணா தவர்கட்கும் ஏச்சாச்சு என்பாள்
நீதிசொல் வார்இல்லை நிலத்தில் என்பாள்
பேதையர்க்கு யார்வந்து பேசுவது என்பாள்
ஒட்டிவிட் டால்பழி ஊருக்கே என்பாள்
கூட்டிவிட் டாலினிக் குறையில்லை என்பாள்

*தரிசனன் சொன்ன வார்த்தைகளைக் கேட்ட நீலி அழுது கொண்டே, இவை எல்லாம் உண்மையாகுமா? அல்லவே! கொண்ட கணவனே எனக்கு எமன் ஆனதைப் பார்த்தீர்களா? இவர் கூறுவது எல்லாம் வெறும் நடிப்பே பெற்ற மகனைக் கள்ளிமரம் என்கிறாரே! பரத்தையர் வைத்த மருந்து மிஞ்சிவிட்டது போலும்! எனக்கு நீலி என்ற பெயரை நிலையானதாக ஆக்கி விட்டாரே! பார்ப்போர் எல்லோரும் கேலி செய்து சிரிக்குமாறு என் நிலமையாகிவிட்டதே! நான் பெண்ணாய்ப் பிறந்து பெற்ற சுகம் போதும்! எல்லோரும் பழிக்கும்படியாச்சுது! இது என் தலைவிதி! இந்நாட்டில் நான் பெரும்பாவி! இனியும் பூமியில் மழைபொழியுமா? நினைத்துப்பார்க்காதவர்களுக்கும் என் நிலமை இழிவாகிவிட்டது! இந்தப் பூமியில் எனக்கு நீதி சொல்லுவோர் யாருமில்லையே! பெண்ணாகிய எனக்காக யார் பேசப் போகிறார்கள்? கணவனைப் பிரிந்து*

ஓடிவிடலாம் என்றாலோ அது ஊருக்குப் பழியாகி விடுமே! கூடிவிட்டால் தானேகுறை நீங்கும்! என்றெல்லாம் ஊரார் நம்புமாறு பலவாறு நொந்து, அங்கலாய்த்துப் புலம்பினாள்.

மெய்ப்படுதல் - உண்மையாதல். கொண்டவன் - கணவன். கூற்றுவன் - எமன். காரடம் - வெளிவேஷம். நகைக்கலாச்சு - சிரிக்கும் நிலை உண்டாயிற்று. புவி - பூமி. ஏச்சு - இகழ்ச்சி.

***சுவடிச்சொல்:*** 1. காறடம்.

## வசனம்

குறையில்லை என்றவள் கூறியே பின்னும் நிறைசபை யோர்க்கெல்லாம் நீலிஎன் சொல்வாள் (19)

***(தங்களை ஒன்று சேர்க்குமாறு நீலி வேண்டுதல்)***

## ஏகதாளம்

85. அரிசியும் புருஷனும் பகையில்லை என்பர் - என்
புருஷன்என் மேல்பழி யுரைசெய்யப் போமோ
ஏவுங்கண வன்சொல்லை ஈடழித் தால்வரும்
பாவமென் பார்கள்அப் பாவமும் அறியேன்
பொந்திரெண்டு உயிர்ஒன்றும் போலிருந்தவர் என்மேல்
நிந்தையைப் போட்டதி விந்தைகள் சொன்னார்
நானும் குழந்தையும் பனாதியது ஆகிடில்
ஈனம்மேல் எவர்க்கு ஞானமன் னவரே
பேசு வார்வெகு பேச்சுகண் டீரெனக்
கோசரம் எனக்கென்னை உறவுபண் என்றாள்

மேலும் சபையோரைப் பார்த்து, எப்போதும் அரிசியும் புருஷனும் பகையாக இருப்பதில்லை என்பது உலக வழக்கு. ஆனால் என் கணவனே என்மேல் பழியைச் சுமத்துகிறார். கணவன் கட்டளையை மீறுவது பாவம் என்பார்கள். அந்தப் பாவச்செயலை நான் என்றும் செய்து அறியேன். உடல் தான் இரண்டு; ஆனால் உயிர் ஒன்றாகவே வாழ்ந்து வந்தோம். இப்போது என்மேல் பெரும் பழியைச் சுமத்தி ஆச்சரியப்படத்தக்க செய்திகளைக்

கூறிவிட்டார். நானும் என் குழந்தையும் ஆதரவு அற்றவர்களாக ஆகிவிட்டால் அவமானம் யாருக்கு? அவருடைய பலவகைப் பேச்சையும் கேட்ட சான்றோர்களே! எனக்காக என்னை அவருடன் சேர்த்துவையுங்கள் என்றாள்.

ஈடழித்தல் - பெருமையைக் குறைத்தல் பொந்தி - உடல். நிந்தை - பழி. விந்தை - புதுமை, ஆச்சரியம். பனாதி - ஆதரவற்றநிலை. ஈனம் - இழிவு.

**வசனம்**

உறவென்று நீலி உரைத்ததைக் கேட்டு மறுகிய மனதுடன் வணிகன் என் சொல்வார்(20)

**(நீலியை ஊரைவிட்டு ஓட்டுமாறு தரிசனன் வேண்டுதல்)**

**தரு**

86. கண்கட்டு வித்தைகள் பார்க்கிலையோ - இந்தக்
காரட நீலியையா - இவள்
என்கிட்டே வந்திப்போ சொல்லவந்தாள் - பேச்சை
ஏன்கேட்கி றீர்களையா!
நான்வாற வழியினில் வலுவிந்தை காட்டின
மாபூதம் காணுமையா - அய்யோ
கூறவச மல்லவே பாதகி பெருங்கொலைக்
காரநீலி யையா - இவள்
சொல்வதெல் லாம்மெத்த சூதுகண்டீர் சொன்ன
சூதைக் கேளாதேயையா - என்னைத்
தொல்லையிவ் வூர்வழிப் போகவேண் டாமென்று
சொல்லி யிருந்தாரையா - அதை
அல்லவென்று தள்ளி வந்த எனக்கிந்த
ஆபத்தை யாச்சுதையா - மெத்த
நல்லவர் நீங்கள்என் வார்த்தையை நம்பி
நடுக்கத்தைத் தீருமையா
சொக்கடிப் பேய்க்கையில் சிக்கிக்கொண் டேவெகு
தொந்தரைப் பட்டேனையா - இத்தை

மெய்யாய்க்கொண் டிவளுடன் கூட்டாமல் நீங்கள்என்
　　மேல்பட்சம் வையுமையா
கங்குல் வனத்தில் மகாபூத மாயெந்தன் கண்ணெதிர்
வந்தாளையா - இப்போ
மங்கையர் போல்சபை மெச்சவே நீதி
　　மார்க்கங்கள்சொன்னாளையா
காரிப்ப சாசுக்கு நீங்களுள் ளாயென்னைக்
　　காட்டிக்கொ டாதேயையா - இந்த
ஊரைக் கடக்கப் புறம்பா யிவள்தன்னை
　　ஓட்டி விடீர்கள் ஐயா.

தரிசனன் சபையோரைப் பார்த்து ஐயா! இவள் சொல்வது எல்லாம் கண்கட்டு வித்தைகள். இவள் ஏமாற்று வித்தை கற்றவள். இவள் சொல்லுவதைக் கேட்காதீர்கள். இவள் நான் வரும் வழியில் பலத்த புதுமைகள் பலவற்றைச் செய்த நீலியாகிய இவள் சொல்வதெல்லாம் வஞ்சனையானவை. இந்த ஊர்வழி செல்லவேண்டாமென்று கூறியிருந்தார்கள். அதைமீறி வந்தேன். இந்தத் தொல்லைகள் வந்து சேர்ந்தன. சான்றோர்களாகிய நீங்களே என் சொல்லை நம்பி என் பயத்தை நீக்க வேண்டும். இந்தச் சொக்கடிப் பேயாகிய மாயக்காரியிடம் சிக்கிக் கொண்ட என்னை இவளோடு சேர்க்காமல் காப்பாற்றுங்கள். இருண்ட காட்டில் பெரும்பூதமாக வந்து என்னை விரட்டினாள். இங்கே பெண் உருவில் வந்து சபையில் நீதி சொல்லி நடிக்கிறாள். கரிய பிசாசாகிய இவளுக்காக என்னைக் காட்டிக் கொடுக்க வேண்டாம். இவளை ஊருக்கு வெளியே ஓட்டி விடுங்கள் என்று வேண்டினான்.

வலுவிந்தை - பலத்த புதுமை. சொக்கடிப்பேய் - சூதுடையபேய். பட்சம் - இரக்கம். கங்குல்வனம் - இருள் நிறைந்தகாடு. காரிப்பிசாசு - கரிய நிறமுடைய பிசாசு. உள்ளாகி - உடம்பட்டு. புறம்பாய் - வெளியே.

## வசனம்

ஓட்டிவிடீர் என்று உதகமான சொல்லைக் கேட்டந்த நீலியும் கேவலம் நொந்து, தான்அழப் பிள்ளையும் தான்அழக் கையால் ஏன் அழுதாய் என்று எடுத்து என்ன சொல்வாள். (21)

உதகமான சொல் - மழை போன்ற உரை.

(நீலி தன் விதியை நொந்து கொள்ளுதல்)

## சிந்து

87. சும்மா இருமகனே நீ- பிறந்ததுக்கு
இம்மாத் திரம் அமையும்
அம்மானும் பாட்டனு மாச்சே -
சபையார் எல்லாம்
உம்மோடு ஒருத்தரும் ஒவ்வார் - இதுக்கு
எவ்வாறு இனிச்செய்வாய். (சும்மா)

பண்ணாத பாவத்தைப் பண்ணிப் - புவிதனில்
பெண்ணாய்ப் பிறந்து பெருக்கத் தவிக்கிறேன்
எண்ணாத பேர்களுக்கும் ஏச்சாச்சுதே - இனி
கண்ணாலே நீர்உதிர்க் காதே
எரிக்காதே வதைக்காதே. (சும்மா)

தொல்லையி லேயெவர் சோத்தைப் - பிடுங்கிக்
கல்லைச் செய்தேனோ - கடும்
பகையாய்க் கொண்ட
வல்லவ னேயென்னை மாபூதம் என்றவர்
சொல்லவும் வந்ததென்ன - சூது
பிரட்டேது தெரியாது. (சும்மா)

கொத்தந்தை நாகந்தை குப்பந்தை கண்ணந்தை
சித்தந்தை வாழ்வந்தை செய்யந்தை -
இத்தனை பேர்களும் எடுப்பார்களே - உன்னைப்
பெத்தவர் கள்ளிக்கொம் பென்றார் - வேறு
பண்ணார் - தனி - நின்னார் - (சும்மா)

அழுகிற குழந்தையைப் பார்த்து. மகனே! அழாதே ! நீ பிறந்ததன் பயன் இதுதான். இந்தச் சபையிலே உன்னுடைய பாட்டன்மார்களும் தாய்மாமன்மார்களும்தான் இருக்கிறார்கள். இருந்தாலும் உனக்காக யாரும் பரிதாபப்படமாட்டார்கள். இனி என்ன செய்வது? முற்பிறவியில்

பெரும்பாவத்தைச் செய்திருக்கிறேன். அதனால்தான் இப்பிறவியில் பெண்ணாய்ப் பிறந்து பெருந்துன்பப்படுகிறேன். பலரும் இழிவாகப் பேசும்படியாயிற்று. நீ அழாதே் அழுது என்னை வாட்டாதே!

முன்பிறவியில் யார் சோற்றில் கல்லைப் போட்டேனோ அறியேன்! கொண்டவரே இன்று பெரும் பகைவராகிப் பெரும்பூதம் என்று கூறிவிட்டார். நடந்தவற்றில் பொய்யும் புரட்டும் என்ன இருக்கிறது என்பதே தெரியவில்லை.

உன்னைப் பெற்றவர் உன்னைக் கள்ளிக் கொம்பு என்று கூறி விட்டார். உன்னைப் பிரித்துப் பேசிவிட்டு ஒதுங்கிவிட்டார். என்றாலும் உனக்குக் கொத்தந்தை, நாகந்தை, குப்பத்தை, கண்ணந்தை, சித்தந்தை, வாழ்வந்தை, செய்யந்தை, பொன்னந்தை ஆகிய பாட்டன்மார்களும் உறவினர்களும் இருக்கிறார்கள். நீ அழாதே என்று குழந்தையைத் தேற்றினாள்.

அம்மான் - தாய்மாமன். ஏச்சு - கேலி, இழிவு. தொல்லை - பழமை; முற்பிறவியில். கொண்டவல்லவன் - மணம் செய்துகொண்ட கணவன். சூது, பிரட்டு - வஞ்சனையும் பொய்யும்.

### வசனம்

விதியாளரை இந்தவிதமாய் நொந்து மதலைதன் அழுகைமாற என்சொல்வாள் (22)

விதியாளர் - தலைவிதிக்கு உடையதன்னை. மதலை - குழந்தை.

**(நீலி தன் குழந்தையைத் தேற்றுதல்)**

### தாலாட்டு

88. மாணிக்க முத்தே வயிரவயி டூரியமே
கேணிக்கே ஊறேநீர்க் கெம்புநவ ரத்தினமே

[1]பெற்றாரைப் பெற்றவனே பிள்ளைப் பெருமாளே
[2]வற்றாத பாற்கடலே - என் - வாழ்வே மரகதமே

பேசுங் கிளியே பெரிதாய வனற்றரையே
ஈசன் அருளே - இங்கு - எல்லார்க்கும் அற்புதமே

பசுமைக் குடியோனே பால்பெருத்த வாயோனே
திசைபெற்ற நாகந்தை செட்டியார் பேரமையை

கொ.த்தந்தை பேரா குபேரவிட வங்கிஷமே - என்
சித்தக் கவலையெல்லாம் தீர்க்கும் பெருமானே

நீயும் பிறந்துவிட்டாய் நின்னையும் நான் பெற்றுவிட்டேன்
பேயுடனே யுங்கள்ஐயர் பெருமையாய்ச் சேர்த்துவிட்டார்

அழுதாலும் உங்களப்பார் அண்டி யெடுக்காரே
பழுதாய் அழவேண்டாம் பாலகனே கண்வளரீர்.

**வேறு**

பாட்டி யடித்தாளோ பால்வார்க்குங் கையாலே
தோப்பன் அடித்தாரோ சோறூட்டும் கையாலே

அத்தை அடித்தாளோ [3]ஐவணப்பூந் தண்டாலே
மாமன் அடித்தானோ மல்லிகைப்பூச் செண்டாலே

ஆரடித்து நீரழுதீர் அரியகண்கள் நீர்சொரிய
பாலகனே என்றோயப் படுத்தினாள் அப்போது.

மாணிக்கமே! முத்தே! வயிரமே! வயிடூரியமே! கெம்பே! மரகதமே! நவரத்தினமே! கிணற்றில் ஊறிய தூயநீரே! பெற்றாரைப் பெற்றவனே!குழந்தையாகிய இறைவனே! என்றும் வற்றாத பாற்கடலே! என் வாழ்க்கையின் இன்பமே! பேசுங்கிளியே! பெரிதாய் அழவேண்டாம். இறைவ னருளால் வந்தவனே! எல்லார்க்கும் அதிசயப் பொருளாக விளங்குபவனே! செல்வந்தக்குடியில் வந்தவனே! பால் மணம் மாறாத வாயை உடையவனே! நாகந்தையின் பேரனே! கொத்தந்தையின் பேரனே! குபேரன் வமிசத்தில் பிறந்தவனே! என் மனக்கவலை யெல்லாம் தீர்க்கும் செல்வமே! நீயும் பிறந்துவிட்டாய் நானும் பெற்றெடுத்துவிட்டேன்! உன் தந்தையோ நம்மைப் பேய்க் கூட்டத்தில் சேர்த்துவிட்டார். நீயழுதாலும் உன்னை எடுக்கமாட்டார். மகனே நீ அழாதே! கண் உறங்கு! உன்னைப் பாட்டி அடித்தாளா? உனக்குப் பால் ஊட்டும் கையாலே! உன் தகப்பன் அடித்தாரா? உனக்குச் சோறு ஊட்டும் கையாலே! அத்தை மருதோன்றித் தண்டாலே அடித்தாரோ! மாமன் மல்லிகைப் பூச்செண்டாலே அடித்தாரோ! உன் அழகிய கண்களில் நீர் வடிகிறதே! உன்னை

யார் அடித்தார்கள் என்று பாடிப் பிள்ளையை ஓயப் படுத்தினாள்.

மாணிக்கம், முத்து, வயிரம், வயிடூரியம், கெம்பு, மரகதம் என்பன நவரத்தினங்களுள் ஆறுவகை மணிகள். கேணி - கிணறு. அனற்றல் - புலம்புதல், அழுதல். ஈசன் அருள் - இறைவனால் கொடுத்தருளப் பெற்றது. அற்புதம் - அதிசயப் பொருள். பசுமைக்குடி - செல்வம் நிறைந்த குடி. பேரமை - பேரச்செல்வம். பேரா - பேரனே!; பெயரனே!. குபேரன் - அளகாபுரிப் பட்டணத்தின் தலைவன்; செல்வத்தின் தேவன். வங்கிஷம் - வமிசம். சித்தம் - மனம். அண்டி - நெருங்கி வந்து. பழுதாய் - வீணாய். தோப்பன் - தகப்பன். ஐவணம் - மருதோன்றி. ஓயப்படுத்தினாள் - அழுகையை நிறுத்தச் செய்தாள்.

**சுவடிச்சொல்** - 1. பெத்தாரைப்பெத்தவனே 2.வத்தாத 3.ஐவனப்பூந்.

**(நீலி தரிசனனைப் பார்த்துக் கூறுதல்)**

**திரிபுடை**

89. பிள்ளை அழுங்குரல் ஆத்தியே - கொண்ட
புருஷன் முகத்தினை நோக்கியே - என்னைக்
கொள்ளத் துடைதட்டிக்கொண்டு - கொண்டவர்
கள்ளத் தனமாய் விட்டுப் போறது ஞாயமோ - எந்தன்

மீதிலே குற்றம் குறைகள் இதுவென - விட்டு
வெளிப்படச் சொல்லுமேன் - எங்கள் செட்டியாரே
வீணில் எனைவிட்டுப் போறேன் எனில்உம்மை -
விடுவேனோ
இந்தச் சபையில் ஒருத்தரும்

ஆணோடே பெண்ணோடே பிறந்தவர் காணவிலையே
வாயை மூடிக்கொண்டு இருக்கி றார்கள்என்
மான புருஷனும் அதுவல ஓதுவல்
பேயன்றே யெனைப் பேரிட்டார் - அநியாய மல்லவோ.

பூமிதான் விளை வாகுமோ - மழை
பொழியுமோ வகமலியுமோ - இந்தப்
பூமிபாலரும் வளர வஞ்சனையாம் ஈதென்றாள்.

அழுங்குழந்தையை ஓயச்செய்தாள். கொண்ட கணவன் முகத்தைப் பார்த்தாள். பேசத் தொடங்கினாள். செட்டியாரே! அன்று பெரும் முயற்சி எடுத்து என்னைத் திருமணம் செய்துகொண்டீர்! இன்று திருட்டுத்தனமாய் விட்டுவிட்டு ஓடுகிறீர்! என்மேலுள்ள தவறுகளும் குறைகளும் என்ன? வெளிப்படையாகப் பலரும் அறியச் சொல்லுங்கள். தவறு எதுவும் இல்லாமல் என்னைவிட்டுப் போகிறேன் என்றால் சும்மா விட்டுவிடுவேனா?

இந்தச் சபையில்தான் ஆணோடே பெண்ணோடே பிறந்தவர்களாக யாரையும் காணமுடியவில்லை. எல்லோரும் வாயடைத்துக் கிடக்கிறார்கள். மானமுள்ள என் கணவனோ உண்மையல்லாத சொற்களைச் சொல்லிவிட்டார். பேய் என்று எனக்குப் பெயர் சூட்டிவிட்டார். இது கொடுமையல்லவா? இந்த நாட்டில் இனி நிலம் நன்றாக விளையுமா? மழை பொழியுமா? விலைவாசிகள் குறையுமா? நாட்டு மக்கள் நன்றாக வாழ முடியாதபடி செய்யப்பட்ட சூதுவாதுகள் இங்கே நடைபெற்றுவிட்டனவே என்று அரற்றினாள்.

ஆத்தி - ஆற்றி; தணித்து. துடை தட்டிக்கொண்டு - முயற்சி எடுத்து (துடை- தொடை). கொண்டவர் - என்னை மனைவியாகக் கொண்டவர். சொல்லுமேன் - சொல்லுங்களேன். அதுவல ஓதுவல் - உண்மையல்லாததைச் சொல்லுவார். வகமலியுமோ-விலை மலிவாகுமா? என்னும் பொருளாதல் வேண்டும்.

*(நீலியை விரட்டுமாறு தரிசனன் அவையோரை வேண்டுதல்)*

**அடதாளம்**

90. என்னவே செட்டியாரும் எழுந்து - இவள்
என்ன சொல்லினும் நீலி யவளுடன்
என்ன யேச்சிங்கு வளர்த்துநீர் - என்ன
வன்னிலேதான் ராவணன் தங்கை சூர்ப்பநகை

நேரான நீலியென் பெண்டுபோல் - இந்த
தேவ சபையில்வா தாடுறாள் - கொடும்
பாவி காணும்.

நம்பொணாது இவள்தனை இவ்வூர்வழி
நாடவொட் டாமல்செய்வீர் உங்களை - என்றும்
நம்பினேன் என்னைக் காரும்
எனச்செட்டி கும்பிட்டானே

எந்த விதத்திலும் உங்கள் அடைக்கலம்
எனைக் கைசோர விடாமலே - உங்கள்
மைந்தன் எனவே காரும்
எனச்செட்டி வணங்கினானே.

அவள் பேசியதை எல்லாம் கேட்ட தரிசனன் எழுந்தான். என்ன பேசினாலும் இவள் நீலி நீலியேதான். இவளுடன் பேச்சை வளர்த்த வேண்டாம். இராவணன் தங்கை சூர்ப்பநகையைப் போன்ற கொடிய நீலியே என் மனைவியைப் போல இச்சபையில் வந்து வாதாடுகிறாள். இவளை நம்பாதீர்கள். இந்த ஊர்ப்பக்கம் வராதபடி ஓட்டிவிடுங்கள். உங்களை நம்பிவந்தேன்; அடைக்கலம் புகுந்தேன். என்னைச் சோர்வடைய விட்டுவிடாதீர்கள். உங்கள் மகனாக எண்ணி என்னைக் காப்பாற்றுங்கள் என்றெல்லாம் வேண்டி வணங்கினான்.

நாடஒட்டாமல் - நெருங்கமுடியாதபடி. கைசோரவிடாமல் - (என்னைத்) தளரவிடாமல். காரும் - காப்பாற்றுங்கள்.

## வசனம்

வணங்கவே நீலியும் மைந்தனை எடுத்து இணங்கியே சபையிலே ஏதெனச் செய்தாள் (23)

**(நீலி குழந்தையைத் தந்தைமடியில் உடகாரச் செய்தல்)**

## ஏகதாளம்

91. சித்தடி யேயென்று சிறுவனை யெடுத்துன்னைப்
பெத்தவ னிடத்துக்குத் தத்தடியிடு என்றாள்

தாயே உனைப்பெற்ற தகப்பன் இடத்துக்குப்
போயே யெனச் சொல்லிப் பூமியில் விடுத்தாள்

பெண்டல்லோ வேம்புஇந்தப் பிள்ளைப் பகையலவே
கண்டீர்களோ தொண்டை மண்டலத்தாரே

பாரும் அவர்அளித்த பாலன் என்றாள் அது
சீருள மடிமிசை ஏறும்இ தென்றே.

விடவே குழந்தை யப்படியே தெரிசனன்
மடிமேல் ஏறிக்கொண்டு அடவாய் குலவும்

குலவிய குழந்தையையும் கொடிய நீலியையும்
உலகவர் பார்த்திவள் அலகையது அல்ல

நிசப்பெண்ணு தானென்று நினைவில்உற் றிவனுக்குக்
கசப்பென்ன வலிப்பென்ன பசப்பென்ன என்றேதான்.

நீலி தன் கையிலிருந்த குழந்தையை எடுத்து, சிறிய அழகிய உன்னுடைய கால்களைத் தத்தித் தத்தி எடுத்துவைத்து உன்னைப் பெற்றவரிடத்திற்குப் போ என்று விட்டாள். செல்வமே! உன் தந்தையிடத்திற்குப் போ என்று தரையில் விட்டாள். தொண்டை மண்டலத்துச் சான்றோர்களே! மனைவியல்லவோ கசப்பு! பகைமை! இந்தக் குழந்தை பகை இல்லையே! அவர் பெற்ற இந்தக் குழந்தையைப் பாருங்கள்! அவருடைய அழகான மடியில் போய் அமர்ந்து கொள்ளும் பாருங்கள் என்று கூறிவிட்டாள். அப்படியே குழந்தை தரிசனன் மடியில் ஏறி அழகாய் அமர்ந்து விளையாடத் தொடங்கியது. குழந்தையின் செயலையும் நீலியையும் பார்த்த அவையோரும் பிறமக்களும் இவள் பேயல்ல; பெண்ணேதான் என்று முடிவுசெய்தார்கள். இவளை ஏற்க இவனுக்கு என்னகசப்பு? என்ன வலிப்பு? ஏன் நடிக்கிறான் என்றெல்லாம் எண்ணினார்கள்.

சித்தடி - சிற்றடி-சிறுகால். பெத்தவன் - பெற்றவன் - தந்தை. தத்தடியிடு - தத்தி அடியிட்டுச் செல். வேம்பு - வேப்பங்காய்; கசப்பு. பகையல - விரோதமல்ல. சீருளமடி - சிறப்பான ஆடை; மடி. அடவாய் - அழகாய்; வலிமையாய் எனினும். அலகை - பிசாசு.

**(மனைவியைப் பூதம் என்பது வஞ்சனை எனல்)**

**சம்பை**

92. செட்டியாரே கொண்ட தேவி தனைநடுக்
காட்டில் விட்டுவருவார் எவர்கள் - துட்ட
சினைச்சாதி

நாலு சாதியிலும் அவன் நடத்தை வரப்போ காது
கோல முளதன வசிய குலசிகா மணியே

பஞ்சவர்ணக் கிளிபோல பாரியென்ன பிள்ளையென்ன
அஞ்சிவள் பூதம்என்ப வஞ்சனை யும்மி டத்தே

தன்இனத்தில் மணம்செய்த
தாரம்தனைப் பூதம் என்பது
என்ன பயித்தியம் இது
நன்மையல்ல கண்டீர்

தடிக்கு மிஞ்சின முறடர்
தரணியில் உண்டோ உமக்குப்
பிடித்த பயித்தியம் என்ன
குடித்தனத்துக் கழகோ?

செட்டியாரே! வைசியர்குலத் தலைவரே! மணந்து கொண்ட மனைவியை நடுக்காட்டில் விட்டுவிட்டு வருபவர்கள் கீழ்மக்களேயாவார்கள். உயர்ந்த நாலு சாதியிலும் அந்தச் செயல் தகாத செயலாகும். மனைவியும் குழந்தையும் பஞ்ச வண்ணக்கிளிபோல இருக்கிறார்கள். இவளைப் பூதம் என்று சொல்லும் வஞ்சக எண்ணம் எப்படி ஏற்பட்டது? இனம் பார்த்து, குலம் பார்த்து மணந்து கொண்ட மனைவியைப்பூதம் என்று கூறுவது பயித்தியக்காரத்தனமாகும். இது நல்லது அல்ல. இந்தப்பூமியில் 'தடிக்கு மிஞ்சின முறடர் இல்லை' என்பார்கள். உன் பயித்தியக்காரத்தனம் குடும்பத்துக்குத் தகாது என்று கூறி மேலும் ஒரு கதை சொல்லி விளக்குகிறார்கள்.

கொண்டதேவி-மனைவி. துட்டசினைச்சாதி - கீழ்மக்கட்கூட்டம். சினம்-சனம் (செனம்) என்பதன் திரிபுச்சொல்; மக்கள். நாலுசாதி - அந்தணர், அரசர், வைசியர், வேளாளர். தனவசியகுலம்-தனவைசியர் குலம்; பெரும்வாணிகர். சிகாமணி - முதல்வன்; தலைவன். இனம்- சாதி. தாரம்- மனைவி. தரணி-பூமி.

## வசனம்

பழையனூர் கிராமாதிபதிகள் இப்படிச் சொல்லிப் பழைமையாகிய ஒரு கதையும் சொல்வார்.

(24)

(தரிசனனுக்கு அறிவுரையாக ஊரார் சொல்லிய கதை)

## திபதை

93. பிரமராட்ச தரிலே பேர்உளான் ஒருவன்
தர்மவான் அவன்பெயர் தயித்திய சூரன்
அவன்பெண் சுகபயோதரி - அவள் கணவன்
திவகன்அப் பெண்ணைச் சேராதிருந்து
மாண்டுவிட் டான்அந்த மங்கைதந்தை யாரை
வேண்டியே எனக்குக்கால் வேணுமென்று அழுதாள்.

பட்சமாய் மகளுக்கு உபாயமென் சொல்வான்
பொட்சையி லேயொரு புரோகிதன் தவசு
இத்திசை தன்னிலே இருக்கிறார் இவர்பால்
நத்தியே இதனில் அனுகூல மாவார்
சந்ததி உண்டென்று தகப்பனார் சொல்ல
வந்தந்த மாதுவும் மாமறை யோனைப்
பார்த்தனள் அவருமே பார்த்ததி னாலே
தோத்திரம் பண்ணியே தோகையும் இருந்தாள்
திங்களும் பத்து சென்றுமே மறையோன்
கண்களை விழித்திந்தக் கன்னியைப் பாரான்
அப்படி யானகா லத்திலோர் குளத்தில்
புட்பமேல் ஆண்பட்சி போய்இரை எடுக்கும்
போதிலே பொழுதுபோய்ப் புண்டரீ கந்தன்
[1]மீதிலே யிருட்பரவி ராதங்கி இரவு
விடிந்தபின் பெண்பட்சி மேல்நினை வாகி
நடந்துபோய்ச் சேரில் அன்ன நாரியும்
இராத்திரி வேறொரு நாயகி வீடு
காத்திருந்தாய் ஆகையால் உன்னை யான்இனிச்
சேரேன் என்றதும்இது சொலும்இரை தேடிக்கொண்டு
சென்ற விடத்துநும் சேதியைச் சொல்லினும்
தத்தரிப்பேன் என்றந்தச் சதிகோலம் கேட்டுச்

சத்தியம் ஆண்பட்சி தானப்போ சொல்லும்
வேதியன் எதிர்ந்த மெல்லியாள் பத்து
மாதமாய்க் காக்கினும் பலியவன் இணங்காது
இருக்கின்ற பாவத்தி லேபோவான் என்று
உரைக்கவே தவத்தினார் உள்ளம் கலங்கி
விழித்தள வேயொரு மெல்லியைக் கண்டே
அழைத்துநீ வருங்கவ்வை யாதெனக் கேட்கில்
கொம்மைமின் னாரும் குமாரனை வேண்டி
உம்மிட பக்கலில் ஒருபத்து மாதம்
ஆகக் காத்தேன்என்று அரிவையும் கூறப்
போகித்தார் முடிபத்துப் புத்திரன் பிறந்தான்
இன்பம் தவிராது இணங்கவே பின்னும்
கும்பகர்ணனைப் பெற்றும் குணமில்லை என்றாள்.
மற்றும் இணங்கவே மார்க்கமாம் ஞான
புத்தி விபீஷண னைப்பெற் றெடுத்தாள்
ஆகையால் அந்தணன் ஆசரித் தவளைப்
போகித்து வேண்டிய பொருளையும் கொடுத்தார்
அப்படிக் குலத்தில்இல் லாதவள் அலவே
கொண்டபெண் டினுக்கிந்தக் குறைசொல்லப் போமோ
நாளொன்றில் குற்றமொன்று ஆயிரம் இருக்கும்
ஆளனா னவன் சமித்து ஆண்டிட வேணும்
என்றந்தச் சபைதனில் எவர்களும் எழுந்து
நின்றுகொண்டு இவள்செய்த நேரத்தை யெல்லாம்
பொறுத்திடும் என்றந்தப் பூதத்தைப் பிடித்துக் குறித்தவன்
கையிலே கொடுக்கின்ற போது
பரிதாப மாய்நீலி பாவையும் ஊரார்
உருகிமெய் யாம்என ஒன்றுசொல் வாளே.

இராட்சதப் பேய்க் கூட்டத்திலே தர்ம குணமுடையவன் ஒருவன் இருந்தான். அவன்பெயர் தயித்திய சூரன் என்பர். அவன் மகள் பெயர் சுகப யோதரி. அவள் கணவன் பெயர் திவகன். திவகன் தன்மனைவியைத் தொடாமலே இருந்து இறந்துவிட்டான். அவள் தன் தந்தையாரிடம் தனக்குச்

சந்ததிவேண்டுமே என்ன செய்வது என்று அழுதாள். தந்தை ஒரு உபாயம் சொன்னார். அதாவது, காட்டிலே ஒரு அந்தணன் தவம் செய்து வருகிறார். அவரை அணுகினால் உன் கருத்துக்கு ஏற்ப பிள்ளைப் பேறு உண்டாகும் என்றார். சுகபயோதரி சென்று தவசியைப் பார்த்தாள். அவரும் பார்த்தார். அவரை வணங்கித் துதித்தாள். பிறகு அந்தணர் கண்ணைத்திறந்து அவளைப் பார்க்கவேயில்லை. பத்து மாதங்கள் ஓடிவிட்டன.

ஒருநாள் அந்த இடத்தில் இருந்த ஒரு குளத்தில் ஒரு ஆண் பறவையானது ஒரு தாமரை மலரின்மீது போய் உட்கார்ந்து மலரிலிருந்த தேனை உண்டு கொண்டிருந்தது. மாலை நேரமாகிவிட்டதால் தாமரையின் இதழ்கள் குவிந்து பறவையை மூடிக்கொண்டுவிட்டன. இரவு அந்த மலரிலேயே இருந்த பறவை விடிந்தபின் தன் பெண் பறவையைத் தேடிச் சென்றது. இரவு வேறொரு பெண் வீட்டில் தங்கிவிட்டு வந்தாய். ஆதலால் இனி உன்னைத் தொடமாட்டேன் என்றது பெண்பறவை. இரைதேடிச் சென்றவிடத்தில் தனக்கு ஏற்பட்ட நிலமையை ஆண்பறவை எடுத்துச் சொல்லியது. அப்போதும் இந்தச் செயலைச் சகித்துக் கொள்ளமாட்டேன் என்று கூறிவிட்டது பெண்பறவை. சத்தியத்திற்குட்பட்ட, சிறிதும் தவறு செய்யாத ஆண்பறவை சொல்லத் தொடங்கியது.

அதோ தவஞ்செய்யும் அந்தணனை நோக்கிவந்த பாவையானவள் பத்துமாதமாகக் காத்துக்கிடக்கிறாள். ஆனால் அவள் விருப்பத்தைப் பூர்த்தி செய்யாமல் இருக்கிற அந்த அந்தணனுக்கு ஏற்படும் பாவத்தை நானும் பெறுவேன் என்று தன்மேல் அப்பழி வந்துசேராது என்ற நிலையில் கூறியது. இதைக்கேட்ட தவசி உள்ளம் கலங்கினார். கண்விழித்தார். எதிரிலிருந்த மங்கையைப் பார்த்தார். அழைத்தார். நீ வந்த காரியம் என்ன என்று கேட்டார். இளமையும் அழகும் வாய்ந்த அந்தப் பெண்மணியார் மகனைப்பெறவேண்டும் என்று தங்களை நாடிவந்து பத்துமாதமாகக் காத்திருக்கிறேன் என்றார். அந்தணரும் அவளைக் கூடினார். பத்துத் தலைகளோடு கூடிய மகன் ஒருவன் பிறந்தான். இன்பம் நீங்கவில்லை என்று மீண்டும் கூடிக் கும்பகர்ணனைப் பெற்றாள். அதுவும் சுகமில்லை என்று மறுபடியும் சேர்ந்து பேரறிவு படைத்த விபீஷணனைப் பெற்றாள். அந்தணர் அவளை வாழ்த்தி வேண்டிய பொருளையும் கொடுத்தார். இவள் அப்படிப்பட்ட குலத்தில் பிறந்தவள் இல்லை. அறுவறுக்கத்தக்க நிலையில் உடலை விலைக்கு விற்கும் கணிகையர் குலத்தில் பிறந்தவளும் இல்லை. குண்டுகள் இணைக்கப்பட்ட தாலியைப் பொய்யாக அணிந்தவளும் இல்லை. நீ விரும்பித்தாலிகட்டிய மனைவியைப் பற்றி இவ்வாறு குறை கூறலாமா? இல்லறத்தில் ஒவ்வொருநாளும் ஆயிரம் குறைகள் ஏற்படக்கூடும். ஆண்மகனான தலைவனே அதையெல்லாம் பொருட்படுத்தாமல் மன்னித்து

ஆட்கொள்ளவேண்டும் என்றெல்லாம் கூறிய சபையோர் எழுந்து நின்று இவள் பேசியதை எல்லாம் பொறுத்து மன்னித்துவிடும் என்று சொல்லி அவள் கையைப் பிடித்துத் தரிசனன் கையிலே கொடுத்தார்கள். அப்போது நீலி அவர்களைப் பரிதாபமாகப் பார்த்து சபையோரும் ஊர்மக்களும் நம்பி உள்ளம் உருகுமாறு பேசத் தொடங்கினாள்.

பிரமராட்சதர் - இராட்சதப்பேய். தயித்திய சூரன் - அசுரவீரன். கால்-சந்ததி. பட்சம் - பிரியம். பொட்சை - பொச்சை - காடு. புரோகிதன் - அந்தணன். நத்தி - அடைந்து. மறையோனை - அந்தணனை. தோத்திரம் - துதித்தல். தோகை-மாது. புட்பம் - மலர். பட்சி- பறவை. இரை- உணவு. புண்டரீகம் - தாமரை. இருட்பரவி - இருள் நிறைந்து (இதழ்கள் குவிந்து விட்டன). சேரில் - சேர, அடைய. நாரி - பெண்பறவை. நாயகி - தலைவி. தத்தரிப்பேன் - சகித்துக்கொள்ள மாட்டேன். சதி - பெண்பறவை. கவ்வை - காரியம். கொம்மை - இளமை. அரிவை - பெண். முடிபத்துப் புத்திரன் - இராவணன். தவிராது - நீங்காமல். ஆசரித்து - புகழ்ந்து. கைப்புளவிலை - வெறுக்கத்தக்க உடல் விற்கும் தொழில். உறும் - ஏற்ற. கணிகை - விலைமாது. குண்டணிதாலி-குண்டு கோத்ததாலி. ஆளன் - கணவன். சமித்து - மன்னித்து. நேரம் - குற்றம்..

**சுவடிச்சொல்** - 1. மீதிலெ முட்பாவிரிதங்கி.

**(தரிசனன் கையிலுள்ள சூரியை வாங்கி விட வேண்டுதல்)**

**சம்பை**

94. நாட்டவர்க ளேயிவரைக் கூட்டினீரிவர் என்னை
ஊட்டியறுத் திடச்சூரி தீட்டிவைத்துக் கொண்டார்

எந்தவே ளையிலேயென் கந்தரத்தை யரிவாரோ
அந்தத்தோஷம் பிறகுவந்து உங்களைச் சேரும்

பத்திரத்தி னால் எனக்குப் பயமாச்சு நீங்கள் அந்தப்
பத்திரத்தை வாங்கில்பயம் அற்றிருப்பேன் என்றாள்

பழையனூர் வாழுமா பாலரேயுங் களுக்குப்
பழுதில்லை யான்சொன்ன வழிசெய்யும் என்றாள்

சான்றோர்களே இவரை என்னோடு கூட்டிவைத்துவிட்டீர்கள். என்கழுத்தை அறுப்பதற்காகவே கத்தியைத் தீட்டி வைத்திருக்கிறார். எந்தச் சமயத்தில் என் கழுத்தை அறுப்பாரோ! எனக்குத் தெரியாது. அந்தப் பாவமும் ஊராராகிய உங்களைவந்து சேர்ந்துவிடும். கத்தியால் எனக்கும் பயமாக

இருக்கிறது. அதை வாங்கிவிட்டால் நான் பயம் இல்லாது அவரோடு இருப்பேன். பழையனூர் பெரியோர்களே! அதனால் உங்களுக்கும் பழி ஏதும் வராது. நான் வேண்டியபடி செய்யுங்கள் என்றாள்.

*ஊட்டி* - கழுத்து. சூரி - கத்தி. கந்தரம் - கழுத்து. அரிவார் - அறுப்பார். பத்திரம் - வாள், சூரி. மாபாலர் - சான்றோர். பழுது - குற்றம்.

***(சூரியைத் தருமாறு ஊரார் கேட்டல்)***

**திரிபுடை**

95. மெய்யென்றே அனைவோரும் வணிகனை வேண்டி
வேண்டிக்கொண்டு எதிர்நின் றேயுந்தன் கையில்
இருக்கின்ற சூரிதனை இங்கேவையும் என்றார்
கொல்லவே கையில் சூரிநீர் ஒன்று
கொண்டு வந்தது தெரிய வந்தது
சொல்ல வேண்டிய தென்ன நீர்அந்தச் - சூரிதாரும்
பிள்ளைத் தாய்ச்சியைக் கொல்ல வேகையில்
பிடித்த சூரியைக் கொடுமென்றே சபை
யுள்ள பேர்கள்எல் லாருங் கேழ்க்கவே - சள்ளினானே.

பழையனூரார் அவள் கூறியதை உண்மை என்று நம்பினார்கள். தரிசனனின் எதிரில் நின்று உன்கையிலிருக்கிற கத்தியை இங்கே வையும் என்று வேண்டினார்கள். அவளைக் கொலை செய்யவே கையில் கத்தி கொண்டுவந்திருக்கிறீர் என்பது வெளிச்சமாகிவிட்டது. குழந்தையும் கையுமாக இருக்கிற இவளைக் கொல்ல வைத்திருக்கிற கத்தியைக் கொடுத்துவிடும் என்று சபையோர் எல்லோரும் கேட்டார்கள். இதைக் கேட்டுத் தரிசனன் அலட்சியமாக உறுமினான்.

பிள்ளைத்தாய்ச்சி - கருவுற்றபெண், கைக்குழந்தையுடன் இருக்கும் தாய். சள்ளினான் - உறுமினான்.

**(சூரி இல்லையேல் இவள் கொல்லுவாளே எனல்)**

**சம்பை**

96. என்றும் இருந்ததொரு சாவென்று எண்ணியே - வணிகேசன்
ஒன்று சொல்கிறேன் பழையனூ ரவரே கேளீர்!

மரித்தபிணத் தினைப் பொசிக்கும் மாபூதம் தனக்காகப்
பரிச்சலாய் எனதுகையில் பத்திரத்தைக் கேட்டீர்யான்

சொன்னபேச்செல் லாம்மரத்தில் புளியாச்சு யவள்தான்
சொன்னபேச்சே மெய்தான் ஆச்சுஉங் களுக்கு

நல்ல தென்கைச் சூரிதனை நான்கொடுக்கிறேன்
உங்களை
யல்லவென்று தானடக்கும் வல்லமையும் உண்டோ?

இல்லவே சூரிகைவிட்டு இருக்கிலோ இவள்என்னைக்
கொல்லுவாள் அதற்கென்ன சொல்லுவீர் என்றான்.

ஆதரவ தாம்சூரி யகலவே யென்பிராணன்
சேதமாம் உங்களுக்கு நீதமென்ன வென்றாள்.

இறப்பு என்பது ஒருநாள் வரத்தான் போகிறது என்று எண்ணிய தரிசனன், பழையனூர் சான்றோர்களே! இறந்த பிணத்தைத் தின்னும் பெரும்பூதத்திற்காகப் பரிந்து பேசி என் கையிலிருக்கிற வாளைக் கேட்கிறீர்கள். நான் சொன்னதெல்லாம் மரத்திலிருக்கிற புளிபோலப் பயனில்லாமல் போயிற்று. அவள் சொன்னவை உங்களுக்கு உண்மையாயிற்று. நல்லது. உங்களை மீறி நடக்கும் வலிமை எனக்கு இல்லை. என்கையிலிருக்கும் கத்தியைக் கொடுத்துவிடுகிறேன். நான் கையில் கத்தி இல்லாதிருந்தால் இவள் என்னைக் கொன்றுவிடுவாளே ! அதற்கு என்ன சொல்லுகிறீர்கள்? கத்தி என்கையை விட்டு நீங்கினால் என் உயிருக்கு அழிவுவரும். உங்களுடைய நியாயம் என்ன சொல்லுங்கள் என்றான்.

மரித்தபிணம் - உயிர் நீங்கிய வெற்றுடல். பொசித்தல் - புசித்தல், உண்ணுதல். பரிச்சலாய் ஆதரவாய். பிராணன் - உயிர். சேதமாம் - அழியும். நீதம் - நீதி.

**(அவையோர் கொடுத்த உறுதிமொழி)**

**ஏகதாளம்**

97. நீதமென்று இவன் சொல்ல நிறைசபை யோர்களப்போது
உன்னுயிர் தனக்குச் சேதம் ஆனால்

சத்திய மாய்இந்தச் சபையில் இருந்தவர்கள்
அத்தனைப் பேர்களும் உத்தரிப் போம்காண்
பழுதுவந் தால்இந்தச் சபைதனில் இருந்திடும்
எழுபது பேர்களும் ஒழியுறோம் என்றார்
அம்மையப்ப ஈசுவரன் அறியபுவி யறிய
உம்மிட உயிர்க்குயிர் உதவுவம் என்றார்
ஈசன் ஆணைப் பிசகில்லை என்றார் அந்த
வாசகம் சொல்லவே வணிகன் அப் போது
இத்தனை பேருக்கு எனதுயி ரானது
தித்திப்பு அல்ல வென்று பத்திரம் கொடுத்தான்

நீதி என்ன என்றுகேட்ட தரிசனனைப் பார்த்துச் சபையோர்கள், உன் உயிருக்கு ஒரு ஆபத்து வந்தால் இந்தச் சபையோர் எல்லோரும் ஈடு செய்கிறோம். இது சத்தியம். அதாவது தவறு ஏதாவது நடந்தால் இந்தச் சபையிலிருக்கும் எழுபதுபேரும் உயிர்விடுகிறோம். அம்மையப்பனாகிய இறைவன் அறிய இந்தப் பூவுலகம் அறிய உம் உயிருக்கு உயிர் தருகிறோம் என்றார்கள். இறைவன்மீது ஆணையிட்டுச் சொன்னவுடன் தரிசனன் இத்தனை பேருடைய உயிரைவிட என் உயிர் உயர்ந்தது அல்ல என்று எண்ணி உடனே சுத்தியைக் கொடுத்துவிட்டான்.

உத்தரிப்போம் - ஈடுசெய்வோம். ஒழியுறோம் - ஒழிகிறோம் - உயிர்விடுகிறோம். அம்மையப்ப ஈசுவரன் - சிவபெருமான். பிசகு - தவறு, தடை

**(இரவு இருவரையும் கோயிலுள் அடைத்தல்)**

**சம்பை**

98. பத்திரத்தை வாங்கிக் கொண்டு
பழையனூ ரார்இவரை
எத்திரம் செய்வோம் என்றவர்
சித்தந்தனில் எண்ணி
வெறுங்கையாய் இருவரையும்
விட்டோட்டி னால்உலகில்
பெருங்கணக்கல் லாயிவர்கள்
திறம்காண வேணும்.

காலமே நன்மைதீமை
கண்டுசொல்லு வோம்இவரை
ஆலயத்தில் அடையும் இந்த
மாலைதனக்கு என்றார்
யோசனை யதாமென்றே
ஒன்றுக்கொன்று பேசிக்கொண்டு
ஈசனார் ஆலயத்தில்
இருவரையும் அடைத்தார்
அடைத்துக் கதவடைத்துப்
பூட்டது பூட்டி அனைவர்களும்
சிடுக்குப்பொடுக் கென்னாமல்
செவிகொடுத்துக் கேட்டார்

கத்தியைப் பெற்ற பழையனூரார் இவர்களை என்ன செய்யலாம் என்று சிந்தித்தார்கள். இருவரையும் சும்மா அனுப்பிவிட்டால் அது பெருமையாகாது. இவர்களின் திறமையைப் பார்க்க வேண்டும் என்று முடிவுசெய்தார்கள். நாளைக் காலையில் எது நல்லது? எது கெட்டது என்பதை அறிந்து சொல்லலாம். இன்றைய இரவு இவர்களை இந்த ஆலயத்தில் விட்டுப் பூட்டிவைக்கலாம் என்று ஒருவரோடொருவர் பேசி முடிவெடுத்தார்கள். அப்படியே இறைவன் கோயிலில் விட்டுக் கதவைச் சாத்திப் பூட்டினார்கள். பிறகு அனைவரும் சத்தம் செய்யாமல் வெளியிலிருந்து காது கொடுத்துக் கேட்கத் தொடங்கினார்கள்.

விட்டோட்டுதல் - துரத்திவிடுதல். பெருங்கணக்கல்லா - பெரிய செயல் இல்லை. திறம் - திறமை, குணம். மாலை - இரவு. யோசனையதாம் - இதுவே நல்ல முடிவாகும். ஒன்றுக்கொன்று - ஒருவருக்கொருவர். சிடுக்குப் பொடுக்கு - சிறிதும் ஒலி செய்யாமல் என்னும் பொருளில் வந்த ஒலிக்குறிப்புச் சொல். செவி- காது.

## வசனம்

இந்தப்படிச் செட்டியாரையும் நீலியையும் கோயிலுக்குள்ளே அடைத்து ஒருவருக்கொருவர் என்ன சொல்லுகிறார்களோ வென்று பழையனூர் கிராமாதிபதிகள் அத்தனை பேர்களும் பேசாமல் கேட்டிருக்க அந்த யூகை அறிந்து நீலி என்ன சொல்லுவாள். (25)

யூகை - யூகம் - உள் எண்ணம்.



நீலியையும் தரிசனனையும் இரவில் தங்க வைத்த பழையனூர் திருக்கோயில்

(ஒட்டுக்கேட்கும் ஊரார் நம்புமாறு நீலி பேசுதல்)

### திரிபுடை

99. தேவி சீதையை இராவ ணன்சிறைக்
காவலில் வைத்த கதையைப் போலவே
கோப மாய்விட்டு விடுவரோ இந்தப்
பாபம் உண்டோ/
வீணிலேபணம் பறிக்கும் வேசியர்

மீதி லேமயல் ஆகியே கொண்ட
பிராண நாயகி மனது கலங்கவே
குாண லாமோ?
குணத்துக் கிசைந்தபெண் டாட்டி தனைவிட்டுக்
கூத்தி மேலிச்சை கொண்டு தேடிய
பணத்தை இறைத்தென்ன பலனுண் டாமுங்கள்
குணத்தி யிலையோ?
புண்ணும் புறமியம் கூறு கொண்டுடல்
குன்னிப் போறதல் லாமல் உங்கட்குப்
பண்ண பாவமல் லோவென் மேலிச்சை
நின்னு போச்சே.
மனதில்லா விடிலுமக்கு வேண்டிய மாதருடனே
எனைத்தனி வழியில்விட வந்தது உமக்கெந்த
நினைவு தானோ?
மாலை நீர்அன்று சூடினீர் இன்று
மறந்து பிறந்தவ மணவரே உம்மைச்
சால நம்பினன் பழைய னூர்க்கெல்லாம்
கோலம் செய்தீர் - நான்
பொல்லா தவளே - குழந்தை - பொல்லாத தலவே
இத்தனை வன்மம்ஏன் பண்ணினீர்?
குலத்தடுக்குமோ இந்தத் தீம்பு என்றாளே

ஊரார் வெளியிலிருந்து ஒட்டுக் கேட்பதைத் தன் யூகத்தால் அறிந்தாள் நீலி. மீண்டும் தன் நடிப்பைத் தொடங்கினாள். இராவணன் சீதாதேவியைச் சிறைக்காவலில் வைத்த கதையைப் போலக் கோபமாய் என்னை விட்டுவிடுவது பாபமல்லவா? பணம்பறிக்கும் பரத்தையர் மீது மோகம் கொண்டு, கட்டிய மனைவியைக் கலங்க வைக்கலாமா? தங்கள் குணத்துக்கு ஏற்ற மனைவியை விட்டுப் பரத்தை மேல் ஆசை வைத்துச் சம்பாதித்த பணத்தையெல்லாம் அழிப்பதனால் பயன் என்ன? நான் தங்கள் குணத்துக்கு ஏற்றவள் அல்லவா? இரணமும் மேகநோயும் தங்கள் உடலில் இடம் பெற்று விடும். அதனால் உடலே கெட்டுப் போவதல்லாமல் வேறு இல்லை. என்மேல் ஆசை விட்டுப் போவதற்கு நான் என்ன பாவம் செய்தேன்? என்னோடு இருக்க மனம் இல்லாவிட்டால்

உமக்கு விருப்பமான பெண்ணோடு வாழும்! என்னைத் தனிவழியில் கைவிட்டது ஏன்? அன்று எனக்கு மாலை சூட்டினீர்கள். இன்று மறந்து விட்டீர்கள். நான் உம்மையே மிகவும் நம்பினேன். பழையனூருக்கெல்லாம் வந்து அவமானம் செய்து விட்டீர்கள். நான் பொல்லாதவள் தான்! இத்தனை பிடிவாதமும் வைராக்கியமும் எதற்கு? இந்தத் தீய செயல்கள் நமது குலத்துக்குத்தகுமா? இவ்வாறெல்லாம் கேட்போர் நம்புமாறு பேசினாள்.

கூத்தி - பரத்தை. இச்சை - விருப்பம், மோகம். இறைத்து - செலவு செய்து. குணத்தி - குணத்துக்கு ஏற்றவள், சிறந்த குணத்தை உடையவள். புண்ணும் புறமியமும் - இரணமும் மேகநோயும் (புறமியம் - பிரமியம்) கூறுகொண்டு - இடங்கொண்டு, உண்டாகி. குன்னிப்போதல் - குன்றிப்போதல் - குறைதல், கெட்டுப்போதல். சால - மிகவும். வன்மம் - பிடிவாதம், வைராக்கியம். தீம்பு - தீயசெயல்.

***(நீலிபேச்சை நம்பிய ஊரார் சென்றபின் நீலியுடன் தரிசனன்)***

### சம்பை

100. உருகியிவள் சொலும் பேச்சை
ஊரார்கள் கேட்டெழுந்து
திருடன்இவன் கூத்தியர்கள்
மருளெடுத்துக் கொண்டு
கொண்டபெண்ணை நீலியென்று
கூறினான் இவன்சூது
கண்டறிய லாச்சுதென்று
காராளர்போனார்
போனவர்எல் லாம்இனிய
போசனம் செய்து நித்திரை
யானதுசெய் தார்வணிகன்
தானுமேது சொல்வான்
காட்டிலிருந்து எனைத்துரத்திக்
களரிதனி லேயெனது
வீட்டுமனை யாட்டிபோல
நாட்டியம்செய் தீரே

பாரியென வேமுடித்துப்
பாலனையென் மடியேத்திச்
சூரிதனை வாங்கிவைத்த
சூர்ப்பநகை யாரே!
கழுத்திலே பூண்டசர்ப்பம்
கடியாமல் போகுதோ
வழிக்குள்சொன் னியேயந்தப்
பழிக்குறைசொல் என்றான்
முன்னால்என் னால்வழிகள்
முடிந்ததோ சொல் உமக்கு
என்ஆணை இவ்வளவுஎன்
மன்னாப்பு என்றானே.

· உருக்கத்தோடு பேசிய நீலியின் பேச்சைக் கேட்ட பழையனூரார் அதை நம்பினார்கள். தரிசனன் பரத்தையர் மீது மோகங்கொண்டு மனைவியை நீலி என்று கூறினான். இவனது சூட்சியைத் தெரிந்து கொண்டோம். இனி போகலாம் வாருங்கள் என்று அனைவரும் சென்றுவிட்டார்கள். வீடு சென்று உணவு உண்டு தூங்கிவிட்டார்கள். தரிசனன் நீலியைப் பார்த்து, சூர்ப்பநகையாளே! காட்டிலிருந்து என்னைத் துரத்தி வந்தாய். என் சொந்த மனைவியைப் போல சபையிலே தோன்றி நடித்தாய். ·மனைவி என்றே முடிவு செய்து குழந்தையை என்மடியில் விளையாட அனுப்பினாய். கத்தியையும் வாங்கிக் கொண்டாய். கழுத்தைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் விடாது. வரும் வழியில் சொன்ன என்மீதுள்ள பழிபாவத்தைச் சொல். என்னால் உனக்கு நடந்த பழியைச் சொல். என் மீது ஆணை; என்னை மன்னித்துச்சொல் என்றான்.

மருள் - மயக்கம். காராளர் - பழையனூர் வேளாளர். போசனம் - உணவு. நித்திரை - தூக்கம். களரி - சபை. நாட்டியம் - நாடகம், வெளிவேஷம். பாரி - மனைவி. பாலன் - குழந்தை. பூண்ட - அணிந்த. சர்ப்பம் - பாம்பு. பழிக்குறை - பழி வாங்க வேண்டுமென்றதற்குரிய காரணம், நான் செய்த தவறு. மன்னாப்பு - பொறுத்துக் கொள்ளுதல்.

## வசனம்

மன்னாப்பென்ற வணிகருக்கு இவளும் முன்னாட்பழிகள் முடிந்ததைச் சொல்வாள்

(26)

(முற்பிறப்பில் புவனபதியே தரிசனன்)

## ஏகதாளம்

101. முன்னாள் தனில்கச்சி வேதியர் களில்ஒரு
மானா பரன்பெயர் ஞானாதி பன்காண்
அவன்மனை யாள்வயிற் றவதரித் தேவந்த
புவனபதி என்றொரு புத்திரன் இருப்பான்
புவனபதிக்கு நல்ல பூவை விவாகம்
எவரும்புகழத்தந்தை யவர்கள்செய் தாரே
செயமுடன் இருந்திடும் தினத்தி லேயொரு
வயது பிராமணர் இயல்பாய்க் கூடி
காசிக்குப் போகையில் காளையும் அவருட
னேகூற்றி யேயவி னாசிக்குப் போனார்

தன்னால் ஏற்பட்ட பழியைச் சொல்லுமாறு கேட்ட தரிசனனைப் பார்த்து நீலி சொல்லுகிறாள். காஞ்சிபுரத்தில் ஞானாதிபன் என்னும் பெயரையுடைய அந்தணன் ஒருவன் இருந்தான். மிகவும் மானமுடையவன். அவன் மகன் புவனபதி என்பவன். ஞானாதிபன் தன் மகனுக்கு அழகிய ஒரு பெண்ணைத் திருமணம் செய்து வைத்தான். ஒரே வயதுடைய அந்தணர் இருவர் கூடி காசிக்குச் சென்றனர். புவனபதியும் அவர்களுடன் காசிக்குப்போய்த் திரும்பும் போது அவிநாசி என்னும் திருத்தலத்திற்குச் சென்றார்கள்.

மானாபரன் - மானமுடையவன், மானாபரணன்என்பதும் ஒன்று. புத்திரன் - மகன். காளை - இளையோன். அவிநாசி - ஒருசிவத்தலம்.

(மணமான புவனபதி இரண்டாவதாக நவக்கியானியை மணத்தல்)

## சம்பை

102. போனவிடத்து அங்கொரு பூசுரர்உண்டு அவர்பெயர்
மெய்க்கியானி யவர்பிள்ளை சிவக்கியானி என்று சொல்வார்
சிவக்கியானி தனக்கிளைய ஸ்திரீயொருத்தி யவள்பெயர்
நவக்கியானி என்றேஅந் நாடெலாம் துதிக்கும்
அம்மானைக் காஞ்சிபுரத் தான்புவன பதியை மெச்சித்

தம்மாலே கன்னிகா தானஞ்செய்து கொடுத்தார்.
தானம் ஏற்று அவருடனே தான்வந்த பேரெல்லாம்
ஞானமாய்ச் சேதுப்தி நாடிநடந் தாரே
இவன்சிலநாள் இருந்தங்கு ஏந்திழையைத் தருமாமன்
அவனைவின விக்காஞ்சி யம்பதிக்குப் போகச்
சிலவுதர வேணும்என சேஷ்டன்சிவக் கியானியையும்
குலவுநவக் கியானியையும் வலவனுடன் கூட்டி
வழிச்செலவுக்கு இரணியமும் வழங்கிச்சிவக் கியானிதன்னைச்
செழித்தகாஞ்சி சேர்ந்தபின்பு திரும்பிவிடென் றானே.

அவிநாசியில் மெய்க்கியானி என்னும் அந்தணர் ஒருவர் இருந்தார். அவருக்குச் சிவக்கியானி என்ற மகன் ஒருவனும் நவக்கியானி என்னும் மகள் ஒருத்தியும் இருந்தார்கள். காஞ்சிபுரத்திலிருந்து வந்த புவனபதியைக் கண்ட மெய்க்கியானி, அவனது ஒழுக்கத்தைக் கண்டு புகழ்ந்து தன் மகளைக் கன்னிகாதனமாகத் திருமணம் செய்து கொடுத்தார். திருமணம் முடிந்த பிறகு புவனபதியுடன் வந்த நண்பர்கள் இராமேசுவரத்திற்குச் செல்லப் புறப்பட்டார்கள்.

புவனபதி சிலநாள் மாமனார் வீட்டில் தங்கியிருந்தான். பிறகு ஒருநாள் காஞ்சிக்குச் செல்ல மாமனாரிடம் உத்தரவு கேட்டான். அவர் தம் மகன் சிவக்கியானியை அவர்களுக்குத் துணையாகப் போய் வரச்சொல்லி புவனபதியையும் நவக்கியானியையும் கூட்டி அனுப்பினார். வழிச்செலவுக்கென்று வேண்டிய பொருளும் கொடுத்தார். இருவரையும் காஞ்சியில் சேர்த்த பிறகு, நீ திரும்பிவிடு என்று சிவக்கியானிக்குக் கட்டளை இட்டு அனுப்பினார்.

பூசுரர் - அந்தணர். ஸ்திரீ - பெண். அம்மான் - அந்தமான்; மான் - மான் போன்றவளாகிய பெண். தம்மாலே - தாமே. கன்னிகாதானம் - கன்னியை மணமுடித்துக் கொடுத்தல். சேதுபதி - இராமேசுவரம். பதி - திருத்தலம். சிலவு - விடை. சேஷ்டன் - மூத்தோன், அண்ணன். வலவன் - வல்லவன், புவனபதி. இரணியன் - பொன்.

**(மனைவியைக் கொன்ற புவனபதியின் மறுபிறப்பு)**

## திபதை

103. என்றுதன் மாமனார் இயம்பவே கேட்டு
நன்றென்று மச்சின னாரையும் தமது
மனையவ ளையும்கூட வருகவென அழைத்தே

தனதுதே சத்துக்குத் தான்வரும் போது
உருமேயக் கருவுமெய் யோபோய்யோ வென்று
வரவரக் கர்ப்பம் வளர்ந்தது மெய்யாய்
வனமும் கிரிகளும் வழிமிக வலைச்சல்
தினம் ஒரு காதமாய்த் தெற்காக நோக்கி
நடந்து பலப்பல நாடுராச்சி யத்தைக்
கடந்து திருவாலங் காட்டினில் வரச்சே
புவனா பதிக்கொரு புத்தியுண் டாகி
அவமதி யாய்க்கச்சி யம்பதி தனிலே
முன்கொண்ட பெண்டுமேல் மோகம் பொருந்திப்
பின்கொண்ட பெண்டினுட பிராணனைப் போக்க
நினைவுகொண் டான்அந்த நேரத்தில் மச்சான்
தனியாய் வெளிக்கவன் தாண்டிய போது
மனையாளைச் சூரியால் வயிற்றினைப் பீரித்
தனையனைக் கள்ளிமேல் தானெடுத்து எறிந்தான்
பெண்ணுடன் பிறந்தவன் பின்வந்து பார்த்துத்
தன்னிலே சீவனைத் தான்விட்டு மாண்டான்
கொன்றவன் தந்தைதாய்க் குடும்பினில் சேர்ந்து
மண்ணடர்ந்து ஆயிசு மாண்டநாள் மாண்டான்
அப்பிறப் பினில்மனை யாட்டியை வதைத்தோன்
இப்பிறப் பினில்செட்டி எனஉற்ப வித்தாய்

**(நவக்கியானியின் மறுபிறப்பு)**

அரிவையும் அவனும் அலகையாய் இருந்து
புரிசைக் கிழானிடம் புதல்வராய் வந்து
நீலனும் நீலியாய் நிலத்தில் உலாவி
வாலிப நீலனை வைகுந்தம் சேர்த்து
நான்ஒரு பாவிஇந் நாள்வரை மட்டும்
தான்இருந் தேன்உனைத் தான்பழி வாங்க
வேளையும் வந்தது விதியும்நேர் ஆச்சு
மாளவந் தீர்என்று மாபூதம் சொல்லக்

கேட்டந்த செட்டியும் கெம்பீரமாகி
ஈட்டும் பழியிது எதார்த்தமாம் என்றும்
தன்னுடன் மகிழ்ச்சியாய்த் தான்எதிர் இருக்கும்
மனைவி நீலியை வணிகனும் கேட்பான்
சத்தியம் கூறியே சாகிறோம் என்று
காராளர்க்கு என்பழி காரணம் தன்னைச்
சீராய்ச்சொல் என்று செட்டியார் கேழ்க்க
அவர்கள்தம் மேல்பழி யண்டின சேதி
விவரமாய் நீலி விளம்பலுற் றாளே.

மாமனார் கூறியபடியே தன் மனைவியோடு மைத்துனரையும் அழைத்துக் கொண்டு தன்நாடு நோக்கிப் புறப்பட்டான் புவனபதி.

புறப்படும்போது கருவுற்றிருந்த நவக்கியானியுடன் காடும் மலையும் ஆகிய வழிகளைக் கடந்து நாளைக்கு ஒருகாதம் வீதம் தெற்கு நோக்கி நடந்தார்கள். பல ஊர்களையும் நாடுகளையும் கடந்து வரவரக் கருவும் வளர்ந்து வந்தது. திருவாலங்காட்டையடைந்தபோது புவனபதிக்கு அற்பமான ஒரு எண்ணம் தோன்றியது. அதாவது, காஞ்சிபுரத்திலே இருந்த தன் முதல் மனைவியின் மீது மோகம் ஏற்பட்டது. இரண்டாவதாக மணந்த நவக்கியானியைக் கொன்று விட வேண்டும் என்று துணிந்தான். மைத்துனன் தனிமையாய் வெளியில் சென்றிருந்த சமயத்தில் நவக்கியானியைக் கத்தியால் குத்தினான். வயிற்றைக் கீறிப் பிளந்து குழந்தையை எடுத்து (ஆண்) அருகிலிருந்த கள்ளிச் செடியின் மீது எறிந்து விட்டு அவ்விடத்தைவிட்டு நீங்கிவிட்டான். நவக்கியானியின் அண்ணனாகிய சிவக்கியானி வந்து பார்த்து விட்டு அந்த இடத்திலேயே தன் உயிரை மாய்த்துக் கொண்டான். புவனபதி தந்தைதாயுடன் தன் குடும்பத்தில் போய் சேர்ந்து வாழ்ந்திருந்தான். இயல்பாக அவனுடைய ஆயுள் முடிந்தபோது இறந்து போனான். அப்பிறவியில் மனைவியைக் கொன்ற புவனபதியே இப்பிறவியில் தரிசனனாகப் பிறந்தாய்.

நவக்கியானியும் அவள் அண்ணன் சிவக்கியானியும் பேய்களாகத் திரிந்து வந்தார்கள். பிறகு புரிசைக்கிழான் என்பவரின் மக்களாய்ப் பிறந்து நீலன், நீலி என்ற பெயருடன் உலவி வந்தார்கள். அவர்களுள் நீலனாகிய என் அண்ணனை வைகுந்தத்திற்கு அனுப்பி விட்டு பாவியாகிய நான் ஒருத்தி மட்டும் உன்னைப் பழிவாங்குவதற்காகவே அலைந்து வருகிறேன். இப்போது உரிய நேரம் வந்தது; விதியும் பொருந்தியது; சாகவந்திருக்கிறீர் என்று கூறியது நீலியாகிய பூதம்.

கேட்ட தரிசனன் மனத்திடம் அடைந்தான். முற்பிறவியில் தேடிக்கொண்ட பாவம் உண்மையாகவே வந்து சேர்ந்தது என்று துணிந்தான். எதிரிலிருக்கும் தன் மனைவியாகிய நீலியைப் பார்த்து, எனக்காக உயிர் விடுவதாகக் கூறிச் சத்தியம்

செய்திருக்கிறார்களே பழையனூர் வேளாளர்! அவர்களுக்கு இப்பழி வந்த காரணம் என்ன என்று கேட்டான். அதற்கு உரிய காரணத்தையும் நீலி சொல்லத் தொடங்கினாள்.

மச்சினனார் - மைத்துனன், மனைவியின் சகோதரன். உருமேயகரு - உருவமடைந்த கர்ப்பம். வனம் - காடு. கிரி - மலை. காதம் - சுமார் 10 மைல் தூரம். திருவாலங்காடு சிவத்தலம் - அவமதியாய் - அற்பத்தனமாய். பீறி - கிழித்து. தனயன் - ஆண்மகவு, கருவிலிருந்த குழந்தை. கள்ளி - ஒருவகை முட்செடி, தன்னிலே தானே. சீவன் - உயிர். குடும்பு - குடும்பம். ஆயிசு - ஆயுள், வாழ்நாள். மாண்டநாள் - முடிந்தநாளில். அரிவையும் அவனும் - நவக்கியானியும் சிவக்கியானியும். நேராச்சு - நிகராயிற்று, வந்து பொருந்தியது. மாள - உயிர்துறக்க. கெம்பீரம் - மனத்திடம், துணிவு. ஈட்டும்பழி - முற்பிறவியில் தேடிக்கொண்ட பாவம். எதார்த்தம் - எதிர்பாராதது, உண்மையானது. அண்டியசேதி - வந்து சேர்ந்த செய்தி. விளம்புதல் - சொல்லுதல்.

***(சிவபெருமானும் சிவகணங்களும் - கணங்களின் பிரிவு)***

***சம்பை***

**104.** சிவகணங்கள் இவரெல்லாம்
சிவனருகு பிரியாமல்
அவர்கள்இருப்பார் தினமும்
தவமது புரிந்தே
வருநாளில் ஒருநாளில்
மலரெடுக்கப் போகச்சே
சுரர்மாதை ஓர்அரக்கன்
துடுக்காகப் பிடித்தான்
பிடிக்குத்தப்பி யேயவர்கள்
பின்னாகப்போய் உங்கள்
அடைக்கலம்என் றாள்இவர்கள்
அரக்கனையும் தடுத்தார்
தடுக்கஅவன் பிடிக்கவரச்
சபைகூடி வழக்காகி
அடைக்கலம் விடாதபடி
அப்பொழுதுகாத்தார்
இரவாச்சு இராக்கதனும்
மேவினான்அவ் விரவில்

பிரிவான போதிவர்கள்
அரனாரைக் கண்டார்.

வேளாளர்களாகிய இவர்கள் எழுபதின்மரும் சிவகணம் ஆவர். சிவபெருமானை விட்டு நீங்காமல் தவம் புரிந்து வருவார்கள். ஒருநாள் அவர்கள் இறைவனுடைய பூசைக்கு மலர் எடுக்கச் சென்றார்கள். அப்போது தேவகன்னிகை ஒருத்தியை அரக்கன் ஒருவன் கட்டாயப் படுத்திப் பிடித்து இழுத்தான். அவன் பிடியிலிருந்து தப்பிய கன்னிகை சிவகணங்களிடம் போய் அபயம் புகுந்து முறையிட்டாள். சிவகணங்கள் அரக்கனைத் தடுத்தார்கள். மீண்டும் அரக்கன் பிடிக்க வந்தான். இப்படிப் பலவாறு போராடி அனைவரும் கூடி தேவகன்னிகைக்கு அடைக்கலமளித்துக் காப்பாற்றினர். இரவு கடந்து விட்டது; அரக்கனும் சென்று சேர்ந்தான். இரவு கழிந்த பின் சிவகணங்கள் சென்று இறைவனைக் கண்டார்கள்.

சிவகணம் - சிவத்தொண்டு செய்யும் கூட்டத்தினர். சுரர் - தேவர். அவர்கள் பின்னாக - சிவகணங்களின் பின்னால். மேவினான் - சென்று சேர்ந்தான். இவர்கள் - சிவகணம். அரனார் - சிவபெருமான்.

(ஊரார் மேல் பழிவரக் காரணம்)

**ஏகதாளம்**

**105.** கண்டவர்க ளைக்கறை கண்டரும் பார்த்துநம்
அண்டையில் நேற்று வராததும் என்ன?
சொல்என வேஅந்த தொண்டர்எல் லாமொரு
மெல்லியி னால்வந்த அல்லலையு ரைத்தே
அதுவழக்காய் இரவாகி விடிவாகி யுன்றன்
பதமதிப் போவந்து பணிந்தனம் என்றார்
என்னவே நீங்களும் புவியின்மே லேகுடித்
தனக்கா ராளர்கள் சனமாகப் பிறந்து
அரிவையர்க் காய்வழக்கு அதுசொல்லி நம்பதி
வருவதென் றேசிவன் அருளிச்செய் தாரே
ஆகையினால்புவிக்கு அவதரித் தார்இனி
ஏகுவர் கயிலையின் ஈசுவரன் அருகே
நீருங்கயி லைக்கிந்த நேரத்தி லேகுடி
போரது மெய்புஷ்ப மாரிகள் தூவ

நானும்உங் களைமுந்தி நடத்திவைத் தேடபின்பு
வானுல கேவரு வேன்எனச் சொன்னார்

நீலகண்டராகிய இறைவன் தம்மிடம் வந்த கணங்களைப் பார்த்து இரவு ஏன் வரவில்லை என்றார். அவர்கள் தேவகன்னிகையால் ஏற்பட்ட தொல்லைகளைக் கூறி இந்த வழக்கைமுடித்து அவளைப் பாதுகாத்து அனுப்பப் பொழுது விடிந்து விட்டது. எனவே இப்போது வந்து தங்கள் திருவடிகளைப் பணிகிறோம் என்றார்கள். உடனே இறைவன் நீங்கள் அனைவரும் பூமியில் வசிக்கும் காராளர்களாகப் பிறந்து வாழ்ந்து பெண் ஒருத்திக்காக வழக்கு சொல்லி மீண்டும் நம் திருத்தலத்திற்கு வந்து சேருங்கள் என்று ஆணையிட்டார். இறைவன் கட்டளைப்படி இப்பூமியில் பிறந்த அவர்கள் இனி கயிலைக்குச் சென்று இறைவனருகே வீற்றிருப்பார்கள். நீரும் இப்போது கயிலைக்குச் செல்லப் போவது உண்மை. தேவர்கள் மலர் மழை பொழிவார்கள். உங்களை முதலில் அனுப்பிவைத்துத் தொடர்ந்து நானும் வானுலகம் வருவேன் என்று கூறினாள்.

கறைகண்டர் - நீலகண்டர், சிவபெருமான். அண்டையில் - அருகில். மெல்லி - மெல்லியலாள், பெண். அல்லல் - துன்பம். விடிவாகி - பொழுது விடிந்து. பதமது - பதம் + அது - திரவடியை. குடித்தனக்காரர் - வசிக்கும் வேளாளர். அரிவை - பெண். புவிக்கு - புவியில், பூமியில். கயிலை - கயிலாயபுரி. புஷ்பமாரி - பூமாரி, மலர் மாரி. மாரி - மழை. வானுலகு - மேலுலகு.

(வரலாறு கூறிய நீலியின் வருத்தம்)

அடதாளம்

106. இந்த விதம் என்று வந்த பழியதனை
எடுத்துக் கூறி யினியும்மை
எந்த விதங்கொல்லுவேன்
என்று மெத்த ஏங்கி யழுதாள்
சொல்வ தற்குளம் உருகு தேமனம்
துணிந்து மெய்யாய் உந்தனைக்
கொல்வ தற்குளம் ஒவ்வு மோவெனக்
குமுறி யழுதாள்.
அழகும் இளமையும் பேச்சும் திறமையுமாய்
உற்றீரே! முன்செய்த
பழியி னால்உமைக் கொல்ல வேண்டிய
தொழில்என்று அழுதாள்

பாவ மானதிப் படியல்லோ வந்து
பலித்தென் றேமருகிய
பூவை தான்செட்டி யாரே எனக்கென்ன
புத்தி என்றாள்.

ஏற்பட்ட பழிகளை எல்லாம் எடுத்துக் கூறிய நீலி இனி உம்மை எப்படிக் கொல்லுவேன் என்று மிகவும் இரங்கி அழுதாள். கொல்லுவேன் என்று சொல்லுவதற்கே வருத்தமாக இருக்கிறது. கொல்லுவதற்கு எப்படி மனம் வரும்? தாங்கள் அழகாகவும் இளமையாகவும் இருக்கிறீர்கள்! நல்ல பேச்சுத்திறன் இருக்கிறது; திறமைசாலியாக இருக்கிறீர்கள்; இருந்தும் முற்பிறவியின் பாவத்தால் கொல்லவேண்டிய தொழிலை நான் பெற்று விட்டேன். செய்த பாவமானது இப்படி வந்து சேர்ந்து விட்டதே! என் புத்தி மிகவும் அற்பமானது என்றெல்லாம் கூறி மனம் குழம்பிய நீலி உள்ளம் நொந்து அழுதாள்.

ஏங்கி - இரங்கி (இரக்கம் கொண்டு). ஒவ்வுமோ - இசையுமோ? குமுறி - கொதித்து. உற்றீர் - கிடைத்தீர். பிருகியபூவை - மறுகியபூவை - மனம் குழம்பியமாது.

(தரிசனன் தன்னைக் கொல்லச் சொல்லுதல்)

**சம்பை**

**107.** புத்தியென வேவணிகன் பூதமே இனிஎன்னை
வைத்திருக்க லாகாதுஉன் பத்துசெலுத் தென்றான்
அழுகைஏன் துயரமேன் அடிநாளி லேசெய்த
பழிதீரும் படிகவையைப் பார்த்துக்கொள்ளும் என்றான்
காரணம்தப் பாதிந்தக் கவலையேன் என்வயிற்றைப்
பீறிரத்தம் குடிஎன்று உபசரணை சொன்னானே.

தனக்கு அற்பபுத்தி என்று கூறிய நீலியை நோக்கி பூதமே! இனிமேலும் என்னை உயிரோடு விட்டு வைத்திருக்கக் கூடாது. முன்நாளில் செய்த பாவம் தொலையும்படி உன் விருப்பத்தை முடித்துக் கொள்ளும். செய்யவேண்டிய கடமையைத் தவறாது செய்வதில் வருத்தம் எதற்கு. என்வயிற்றைப் பிளந்து இரத்தத்தைக் குடியும் என்று உபசாரவார்த்தைகளைக் கூறினான் தரிசனன்.

உன்பத்து - உன்விருப்பம். அடிநாள் - முன்னாள். கவை - விருப்பம், தேவை. உபசரணை - உபசாரம், வேண்டுதல்.

(தரிசனைக் கொன்ற நீலியின் கிழவி வடிவம்)

## திரிபுடை

108. சொல்ல ஆலயம் முழுதும் பருத்து
சுவாசம் பெருத்தும் அகோர மாகிய
பல்லை நறநறவெனக் கடித்திவள்
கொல்ல எழுந்தாள்
அதட்டி யேநிலம் அதிர வேசெட்டி
ஆவி யானது போக வேயிவள்
உதட்டைக் கடித்துக்கொண்டு ஓங்கி ஒருகுத்தில்
வதைத்திட் டாளே
வீரத் துடன்செட்டி மாரைப் பிளந்துயிர்
விடுக வேகள்ளி குழந்தை யூணிவைத்து
ஊரைத் தேடிவந் தாள்அக் கோயிலைப்
பிரித்தாளே.
முகட்டைப் பீறிக்கொண்டு ஓடி யேவந்து
முதலி மார்களுக்கு உரைக்க வேயென்ன
வகைகொண் டாள்விருத்தக் கிழவி போல்மெத்தத்
திகைத்து வாடி.

தன்னைக் கொல்லுமாறு தரிசனன் கூறியவுடனே நீலி எழுந்தாள்; ஆலயம் முழுவதும் தன் வடிவமாகத் தோன்றுமாறு அகோர வடிவம் எடுத்தாள்; பெருமூச்சு விட்டாள்; பல்லை நறநறவெனக்கடித்தாள்; நிலம் அதிர்ச்சியடையுமாறு அதட்டினாள்; உதட்டைக் கடித்துக்கொண்டு தரிசனன் உயிர் நீங்குமாறு ஓங்கி ஒரு குத்துக் குத்தினாள். வீரத்தொடு தரிசனன் மார்பைப் பிளந்து உயிர் நீங்குமாறு வதைசெய்த நீலி குழந்தையாகத் தன்னிடமிருந்த கள்ளிச் செடியை அங்கே நட்டாள். உடனே ஊருக்குள் வருவதற்காக அந்த ஆலயத்தின் உச்சிப் பகுதியைப் பிரித்துக் கொண்டு வெளியேறினாள். மிகவயதான, தளர்ந்து வாடிய கிழவியைப் போல வடிவெடித்து வேளாளர்களைக் காணப் புறப்பட்டாள்.

ஆலயம் முழுவதும் பருத்து என்றது - பேயின் அகோர (உக்கிரமான) வடிவத்தினை சுவாசம்பெருத்து - பெருமூச்சுவிட்டு. வதைத்திட்டாள் - கொன்றாள். மார் - மார்பு. ஊணி - நட்டு. முகடு - உச்சிப்பகுதி. விருத்தக்கிழவி - வயது முதிர்ந்த கிழவி.

(நீலி தரிசனனின் தாய்வடிவில் புலம்புதல்)

**சம்பை**

109. செட்டியார் தாயைப் போலத்
திரேகமெடுத்து ஊரில் வந்து
கெட்டேனே மகனே என்னைக்
கெடுத்தார் என்று அழுதாள்
அம்மையப் பரேஅபயம் அநியாயம் இவ்வூரில்
என்மகனைக் கொன்றார்கள் என்றழுது வந்தாள்
கோல்ஊணித் தலைநடுக்கிக்
கொண்டுதெய்வ மேயென்று
காலமே பழையனூர்க்கு
ஓலமிடவே வந்தாள்
கண்வெளுத்து மெய்வெளுத்துக்
காயங்களெல் லாம்திரைஞ்சுப்
பண்பெருத்து தமிழ்ப்பழசைப்
பதித்தெருவில் வந்தாள்
ஞாயத்துக்கும் தயவில்லை
நாராயணா இவ்வநி
யாயத்தைக் கேட்டியெனப் பொக்கை
வாயைத்திறந் தழுதாள்

அவள் எடுத்த கிழவிவடிவம், தரிசனின் தாயைப் போல அமைந்தது. அவன் தாயாகவே பேசத்தொடங்கி, மகனே! என்னைக் கெடுத்து விட்டார்களே! அம்மையப்பரே! அபயம்! அநியாயமாய் இவ்வூரில் என்மகனைக் கொன்று விட்டார்களே என்று கதறி அழுதபடியே காலையில் பழையனூருக்குள் நுழைகிறாள்.

அப்போது அவள், கையில் தடிஒன்றைப்பிடித்து ஊன்றிக் கொண்டு வந்தாள். தலை நடுங்கியது; கண்ணும் உடலும் வெளுத்துக் காணப்பட்டன; உடலெல்லாம் சுருக்கம் கொண்டு தளர்ச்சியடைந்திருந்தது; பல்லில்லாத பொக்கை வாயைத்திறந்து நாராயணா! நியாயத்துக்கு இங்கு இடமில்லையா? இந்த அநியாயத்தைக் கேட்க மாட்டாயா என்று கதறியவாறே புகழ் பெற்றதும் தமிழ்வளர்ப்பதுமாகிய பழையனூர் தெருவிலே நடக்கத் தொடங்கினாள்.

திரேகம் - வடிவம். அம்மையப்பர் - சிவபெருமான். ஊணி - ஊன்றி. ஓலமிட - முறையிட்டு அழ. காயம் - உடல். திரைஞ்சு - சுருங்கித்தளர்ந்து. பண் - இசை. புகழ் பழசைப்பதி - பழையனூர். பொக்கைவாய் - பல்லில்லாதவாய்.

**(பழையனூர் அவையோர் வினவுதல்)**

**ஏகதாளம்**

110. அழவே பழசையில் அனைவோர் களுமிந்தக்
கிழம்ஏ தெனவெகு பரிவுடன் வந்தார்
பாட்டியம் மாஉனைப் பரிதவித் திடஎவர்
ஓட்டிவிட் டார்என்று கேட்டடி தொழுதார்.
பெரிய வயதில் உன்னை
மனது கலங்கச் செய்த
துரகி எவர்கள் எங்கட்கு
உரைசெய்யும் என்றார்
ஆருமில் லாப்பர தேசியைப் போலவே
ஊரில் அபயம்இட்ட காரியம் ஏது?

அழுதுவந்த கிழவியைக்கண்ட பழையனூரார் பலரும் அன்போடு ஒன்று கூடினார்கள். அவளின் பாதங்களை வணங்கிப் பாட்டியம்மா! உங்களை இப்படிவருந்துமாறு ஓட்டிவிட்டவர்கள் யார்? வயதான இந்தக்காலத்தில் உங்கள் மனம் வருந்துபடி செய்த பாவிகள் யார்? யாருமில்லாத பிச்சைக்காரியைப் போல இந்த ஊரில் வந்து முறையிட்டதற்கான காரணம் என்ன? எங்களிடம் கூறுங்கள் என்று கேட்டார்கள்.

கிழம்ஏது - கிழவியார்? பரிவு - அன்பு. பரிதவிக்க - துக்கிக்க, வருந்துமாறு. அடி - திருவடி, கால். துரகி - பொறுப்பாளி. பரதேசி - பிச்சைக்காரி.

**வசனம்**

காரியம் ஏதென்று காராளர் கேழ்க்கப் பாரிய கிழவியும் பதில் என்ன சொல்லுவாள்

(27)

பாரியகிழவி - வயது முதிர்ந்த கிழவி.

(என்மகனைப் பூதம் கொன்றுவிட்டது எனக் கதறுதல்)

**சம்பை**

111. மக்களே நேற்றுவந்த
வணிகன்தாய் நானும்அவன்
ஒக்கவர மாட்டாமல்
ஒன்றுதங்கி வந்தேன்
பிந்தினேன் என்னுடைய
பிள்ளைமுந்தி இவ்வூரில்
வந்தவனைத் துரத்திவந்த
மாபூதந் தனையும்
அம்மையப்பர் கோயிலுக்குள்
அடைத்தீர்க ளாம்அந்தக்
கொம்மைமுலைப் பாதகியும்
கொன்றுவிட்டுப் போனாள்

என்மகனை யநியாயத்
தினில்எந்த நீலியோ
வன்மம்வைத்துக் கொண்டுவந்து
மாரைப்பிளந் தாளே

ஐயையோ நீங்கள்சூது
வறியாம லேயவளை
மெய்யென்றிருந் தீர்மகனை
விருதாவிற் கொன்றாள்

எனக்குரிமை செயும்பிள்ளை
ஏகலாச் சேநீங்கள்
அனைத்தும்வழிசெய்தீர்என்
அதிஷ்டமிதென் றழுதாள்

முறையிட்டுவந்த காரியம் என்னவென்று கேட்ட வேளாளர்களைப் பார்த்து முதியவள் பேசுகிறாள். மக்களே! நான் நேற்று இங்கு வந்த வணிகன் தரிசனனின்

தாயாவேன். அவனோடு கூடவே நடந்து வர முடியாமல் சிறிது நிதானமாக வந்தேன். நான் பிந்தி விட்டேன். இந்த ஊரைநாடி எனக்கு முன்னால் வந்த என்னுடைய மகனை ஒரு பூதம் துரத்தி வந்ததாம். அந்தப்பூதத்தையும் என் மகனையும் அம்மையப்பர் கோவிலுக்குள் அடைத்துவிட்டீர்களாம். அந்தப் பெண்பூதமாகிய துரோகி, பகைமைகொண்டு அநியாயமாய்க் கொன்று விட்டாள். ஊரார்களாகிய நீங்கள் அவளுடைய தந்திரம் அறியாமல் உண்மை என்று நம்பி விட்டீர்கள். வீணாகக் கொன்று விட்டாள். எனக்கு ஈமக்கடன்களைச் செய்ய வேண்டிய மகன் இறந்து போய்விட்டான். அதற்கு நீங்களும் துணையிருந்தீர்கள். என் அதிஷ்டம் இவ்வளவுதான் என்று கூறி அழுதாள்.

ஒக்க - ஒன்றாக, கூட. ஒன்றுதங்கி - ஒருநாள்விட்டு, மறுநாளில். கொம்மை - இளமை, திரட்சி. பாதகி - துரோகி. வன்மம் - வைராக்கியம், பகைமை. சூது - தந்திரம். விருதாவில் - வீணாக. ஏகலாச்சு - போயாயிற்று, இறந்தாச்சுது.

## வசனம்

அதிஷ்டம் என்று அழுதவள் அங்கலாய்ப்புடனே இளைப்பும் தவிப்புமாய் இருந்தென்ன சொல்வாள் (28)

அங்கலாய்ப்பு - துக்கித்தல், பலவிதம் கூறிவருந்துதல். இளைப்பு - சோர்வு. தவிப்பு தவித்தல், செய்வதறியாது துடித்தல்.

*(என்மகனிடம் கூறியவாறு செய்யுங்கள் எனல்)*

## திரிபுடை

112. இனியென் சீவன் நில்லாது - மகனைவிட்டு
இருந்து பலன்என்ன வருது - நீங்கள்
என்தனையும் வலியவே கொல்லுங்கோள்
என்று வினவினாளே
ஈர மாய்எந்தன் மகனை - அனுப்பிவிட்
டீர்களே! இனி என்னையும் - உப
காரமாய்க் கொன்று போடும்
உங்கட்கும் பேர்உண்டாக

நீங்கள்என் பிள்ளைக்கு எந்த - வாக்கியம்
நிகழ்த்தினீர் அந்தப்படிக்கு இப்போது - என்முன்

காண்கவே செய்யில் ஆச்சுது - இல்லையேல்
ஏங்கி மடிவேன்.

இன்னும் புவியிருப் பீர்களே - உங்கட்கு
எமனைப் போல சண்டாளி - நீலியும்
வன்னி தனில்விழ வகைசெய்தாள் - வெகு
கன்னக் காரி.

இனியும் என் உயிர் இருக்காது. மகனை இழந்து நான் இருந்து என்ன பயன்? அருள் உள்ளத்தோடு என் மகனை மேலுலகு அனுப்பிவிட்டீர்கள். அப்படியே என்னையும் கட்டாயப் படுத்திக் கொன்று விடுங்கள். எனக்கும் உதவியாக இருக்கும்; உங்களுக்கும் புகழ் உண்டு.

நீங்கள் என் மகன் முன் என்ன வாக்கு கொடுத்தீர்களோ அதன்படியே என்கண்முன் செய்யுங்கள். இல்லையேல் மனம் உடைந்து இறந்துவிடுவேன். இன்னும் இந்த நிலவுலகத்தில் வாழ வேண்டியவர்கள் நீங்கள். உங்களுக்கு எமனாக வந்தாள் அந்தத் திருடியாகிய சண்டாளி நீலி. தீயில் விழ வேண்டும் என்ற நிலமையை உங்களுக்கு உண்டாக்கி விட்டாள்.

சீவன் - உயிர். ஈரமாய் - கருணையோடு. பேர் - புகழ். நிகழ்த்தினீர் - கூறினீர். காண்கவே - காணும்படியாக. ஏங்கி - அழுதழுது வருந்தி. வன்னி - தீ. கன்னக்காரி - திருடி.

(அவையோர் வருந்துதல்)

சம்பை

113. என்னவே அரகரா யீசுவரா யென்றவர்கள்
அனைவரும் அம்மையப்பர் மனைக்கு வந்தார்
தீபலோ சனன்வீட்டைச் சிதறவே பீறிக்கொண்டு
மாபூதம் தான்போன வழியைவந்து பார்த்தார்.

கதவைத்திறந் தார்வணிகன்
கால்வேறு கைவேறு
சிதறியிருந்தது பார்த்துச்
சிவசிவா வென்றார்

நம்மதிக்குப் பிசகாச்சுஎன்று
அனைவரும் கூடியே
விம்மிதப்பட் டேசாகச்
சம்மதித்துக் கொண்டார்.

பார்த்தையோ வணிகன் மெத்தப்
பயந்துவந்து நம்முடனே
சாற்றியதெல்லாம்அபத்தப்
பேச்சென்று இருந்தோமே
மெய்யாக விளைந்ததுஇனி
மேல்தவணை யாகில்வுரை
பொய்யாகப் போடுதென்று
போனார்கள் ஊரே

பேச்சுத்தவ றாதபடி
பிராணனைத்தந்தால்எந்த
இராச்சியத்தும் கீர்த்திநல்ல
மோட்சகதி யுண்டாம்.

கிழவி சொன்னதைக் கேட்ட பழையனூரார் 'அரகரா! ஈசுவரா!' என்று கூறியவாறே அம்மையப்பர் ஆலயத்திற்குச் சென்றார்கள். நெற்றிக்கண்ணை யுடையவனாகிய சிவபெருமானின் கோயிலைப் பிரித்து உதறி விட்டு அந்தப் பெரிய பூதமானது வெளியேறிய வழியைப் பார்த்தார்கள். கோயில் கதவைத் திறந்திருந்தார்கள். தரிசனன் கைவேறு கால்வேறாகச் சிதறிக் கிடந்ததைப் பார்த்துச் சிவசிவா! என்று அஞ்சினார்கள். நாம் அறிவில்லாமல் தவறு செய்து விட்டோம் என்று கூறி அச்சமடைந்த வேளாளர் அனைவரும் சாகத்தான் வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார்கள்.

மிகவும் பயந்து வந்து நம்மிடம் அடைக்கலம் புகுந்த தரிசனன் சொன்னதெல்லாம் பொய் என்று இருந்து விட்டோம். ஆனால் சொன்னதெல்லாம் உண்மையாகவே நடந்து விட்டன. இனியும் தாமதித்தால் நமது வாக்கு பொய்த்துவிடும். நாம் சொன்ன வாக்குத் தவறாமல் உயிரைவிட்டால் தான் எந்த நாட்டிலும் புகழ் உண்டு. மோட்சகதியும் கிடைக்கும் என்று கூறிச் சென்றார்கள்.

மனை - ஆலயம். தீபலோசனன் - சிவபெருமான், தீபம் - விளக்கு, தீ. லோசனன் - கண்ணையுடையவன். லோசனம் - கண். (நெற்றிக்கண்ணையுடையவன்) மதி அறிவு.

பிசகு - தவறு. விம்மிதம் - அச்சம், அதிசயம். அபத்தப்பேச்சு - பொய்யானபேச்சு. தவணை - கெடுவுக்காலம். மோட்சகதி - முத்திப்பேறு.

(தவறுகளுக்கு வருந்திப் புலம்புகிறார்கள்)

## திரிபுடை

**114.** என்றுஎல்லாரும் ஒன்றாகியே - மனது
ஏகமாய் வரவே
கந்தன்னில் இன்று - கயிலைக்கு
நடக்கிறோம் என்று - நன்றிகூறி
தாரம் பிள்ளைகள் தமக்கெ லாம்சொல்லித்
தானதர்மம் பாரி யாய்ச்செய்து
பேரி பூரிகை வழுங்கவே அந்த
ஊரை வலமாய்ச்
சுற்றி வந்தவர் சொல்லும் போதவர்
சுற்றத் தார்கள்எல் லாரும் கோவென்ற
சத்தமாய்அழத் தலைப்பட் டார்ஒரு
, மொத்தமாக
பேயைத் தான்செட்டிப் பெண்என் றேமுக
மாயத் தால்பரிந் தேசொன்னார் - இவர்க்கு
ஆயுசானது முடிந்த தோவென்று
எல்லாரும் அழுதார்.
மோசம் வருவது காண்கிலார் - விசு
வாச மாய்ப்பெண்ணுக் காகவே - இவர்
பேசி யேயிந்தப் பாடுண் டாச்சென்று
பெருக்க அழுதார்.

எல்லோரும் ஒருமனதாய் முடிவெடுத்து விரைந்து வந்தார்கள். மனைவி, மக்களுக்கெல்லாம் நாங்கள் எல்லோரும் இன்று கயிலைக்குப் புறப்படுகிறோம் என்று சொல்லிக் கொண்டு அனைவருக்கும் நன்றி கூறினார்கள். தானதர்மங்களை மிகுதியாகச் செய்தார்கள். மேள வாத்தியங்கள் முழங்க ஊர்வலமாய் வந்து அனைவரிடமும் சொல்லி விடை பெற்றபோது சுற்றத்தார் அனைவரும் கோவென்று கதறி அழத்தொடங்கி விட்டார்கள்.

பேயைச் செட்டிப் பெண் என்றே நம்பிவிட்டார்கள். அந்த மயக்கத்தால் அவளுக்காகப் பரிந்து பேசினார்கள். அதன் பயன் இன்று உயிர் விட நேர்ந்தது என்று கதறி அழுதார்கள். பின்னால் வரவிருக்கும் தீங்கை எண்ணிப் பார்க்காமல் நம்பிக்கையோடு பெண்ணுக்காகப் பரிந்து பேசியதால் இந்த நிலமை ஏற்பட்டது என்று கூறி அழுதார்கள்.,

*(மக்கள் புலம்பல்)*

## திபதை

**115.** பின்னையும் சனங்கள் பெருந்துக்க மாகி
அந்நகர் தனிலுள்ள ஆண்பெண் எல்லாரும்
குரும்புகும் பாயிந்தக் குறையுண்டோ வென்று
வெம்பிவெம் பிக்கண்ணீர் விட்டழு வாரும்
பாதகி நீலிசொற் படியிவர் கேட்டுச்
சேதமுண் டாச்சென்று திகைத்தழு வாரும்
ஆலயம் தன்னில் அடைத்தத னாலே
சோலியுண் டாச்சென்று சோர்ந்தழுவாரும்
[1]வானள யவன்கையில் வாங்கா திருந்தால்
மாளான்என் றேவலு வாய்அழு வாரும்
இருவரையும் வெவ்வேறு இல்லத்து அடைத்தால்
மரியான்என் றேமிக வாடிநிற் பாரும்
காவலாள் ஆகிலும் காக்கவைத்திருந்தால்
சாவுவா ராதெனத் தான்சொல்லு வாரும்
பண்ணபா வங்களிப் படிவிளைந் திட்டால்
எண்ணப் படிவார தில்லையென் பாரும்
அவரவர் மனப்படி யாய்விளை யாது
சிவன்செயல் வேறுஎன்று செப்பிநிற் பாரும்
ஈசுவரன் கோயிலுள் இப்படிச் செயச்சே
ஈசுவர னும்சமித்து இருந்தான்என் பாரும்

பழையனூர் வாழ்மா பாலருக் குள்ளே
எழுபது பேர்க்கும்ஓர் எழுத்தோவென் பாரும்

தரிக்குமோ நெஞ்சிது சாவள வினுக்கும்
மறக்குமோ வென்று மயங்கிநிற் பாரும்

இவர்கள் செயும்சத்தியம் என்னவே முன்பின்
எவரும் சொலக்கேட்டது இல்லைஎன் பாரும்

இப்படி வரும்இதென்று எவர்களும் அறிந்தால்
அப்பிர மாணிக்கம்சொல் லார்கள்என் பாரும்

ஏற்றமாம் அம்மையப்ப ஈசுவரன் தொடுக்கும்
சூத்திரம் இதுவென்று சொல்லிக்கொள் வாரும்

[2]இத்தினம் பிழைக்கினும் இறப்பதென்று எண்ணிச்
சத்தியத் தால்இவர் சாவதென் பாரும்

ஆசரி யாதுஉயிர் அகற்றுவோர் அதனால்
ஈசரோடு ஈசராய் இருப்பர்என் பாரும்

நீலிதான் இட்ட நெருப்பெண்ணை காரும்
நீலிசொல் லேநிலை நின்றதென் பாரும்

பழையனூர் வாழும் பரிசனம் எல்லாம்
அழுதழுது இப்படி அங்கலாய்த் திடவே

(சிதையில் கிடத்தித் தீமூட்டுதல்)

எழுபது பேர்களும் ஈஸ்வரன் கோயில்
ஊழியடைந் தேமற்றும் உள்ளவ ராலே

மகதேவர் சன்னதி வலது புறத்தே
அகலங்கள் மிகப்பரப் பாய்க்குழி வெட்டிச்

சந்தனத் தருதேவ தாரிவேம்பு அரசு
சிந்தக் கட்டையும் சீக்கிரம் அடுக்கி



தரிசனனும் வேளாளரும் பலியானதைக் கண்டும் வாளாவிருந்த பழையனூர் ஈசன்

நெய்க்குடம் எண்ணெய் நிறையவே ஊற்றிப்
பக்கத்தில் வாழைப் பழங்களே சொருகிச்

சிவகதி ஏகிய செட்டியார் தம்மை
இவர்கள்எல் லாருமாய் எடுத்துவந்து இப்பால்

வைத்துக்கொண்டு அவரிட மார்பொன்றாய்ச் சேர்த்து
வத்திரத் தால்கட்டி மாலைகள் சூட்டிக்

குங்குமம் சந்தனம் குளிரவே பூசி
சிங்காரம் செய்தொரு தேரும்உண் டாக்கித்

தேருக்கும் புஷ்பத் தினையலங் கரித்தே
சீரிட்டு வாழை திசையெலாம் கட்டித்

தெரிசன னாரையத் தேரினில் ஏத்தி
வரிசைய தாய்த்தன மாரி யிறைத்து

வத்திரம் பசுக்கள் மறையவர்க்கு அளித்தே
அத்தண்ட மனுக்களும் அழுதழுது உருக

வலம்புரி யாகவே வாத்தியம் முழங்க
நிலம்பிடி யாத நெருக்கம் உண்டாகி

வேடிக்கை யாக விமானம் எடுத்தே
சோடித்த கட்டைமேல் தூங்க வளர்த்திப்

பரிவாக அக்கினி பற்றவே மூட்டி
அரகராவென் றப்பால் அவர்இருந் தாரே

பழையனூர் மக்கள் எல்லோரும் ஆங்காங்குக் கும்பல் கூடிப் பலவாறாய் பேசிப்பேசித் தேம்பித் தேம்பி அழத்தொடங்கிவிட்டார்கள். பாதகி நீலி பேச்சைக் கேட்டதால் இத்தனைபேர் உயிர்விட நேர்ந்தது; ஆலயத்தில் அடைத்ததனால்தான் இந்த நிலமை ஏற்பட்டுவிட்டது. அவன் கையிலிருந்து வாளை வாங்காமலிருந்தால் இறந்திருக்கமாட்டான்; இருவரையும் வெவ்வேறு வீட்டில் அடைத்திருந்தால் இறந்திருக்கமாட்டான்; காவலாள் ஒருவரைக் காவல் வைத்திருக்க வேண்டும்; செய்த பாவத்தின்படிதான் எதுவும் நடைபெறும்; நம் எண்ணப்படி எதுவும் நடக்காது; சிவன்செயல்படிதான் எதுவும் நடைபெறும்; கோயிலுள் நடந்த இந்த அநியாயத்தை இறைவனும் சம்மதித்தானே!; பழையனூரார் எழுபது பேருக்கும் ஒரே எழுத்தாயிற்றே!; சாகும்வரை இந்த நிகழ்ச்சியை மறக்க முடியுமா? இவர்கள் செய்த சத்தியத்தைப்போல இதுவரை யாரும் செய்ததாகக் கேள்விப்பட்டதும் இல்லை; இப்படி நிகழும் என்று தெரிந்திருந்தால் அப்படி வாக்கு கொடுத்திருக்க மாட்டார்கள்; இதெல்லாம் அம்மையப்பரது தீர்ப்பாகும்; இன்று பிழைத்திருந்தாலும் ஒருநாள் சாகத்தானே வேணும் என்று எண்ணி செய்துவிட்ட சத்தியத்திற்காக இன்றே உயிர் விடத்துணிந்தார்கள், உயிர் மீது பற்று இல்லாமல் உயிர்விடுகிறார்கள். அதனால் இவர்கள் இறைவன் திருவடிகளில் சென்று அடைவார்கள்; நீலி இட்ட இந்த நெருப்பு என்றைக்கும் 'நீலிசொல்என்பதாகவே நிலைத்துவிட்டது. இவ்வாறு பழையனூர் மக்கள் ஒவ்வொருவரும் பலவாறாகக் கூறி மனம் உருகி அழுதார்கள்.

எழுபதுபேரும் இறைவன் ஆலயத்தை அடைந்தார்கள். மற்றும் உள்ளவர்கள் கோயிலின் வலது பக்கத்தில் மிகப் பெரிய பரப்பளவை உடையதாக ஒருகுழியை வெட்டினார்கள். அதில் சந்தனம், தேவதாரு, வேம்பு, அரசு, புளி முதலான மரங்களின் கட்டைகளை அடுக்கினார்கள். எண்ணெயும் நெய்யும் குடம் குடமாய் ஊற்றிச் சுற்றிலும் வாழைப்பழங்களைச் சொருகிவைத்தார்கள். எழுபதுபேரும் கூடித் தரிசனன் உடலை எடுத்து நிறுத்தி, அவனுடைய மார்பில் துணியைக் கட்டி, மாலைகளைப் போட்டு, சந்தனம் பூசி, குங்குமம் இட்டு அலங்கரித்தார்கள். தேர் ஒன்றைத் தயாரித்து அதில் நாற்புறமும் வாழைமரம் கட்டி மலரால் அலங்கரித்தார்கள். அத்தேரில் தரிசனன் உடலை ஏற்றினார்கள். அனைவரும் பணத்தை வாரி இறைத்தார்கள். அந்தணருக்கு ஆடையும் பசுக்களும் வழங்கினார்கள். மனமுருகி அழுது கொண்டிருந்த மக்கள் கோயிலில் இடமில்லாதபடி நெருக்கத்தை உண்டாக்கிவிட்டார்கள். அவர்களுக்கிடையே பலவகை வாத்தியங்கள் முழங்க தரிசனனைக் கிடத்தியிருந்த விமானத்தைச் சுமந்து, கட்டைகள் அடுக்கப்பட்ட குழியைச் சுற்றி வலமாக எடுத்துவந்து கட்டைகளின்மேல் கிடத்தினார்கள். பிறகு சிதையில் தீ மூட்டியபோது அரகரா! என்ற சத்தம் வானைப் பிளந்தது.

பின்னையும் - மேலும். சேதம் - அழிவு; உயிர்ச்சேதம். திகைத்து-பிரமித்து, மயங்கி. சோலி - (இந்தக்)காரியம், நிலமை. வாள்- கத்தி. மாளான் - இறந்திருக்கமாட்டான். மரியான் - இறந்திருக்கமாட்டான். விளைந்திடுதல் - நிகழ்ந்து விடுதல். மனப்படி - விரும்பியபடி. செப்பி- கூறி. சமித்து- பொறுத்துக் கொண்டு, மன்னித்து. ஓர் எழுத்தோ? - ஒரே தலைவிதியோ? தரிக்குமோ? தாங்குமோ? செயும் சத்தியம்-செய்த உறுதிமொழி. பிரமாணிக்கம் - பிரமாணம் - உறுதிமொழி, சத்தியம். சூத்திரம் - உபாயம், தீர்ப்பு. ஆசரியாது - போற்றிக் காப்பாற்றாமல். பரிசனம் - உறவினர். கோயில்உழி - கோயில்பக்கம். மிகப்பரப்பாய் - மிகுந்த நீள அகலமுடையதாய். தரு-மரம். தேவதாரி - ஐந்து தருக்களில் ஒன்று; அவை - கற்பகம், சந்தனம், தேவதாரம், பாரிசாதம், மந்தாரம் என்பன. வேம்பு - வேப்பமரம். அரசு - அரசமரம். சிந்தம் - புளியமரம். வத்திரம் - வஸ்திரம் - துணி. சிங்காரம் - அலங்காரம். சீரிடுதல் - அழகுபடுத்துதல். தனமாரி - பணமழை. மனுக்கள் - மனிதர்.

சுவடிச்சொல் - 1. வாளெ 2. எத்தினம்.

(தீ எரிமலையாதல்)

**சம்பை**

116. மூட்டியசெந் தணல்விறகு
முடியவெங்கும் தான்பரவிக்
காட்டில்மலை மூண்டெரிவது

ஆட்டமனல் வீசும்
அரிபிரமர் தமக்காக
அன்றுகயி லாசபதி
எரிமலைய தாய்இருந்த
விரிவதற்குண் டாச்சே
கொண்டல்குடி யாயிருக்கும்
மண்டலத்தும் அளவாகி
அண்டிஎழுந் ததுவடவை
அண்டினது போலே.

சிதையில் மூட்டப்பட்டதீ அடுக்கப்பட்ட விறகு முழுவதும் பரவியது. அது காட்டினிடையே மலை ஒன்று பற்றி எரிவதுபோலக் காட்சியளித்தது. அந்த அளவில் அனலும் வீசியது. திருமால், பிரமன் ஆகியோருக்காகச் சிவபெருமான் எரிமலையாய் இருந்ததுபோல இத்தீ பரவிக் காணப்பட்டது. மேகம் நிறைந்துள்ள ஆகாய மண்டலம் வரை உயர்ந்து எரிந்த அத்தீ வடவாமுகமாகிய ஊழித்தீ போல விளங்கியது.

தணல்-நெருப்பு. மூண்டுஎரிவது ஆட்டம் - பற்றி எரிவதுபோல. அனல் - தீ, சுவாலை. கயிலாசபதி - சிவபெருமான். விரிவு - பரப்பு. கொண்டல் - மேகம். மண்டலம் ஆகாயமண்டலம். அண்டி - மூண்டு, நெருங்கி. வடவை - வடவாமுகம், ஊழித்தீ.

**(அறுபத்தொன்பதின்மர் தீக்குளித்தல்)**

## திரிபுடை

117. ஒன்றுஒன் றாய் எண்ணிப் பார்க்கும் போதில் - அங்கு
ஒருத்தர்இல்லை குறைபேர் எல்லாம் - கும்பு
நின்றபேர் களையறுபத்து ஒன்பது என்று
எண்ணிக் கொண்டார்
சாட்சியெவர் மார்த்தாண்ட னோடும் இந்தத்
தரணியந்தர வாணியே என்று
சாட்சிகூறில் அப்போதநந்தம் வாக்க தாயே
நிசியிலே செட்டியுடன் விளம்பிய நேரந்தனை
இவர்களும் அறிந்திட வசனமாய்ச் சொன்னபோது
எல்லாரும் கணமகிழ்ச்சி யாயே



வேளாளர் அறுபத்தொன்பதின்மரும் தீக்குளித்த தீக்குண்டமும் அதன் அருகிலுள்ள தீப்பாய்ந்த மண்டபமும்



தீப்பாய்ந்த மண்டபத்துள் காணப்படும் வேளாளர் உருவச் சிலைகள்

கேட்டுநம் இனம்வாழ வென்றவர் வாழ்த்தி
யீசுவரன் பாதம் பணிந்துகொண்டு
ஆட்டமாய் அறுபத்து ஒன்பதின்மரும்
கூட்டமாய் ஒன்றோடொன்று கைகோத்துக்
கொண்டனர்உள் இறங்கிய போதுதான் குளிர்ந்து
தண்ணிபோல் இருந்துடலூடே சிவம் நண்ணினாரே.

ஒவ்வொருவராய் எண்ணிப் பார்த்தார்கள். ஒருவர் மட்டும் இல்லை. அறுபத்து ஒன்பதுபேர் மட்டுமே இருக்கிறோம் என்று கணக்கிட்டுக் கொண்டார்கள்.

மார்த்தாண்டனைச் சாட்சியாக வைத்தார்கள். பூமாதேவியே! ஆகாயவாணியே! நீங்களும் சாட்சி என்றார்கள். ஆகாயத்திலிருந்து அசரீரிவாக்கு ஒன்று கேட்டது. அன்றைய நடு இரவிலே தரிசனனுடன் பேசிய பேச்சையெல்லாம் அசரீரிவாக்கு கூறியது. எல்லோரும் மகிழ்ச்சியடைந்து'நம் இனம் வாழ்க' என்று வாழ்த்தி இறைவன் திருவடிகளை வணங்கி அறுபத்து ஒன்பதின்மரும் ஒருவரோடொருவர் கைகோத்துக் கொண்டு தீயில் இறங்கினார்கள். அத்தீ அவர்களுக்குத் தண்ணீரில் இறங்குவதுபோலச் சில்லிட்டது. அனைவரின் உடலிலும் இறையருள் வந்து சேர அனைவரும் இறையடியடைந்தார்கள்.

ஒன்று ஒன்றாய் - ஒருவர் ஒருவராக. தரணி - பூமி. அந்தரவாணி - அசரீரி. அநந்தம் வாக்கு - ஆகாயவாக்கு. நிசி - நடுஇரவு. வசனம் - நிகழ்ந்த செய்திகளை. கணமகிழ்ச்சி - சிறிது நேர மகிழ்ச்சி (கனமகிழ்ச்சி என்றிருப்பது பொருத்தமாகும்) உடலூடே - உடலுக்குள்ளே. நண்ணினார் - பொருந்தினார், வந்து அடைந்தார்.

## வசனம்

இந்தப்படிக்கு ஒருபழிக்கு எழுபதுபழி கொடுக்கிறோம் என்று சொன்ன வசனம் தப்பாமல் அறுபத்தொன்பது பேர் அக்கினிப் பிரவேசமாகிச் சிவ கயிலாசத்திலே அடைந்தார்கள். நேற்று வழக்குச் சொல்லி வாக்குத் தத்தம் பண்ணதிலே ஒருத்தன் ஒண்டிக்காரன் அவன் இந்தச் சமாச்சாரம் பொழுது விடிந்து விசாரியாமல் கோழி கூப்பிடச்சே எழுந்திருந்து தூரத்திலே கொல்லை உழப்போனான். அவனுக்கு விசேஷம் சொல்ல நீலி எந்தவிதமாய்ப் போறாள் எனில்



இறைவனைச் சாட்சியாக வைத்து வேளாளர் தீ மூழ்கிய சாட்சிபூதேசுரர் திருக்கோயில்

(நீலி எழுபதாவது வேளாளன் மகள்போல வடிவெடுத்தல்)

ஏகதாளம்

118. குண்டுமணிச் சுட்டியும்
கொண்டைமுடித் துக்கொண்டு
தண்டை கலகலெனத் தான்நடந் தாளே

கைக்காறைகள் விரல்களில்
பவழக் கோவையும்
மார்பணிந்து வந்தாளே

கொப்பிட்டுக் குறுக்கிட்டுக்
கூர்விழிக்கு மையிட்டுத்
தப்பினவ னைக்கொல்லத்
தான்நடந் தாளே

ஆடைதனை உடுத்தியவள்
மகள்போலக் கஞ்சிக்
கூடையெடுத் துக்கொண்டு ஓடிவந் தாளே

செம்பினி லேதண்ணீர்
செங்கையில்ஏந் திக்கொண்டு
அன்புடன் அவன்மகள் ஆகிவந் தாளே.

நீலி அழகாகக் கொண்டை முடித்து, நெற்றியில் மணிகள் பதித்த நெற்றிச்சுட்டி, காலில் தண்டை, கையில் காறை என்னும் வளையல், விரல்களில் பவழக்கொத்து, மார்பில் பவழமாலை, காதில் கொப்பு ஆகிய அணிகளை அணிந்தாள். கூரிய கண்களில் மையிட்டு அழகுபடுத்திக்கொண்டு ஆடையுடுத்தி எழுபதாமவன் மகள் போன்ற வடிவெடுத்துக் கொண்டாள். கஞ்சிக் கூடை சுமந்து, கையில் தண்ணீர் நிறைந்த கலசத்தை ஏந்தி அன்போடு ஓடிவந்தாள்.

சுட்டி - நெற்றிச்சுட்டி என்னும் அணி. தண்டை-காலணி. காறை- கழுத்தணி, சிறிய அளவில் கையிலும் அணிவதுண்டு; வளையல் போன்றது. கோவை - கோத்தமாலை. கொப்பு - காதணி. தப்பினவன் - எழுபதாமவன். செங்கை - சிவந்த, அழகிய கை.

**(தந்தைக்குச் செய்தி கூறுதல்)**

### சம்பை

119. ஓடிப்போய் நின்று கொல்லை
உழுவானுக்கு எதிர்சோற்றுக்
கூடைதனை இறக்கி, என்ன
கூறுவாள் அப்போது
ஊரெல்லாம் கொல்லாச்சுது
உணராயப் பாஇங்கே
ஏர்உழ வந்தாய் வாற
நேரம்அறி யாதே

கூசலாய் ஊரெல்லாம்
குழம்பச்சே கொல்லைஉழவு
ஆசையென்ன வரவப்பா
போசனத்துக் கென்றாள்.
எழவுபட்ட பாடாயங்கு
இருக்கச்சே இவ்விடத்தில்
உழவுகெட்டுப் போச்சோவென்று
ஓதியழைத் தாளே
செல்லமாகிய மகளுக்குப்
பராது சொல்லவே ஊரினில்
அல்லல் ஏதம்மா என்றான் அந்தக்
கன்னி சொல்வாள்
நானும் அறியேன் நேற்று இருவரை
நாதன் கோயினுள் ஊரார்கள் அடைத்துப்பின்
போன போதந்தப் பூதங் கொன்று
செத்தான் என்றார்கள்
செத்தவ னுக்குச் செந்தீயிட் டேயது
திக்கெனப் பற்றி எரியச்சே
அறுபத்து ஒன்பதின் மருங்கூடக்
குதித்தனர் சத்தியமாக
பாச மாய்மகள் சொல்லக்கேட் டந்தப்
பழிக்கு நானும்உத் தரிப்பதே - யதி
காலமே யறியாம லேர்உழத்
தேலினேனே- இனி
எப்படி யென்று மனதிலே மெத்த
எண்ண மாகிநின் றானப்போ - மகள்
சனகர்க்கு அறிய உபாய வழியொன்று
சாற்றினாளே

கொல்லையில் ஏர் உழுது கொண்டிருந்த தந்தையின்முன் சோற்றுக் கூடையை இறக்கினாள். அப்பா! ஊரெல்லாம் ஒரே அமர்க்களம்; வருத்தம். அதுதெரியாமல் ஏர் உழவந்துவிட்டாயே! ஊரே கலங்கிக் கிடக்கிறது. இப்போதும்

உணவுக்காக வருமானம் தேடவேண்டுமா? ஊரே சாவு வீடுபோலக் கிடக்கிறது. நமக்கு உழவு ஒருகேடா! புறப்படுங்கள் என்று அழைத்தாள்.

செல்ல மகள் முறையிட்டதைக்கேட்ட உழவன் ஊரில் என்ன துன்பம் ஏற்பட்டது என்று கேட்டான். எனக்கும் தெரியாது. ஊரில் பேசிக் கொண்டார்கள். நேற்று நம் ஊரார் யாரோ இருவரைக் கோயிலுக்குள் அடைத்துவிட்டுப் போனார்களாம். அவர்கள் போனபின்பு அங்கிருந்தவனைப் பூதம் கொன்றுவிட்டதாம். அப்படி இறந்தவனுக்குத் தீயிட்டார்கள். தீ நன்றாகப்பற்றி எரியும்போது அறுபத்தொன்பதின்மரும் அத்தீயில் குதித்துவிட்டார்கள். இது நடந்தது என்றாள்.

அன்போடு சொன்ன மகள் பேச்சைக் கேட்ட உழவன் அந்தப் பழிக்கு நானும் ஆளாகவேண்டும். ஆனால் இதையறியாமல் அதிகாலையில் ஏர்உழப் புறப்பட்டதால் இதிலிருந்து தப்பிவிட்டேன். இனி என்ன செய்வது என்று சிந்தித்தவாறு நின்றான். அப்போது மகள் ஒருவழி கூறுகிறாள்.

கொல்லை - நிலம்; புன்செய்நிலம். எதிர்-எதிரில். கொல்லாச்சுது - வருத்தம் உண்டாகிவிட்டது. குழம்பச்சே - கலங்கியிருக்கும்போது. வரவப்பா-வரவு - வருமானம். போசனம் - உணவு. எழவு - இழவு - சாவு. ஓதி - கூறி. அல்லல் - துன்பம். நாதன் - இறைவன். உத்தரிப்பது - சம்மதிப்பது; ஈடுசெய்வது. தேலினேன் - தப்பினேன். சனகர் - தந்தை.

(மகள் கருத்தின்படி கொழுவால் குத்திக்கொள்ளுதல்)

### ஏகதாளம்

120. காற்றைக் கழற்றிக்கொண்டு
கழுத்தடி தனில்குத்தி
ஏற்றிக்கொள் ளேன் இதற்கு
என்னவி சாரம்?
ஆமாம் இதையறி
யாமல்நின் றோம்என்று
பால்மா றாமலப்
படிசெய்யத் துணிந்தான்
பெற்றபெண் ஓதிய
பேச்சின்படிக் கொழுவில்
குத்திக்கொண் டவன்சிவ

கோத்திரை போனான்
நேசத்துட னேமுன்பு
நீங்கின பேர்களை
யாசித்து இவனுங்கயி
லாசத்திற் சேர்ந்தான்
பரமேசுவரன் எழுபது
பேர்களுக் கும்இந்தத்
திறமாய்ச் சிவகண
உருவது செய்தார்.

ஏர்க் கலப்பையிலுள்ள கொழுவைக் கழற்றிக் கழுத்தில் குத்திக் கொள்ளலாமே! இதற்கு ஏன் வருத்தப்படவேண்டும் என்று கூறினாள்.

ஆம்! இந்த உண்மையை நான் தெரிந்து கொள்ளவில்லை என்று எண்ணி உடனே தயங்காமல் அப்படியே செய்யத் துணிந்தான். மகள் கூறியபடியே கொழுவால் குத்திக்கொண்டு இறையடியை அடைந்தான். விட்டுப்பிரிந்திருந்த அறுபத்தொன்பதின்மரோடு கயிலாயம் அடைந்தான். இறைவன் எழுபது பேருக்கும் சிவகண வடிவமளித்து ஏற்றுக்கொண்டார்.

காற்றை - காறு+ஐ = காறு-கொழு. (ஏர்க்கலப்பையின் நுனியில் பொருத்தும் இரும்புச் சட்டம்)., ஏற்றிக்கொள்ளுதல் - குத்திக்கொள்ளுதல். பால்மாறாமல் - சிறிதும் தயங்காமல்,. தாமதிக்காமல். சிவ கோத்திரை - சிவ லோகம்; கோத்திரை - பூமி. நேசம் - அன்பு.

## வசனம்

இவ்வாறாய் ஒருபழிக்கு எழுபதுபழி துலைந்த பின்பு நீலியும் விரித்த தலையை முடித்துக்கொண்டு திருச்செங்காட்டுக்குப் போனாள். இப்பால் பழையனூரிலே மற்றும் பெருந்தலையாய் இருக்கப்பட்ட பெரியோர்கள் செட்டியார் வந்ததும், செட்டியார் பிறகே அவர் பெண்சாதி, பிள்ளைபோலே ஒரு நீலி வந்ததும், அவ்விடத்திலே வழக்கானதும், அவர்களைக் கோயிலுக்குள்ளே அடைத்து வைத்ததும், அவள் பாதி நேரத்திலே செட்டியாரைக் கொன்றுபோட்டதும், அவர்களுக்குச் சத்திய வசனம் சொல்லி எழுபதுபேர் மடிந்ததும் விவரமாக ஓலையிலே கண்டெழுதிக் காஞ்சிபுரத்துக்கு அனுப்புவித்தார்கள். அந்த ஓலையும் அந்தச் சேதியும் செட்டியார் பெண்சாதி அறிந்து எந்தவிதமாய்த் துயரப்படுவாள் என்னில்

(30)



கொழுவால் தற்கொலை செய்து கொண்ட எழுபதாவது வேளாளர் உருவச்சிலை அடங்கிய சின்னம்

*(காஞ்சியில் பூங்கோதை புலம்புதல்)*

*சம்பை*

121. பழியென்றால் கேளாமல்
பழையனூர்க் கேமேவி
அழியும்புடியாய் முன்னாள்
மொழியும்படி யாச்சே
பாரி நான்வரப் பேரம் பாக்கத்தில்
எந்தனை விட்டே
ஓரி யாய்ப்போய்ப் பழைய னூரில்மடிந் தீரே

புலியின் எதிரே வலியப் போகிற
கணக்காய் உங்கள்
தலையெழுத் தல்லோ? உயிரை
அலகைக் கையில் கொடுத்தீர்
மற்றும் இனத்தார் இந்த
வசனம் கேட்டு அரகரா!
செத்தது மெய்யாச்சுதே
சிவசிவா வென்றார்

தரிசனன் இறந்துபட்ட செய்தியைப் பழையனூரார் காஞ்சிபுரத்துக்குத் தெரிவித்தார்கள். செய்தியறிந்த பூங்கோதை, பழையனூர் பக்கம் சென்றால் தீங்கு நேரும் என்று சொன்னதைக் கேளாமல் சென்று இறந்துபோனீர்களே! மனைவியாகிய நான் வந்தேன். என்னைப் பேரம்பாக்கத்தில் ஒண்டியாய் விட்டுச் சென்று மடிந்தீர்களே! புலியின் எதிரில் வலிய போனதுபோல உங்கள் தலையெழுத்து அமைந்துவிட்டதே! பேய்க்கு இரையாகிவிட்டீர்களே என்று வருந்தி அழுதாள். உற்றார் உறவினரும் வணிக இனத்தாரும் அரகரா! சிவசிவா! முன் சொன்னது நடந்துவிட்டதே என்று வருந்தினார்கள்.

வலிய - தானாக.

(பூங்கோதை பழையனூர் அடைதல்)

**ஏகதாளம்**

122. இருப்பது கணக்கல்ல என்னூரி யோன்பட்ட
நெருப்பில் விழுந்துயிரை மரிப்பேன் என்றாளே

துணையிழந் திருப்பது பலனில்லை உறமுறை
அனைவரும் இசைந்து அப்பணைதா வென்றாள்

திருவுள்ள கொத்தந்தை மகளுக்கு வேண்டிய
பிரியம்சொன் னார்சொன்ன உரைமறுத் தாளே

ஆகையால் ஒன்றுக்கொன்று ஆலோ சனைஎண்ணி
ஏகநேர மாய்அந்தத் தோகை யுடன்கூட

கச்சிவிட் டேவடக் காகமுக் காதமும்
பட்சியைப் போல்மெத்தப் பறந்துவந் தாளே

தீக்குழி தனையெப்போ சேருவோம் எனவென்று
பாக்கியமுள பழைய னூர்க்குவந் தாரே.

இனிநான் உயிருடன் இருப்பது முறையல்ல. என் கணவன் எரிந்த நெருப்பில் விழுந்து உயிர்விடுவேன் என்று துணிந்தாள். உறன்முறையார்களே! கணவனை இழந்து வாழ்வதில் பயனில்லை;உத்தரவு தாருங்கள் என்று கேட்டாள்.

செல்வந்தனாகிய கொத்தந்தை மகளுக்கு ஆறுதல் கூறித் தடுத்தார். பூங்கோதை தந்தை சொன்னதை ஏற்றுக் கொள்ளவில்லை. ஒருவருக்கொருவர் கலந்து யோசித்தனர். அனைவரும் அவளுடன் புறப்பட்டனர். காஞ்சியை விட்டுப்புறப்பட்டு மூன்று காததூரமும் பறவை பறப்பதைப்போல விரைந்து வந்தார்கள். எப்போது தீக்குழியைச் சென்று அடைவோம் என்று எண்ணியவாறே பழைய னூரையடைந்தார்கள்.

கணக்கல்ல - நீதியல்ல. என் உரியோன் - எனக்கு உரியோன் - கணவன். பட்ட - வெந்துபோன. மரிப்பேன் - இறப்பேன் - அப்பணை - உத்தரவு. முக்காதம் - மூன்று காததூரம்.

(பூங்கோதை தீமூழ்குதல்)

திரிபுடை

123. ஈசன் ஆடிய பழைய னூரவர்
இங்கு வந்திருந் தார்க்குத் தங்களிட
மோசம் போயவக் கதையை யீதென்று
பேசினாரே
இவர்க்குப் பழிதங்கள் அவர்க்கும் பிசகிது
என்றே ஆசாரி சொன்னதும் அவர்க்கும் தெரியச்
சொன்னார் எல்லாரும்
சந்தேகத்தை விடுத்தார்.

செட்டியார் மனை யாட்டியும் - நல்ல
தீவனார் தனைச் சொல்லித் தீதனைக்

கிட்டி யரகரா சிவசிவா - என்றே
எட்டிக் குதித்தாள்.

நெருப்பில் குதித்திடும் மானும் வணிகனும்
நிமல னார்அருள் அடைந்தெந் நாளைக்கும்
இறப்புப் பிறப்பதில் லாமல் கயிலையில்
இருந்து வாழ்ந்தார்.

காட்டில் உலாவிய நீலியும் - சில
காலம் இருந்துசங் கரனை யோகத்தில்
நாட்டி யேயவள் உடல்விட் டேகயி
லாசம் அடைந்தாள்.



நீலி நினைவுக்கல்

இறைவன் திருத்தாண்டவமாடி எழுந்தருளிய திருத்தலமாகிய பழையனூர் மக்கள் அங்கு வந்து சேர்ந்த பூங்கோதை முதலானவர்களுக்குத் தாங்கள் நீலியை நம்பிமோசம் போய்விட்ட செய்திகளை எடுத்துச் சொன்னார்கள். தரிசனன் செய்ததிலும் தவறு இல்லை; ஊரார் நடந்து கொண்டதிலும் குற்றமில்லை. யாவும் முன்வினைப் பயன் என்பதைச் சோதிடர்களாகிய அந்தணர் எடுத்துக்கூறிச் சந்தேகத்தைப் போக்கினார்கள்.

தரிசனன் மனைவி அக்கினிக்கு வணக்கம் சொல்லித் தீக்குழியை நெருங்கினாள். அரகரா! சிவசிவா! என்று கூறியவாறே தீக்குழியில் குதித்தாள். நெருப்பில் குதித்த பூங்கோதையும் தரிசனனுமாகச் சேர்ந்து இறையருளைப் பெற்று என்றும் இறப்போ பிறப்போ இல்லாமல் கயிலையில் இறைவனடியில் நிலையாக வாழ்ந்து வந்தார்கள்.

காட்டில் பிசாசாகத் திரிந்து வந்த நீலியும் சில காலங்கழித்து இறைவனைத் தியானித்து பேயுடலை விட்டுநீங்கிக் கயிலையை அடைந்தாள்.

அக்கதை - தரிசனன் - நீலிகதை. ஆசாரி - பார்ப்பான். தீ - நெருப்பு. கிட்டி - நெருங்கி. நிமலனார் - தூயவர், இறைவன்.

**(சிவன் கோயிலுக்கு ஊரார் கும்பாபிஷேகம் செய்தல்)**

**சம்பை**

124. தீக்குழியி லேநெருப்புச்
சிலம்புபோ லேயெரிந்த
வாக்கில் இருந்ததனை எட்டிப்
பார்க்க அஞ்சலாகும்
அவியாம லேஎரியும்
அதிசயங்கண்டுஊரார்கள்
சிவநாதர் ஆலயத்துத்
தீட்டதனை நீக்கி
அன்பாக அம்மையப்பர்க்கு
அருமறையின் நெறியினால்
கும்பாபி ஷேகம்செய்து
கோடித்துக்கொண் டார்கள்.
ஆயிரம் பிராமணர்கள்

அம்மையப்ப நாதருக்கும்
ஆயிரம்பொற் கவசத்தால்
அபிஷேகம் செய்தார்
வெகுபூசை வெகுநேசம்
வெகுஞானம் உடன்அன்று
மகபூசை பண்ணினார்
மகதேவர் தமக்கு
எத்தாலும் அவியாமல்
இருக்குமம்மை யப்பருக்கு
ருத்திராபி ஷேகம் செய்து
வித்தார்அப் போது

தீக்குழியை எட்டிப் பார்த்தாலே நடுக்கம் ஏற்படும். காரணம் அந்தக் குழியிலிருந்த நெருப்பானது நெருப்பு மலையைப்போல எரிந்தபடியே இருந்தது. நெருப்பு அணையாமலே இருந்ததைக் கண்டு ஊரார் ஆச்சரியப்பட்டார்கள். சிவபெருமானின் திருக்கோயிலில் ஏற்பட்டுவிட்ட தீட்டை விலக்கவேண்டும் என்று எண்ணினார்கள். அதன்படி அம்மையப்பருக்கு வேதமுறை வழுவாமல் குடமுழுக்குச் செய்கிறோம் என்று பிரார்த்தனை செய்து கொண்டார்கள். ஆயிரம் அந்தணர்கள் சேர்ந்து அம்மையப்பருக்கு ஆயிரம் பொற்குடத்தைக் கொண்டு அபிஷேகம் செய்தார்கள். மகாதேவருக்கு மிகுந்த பக்தியோடு உயர்ந்த ஞானத்தோடு சிறப்புப் பூசைகளை மிக நேர்த்தியாகச் செய்தார்கள். என்றும் எதனாலும் அழிவில்லாத்தன்மை வாய்ந்த அம்மையப்பருக்கு உருத்திர மந்திரம் செபித்துச்செய்யும் உருத்திராபிஷேகம் செய்து நிறைவேற்றினார்கள்.

நெருப்புச் சிலம்பு - நெருப்புமலை. தீட்டு - அசுத்தம். கும்பாபிஷேகம் - குடமுழுக்கு, மறைநெறிப்படி தூய்மை செய்தல். கோடித்தல் - பிரார்த்தனை செய்தல். பொற்கலசம் - பொன்குடம். மகபூசை - சிறப்புப் பூசனை. அவியாமல் - அழியாமல். ருத்திராபிஷேகம் - உருத்திரமந்திரம் செபித்துச் செய்யும் அபிஷேகம்.

*(பெருமழை பொழிய ஊரார் விழா எடுத்தல்)*

**திரிபுடை**

125. சாமியார்க்கு ருத்திராபி ஷேகங்கள்
சமர்ப்பித்தே தொழுதேத்தும் பொழுதினில்

பூமிமழை யாய்சோனை
மழைவந்து பொழியலாச்சு

அஞ்சுநாள் பகலிரவு மாக விடாதுமழை
வந்து சொரியும் போதினில்
வெஞ்சம் ஆகிய தணலும் குளிர்ந்தது
வஞ்சம் மாறி
ஆற்றொ ணாவனல் மறைந்து போனபின்
அதிக பயபக்தி யுடனப் போகொடி
ஏத்தி யம்மையப் பர்க்குப் புதுமண
மூர்த்தமாக
நம்பி னோம்எம்மைக் காக்கும் பாரம்
உம்ம தாமென்று அம்மை யப்பர்க்குத் திருநாள்
அன்பு பெருத்தவர் நடத்தி னார்வெகு
சம்பிரமாக
மெத்தவம்மை யப்பரை வேண்டியும்
சித்தம்எங்கள் பாக்கியம் தாம்என்று
பத்து நாள்திரு நாளும் நடத்தினர்
அந்தியாக.

இறைவனுக்கு ருத்திராபிஷேகம் செய்து துதித்தபோது இந்த நிலவுலகு எங்கும் பெருமழை பொழியத் தொடங்கியது. ஐந்து நாட்களாக இரவு பகல் தொடர்ந்து பெய்த அந்த மழையினால் பழிக்கு உரியதாகிய அந்த நெருப்புத்தீயானது பழியொழிந்து குளிர்ச்சியடைந்தது. தணிக்கமுடியாத அந்தத்தீ அடியோடு மறைந்தபிறகு மக்கள் மிகுந்த பயபக்தியோடு அம்மையப்பர் ஆலயத்தில் திருவிழாவின் தொடக்கமாகக் கொடி ஏற்றுவிழாவினை நடத்தினார்கள். இறைவனை நோக்கி, உம்மையே நம்பினோம்; எங்களைக் காப்பாற்றும் பொறுப்பு உங்களுக்கே உரியதாகும் என்றெல்லாம் வேண்டிக்கொண்டு அம்மையப்பருக்குப் புதிய திருமணக்கோலம் செய்து மிகுந்த அன்போடும் பக்திப் பெருக்கோடும் வெகுசிறப்பாகத் திருவிழா நடத்தி மகிழ்ந்தார்கள். இவ்வாறே 'தங்கள் சித்தமே எங்கள் பாக்கியம்' என்று வேண்டியவர்களாய்ப் பத்து நாள் திருவிழாவினையும் நடத்திமுடித்தார்கள்.

சமர்ப்பித்தல் - உயர்ந்தோருக்கு அளித்தல். சோனைமழை - பெருமழை. சொரிதல் - பொழிதல். வெஞ்சம் - பழி. தணல் -நெருப்பு, தீ. ஆற்றொணா - ஆற்ற + ஒண்ணா

- தணிக்க முடியாத. அனல் - தீ. மணமூர்த்தம் - மணமுகூர்த்தம் - திருமணம். பாரம் - கடமை. சம்பிரமாக - மகிழ்ச்சியாக. திருநாள் - திருவிழா. அந்தியாக - முடிவாக, இறுதியாக.

(ஊரார் மகிழ்ச்சி)

**சம்பை**

126. தேவருக்குக் கலியாணம் செய்துநிறை வேறியபின்
யாவருக்கும் அவரவர்கள் வாழ்மனையி லேதான்

களிப்பதிக மாகிநித்திய கலியாணம் உண்டாகிக்
குளத்தில் அல்லித் தாமரையும் புணைத்ததென வாழ்ந்தார்

கெதியடைந்த பேர்கள்எழு பதின்மருக்கும் -இளையவரும்
சுதரும்இருந் தேபுவியில் சுகித்திருந்து வாழ்ந்தார்

பதிவிரதை யுடன்வந்த பந்துவர்எல் லாம்காஞ்சிப்
பதியில்அடைந் தேயதிக பாக்கியமுடன் வாழ்ந்தார்.

சிவபெருமானுக்குப் புதிய திருமணத்தினை முடித்தபிறகு அவரவர் தத்தம் இல்லத்தையடைந்தார்கள். அந்த இறைவனின் திருவருள்பெற்று நித்தியக்கலியாணவாசிகளாகி மிகுந்த மகிழ்ச்சியோடு குளத்திலுள்ள அல்லியும் தாமரையும் இணைந்து வாழ்ந்தது போன்று ஒன்றுபட்டு வாழ்ந்தார்கள். இறைவன் திருவடியை அடைந்த எழுபது பேருடைய தம்பிமார்களும் மக்களுமாகிய அனைவரும் இந்த நிலவுலகில் சுகமாக வாழ்ந்துவந்தார்கள். தீக்குளித்த பூங்கோதையுடன் வந்திருந்த உறவினர்கள் எல்லோரும் காஞ்சிபுரத்தையடைந்து எல்லாச் செல்வத்தோடும் வாழ்ந்துவந்தார்கள்.

நிறைவேறியபின் - முடிந்தபிறகு. களிப்பு - மகிழ்ச்சி. நித்தியகலியாணம் - நீங்காத மகிழ்ச்சி. அல்லி-ஆம்பல். கெதி-கதி. நற்கதி-மோட்சம். இளையவர் - தம்பியர். சுதர் - மகன். சுகித்து - செல்வம் அனுபவித்து. பந்துவர் - சுற்றத்தார். பாக்கியம் - செல்வம்.

(கொத்தந்தை தன் பேரனை வளர்த்தல்)

**ஏகதாளம்**

127. கொத்தந்தை யார்தன் குமாரத்திப் புதல்வனை
முத்துமுத் தாக வளர்த்தனர் மிகவே

பெண்ணின்வயிற் றில்வந்த பிள்ளையைக்கொத் தந்தை
ஆண்என வேகொண்டு களிப்புடன் வளர்த்தார்

வாழ்கந்தர் அருளால் மகள்பெற்ற பிள்ளைக்கு
நாகந்தை எனத்திரு நாமமிட்டு அழைத்தார்.

கொத்தந்தையார் தன் மகள் வயிற்றுப் பேரனுக்கு நாகந்தை என்றே பெயர்சூட்டினார். தன்மகனைப் போலவே எண்ணி மிக அருமையாகவும் சீரும் சிறப்புமாகவும் வளர்த்து வந்தார்.

திருநாமம் - பெயர்.

**(பேரன் நாகந்தையின் திருமணம்)**

## திரிபுடை

128. ஐந்து வயதான காரையில்
அருமைப் பேரனுக்கு உரிமைத் தமிழ்சொல்ல
சொந்த மாய்ஒரு வாத்தியார்
தமைத்தந்து மகிழ்வாய்
வள்ளலுக் கிணையென வேண பாக்கியம்
வாத்தி யார்தமக் களித்துப் பேரனைப்
பள்ளிக் கூடத்தில் ஓத அமைத்தனன்
உள்ளம் களிப்பாய்
பத்து வருஷமட் டாகச் சகலமும்
படித்துப் பேரனும் திறமை யானபின்
சித்தம் மகிழ்ந்துகொத் தந்தை தன்னுட
சிறுவர் தனிலே
முத்து பிள்ளைசித் தந்தை யவன்பெற்ற
சந்திர மதியெனும் பெண்ணைச் சோபனம்
அந்த நாகந்தை பேரன் தனக்குக்
கலியாணம் செய்தார்
அழகுபெறச் சோபனம் செய்த போதுஉற
முறைஎல் லாரையும் அழைத்துப் பினும்அந்தப்

பழையனூரவர் கலையும் அழைப்பித்துச்
செழுமை யாக.

பேரன் நாகந்தைக்கு ஐந்து வயது ஆயிற்று. அவனுக்குத் தமிழ் கற்பிக்க நினைத்தார் கொத்தந்தை. ஆசிரியர் ஒருவரை ஏற்பாடு செய்தார். அவருக்கு வேண்டிய வசதிகளையும் பொருளையும் பெரும் வள்ளலைப்போல வாரி வழங்கினார். மனமகிழ்ச்சியோடு ஆசிரியரிடம் படிக்க வைத்தார். பேரன் பத்து வயது நிறையும் வரைபடித்தான். பலநூல்களையும் படித்துத் திறமை பெற்றான். கொத்தந்தையின் ஒரேமகன் சித்தந்தை. அவனுடைய மகள் சந்திரமதி. தன்பேத்தியாகிய சந்திரமதியை நாகந்தையாகிய பேரனுக்குச் சிறப்பான முறையில் திருமணம் செய்துவைத்தார். அந்தத் திருமணத்திற்குத் தம் உறவின் முறையாரையும் பழையனூரார்களையும் அழைத்திருந்தார். அனைவரும் வந்திருந்து வாழ்த்தினார்கள்.

காலை-பொழுது. இணை-ஒப்பானவர். வேணபாக்கியம்-வேண்டிய செல்வம். மட்டாக - வரையிலும். சகலமும் - எல்லாவற்றையும். சோபனம் - சுபம், மகிழ்ச்சி, திருமணம், செழுமையாக - பெருமையாக. நிறைவாக.

*(நாகந்தையும் சந்திரமதியும் பெருகவாழ்தல்)*

**சம்பை**

129. சம்பிரமுடன் கலியாணம்
தான்செய்து நிறைவேற்றி
முன்புநா கந்தையெனப்
பேரன்பெருக வாழ்ந்தார்
பாட்டனிலும் அதிகதன்மம்
பண்ணிக்கொண்டு தான்பழைய
வீட்டில்இருந்து அதிகசெல்வம்
மிகப்புடனே வாழ்ந்தான்

மாதமும் மாரிபெய்து வையகத்தில் அகமேற
நீதியுடன் எல்லவரும் மேதினியில் வாழ்க!
கேட்டெழுதிப் படித்தவரும் கேட்டுவழங் கினபேரும்
நாட்டிலெங்கும் கீர்த்திபெற்று நல்லபடி வாழ்க!

(வாழ்த்து)

கச்சிவாழ் ஏகம்பர் காமாட்சி யார்கருணைமிச்சமாய்
உலகெங்கும் மிகப்பரவி வாழ்க!
திருவாலங் காட்டுத்தரும சிவகுருவின் அருளினால்
மருமேவும் காஞ்சிபுரம் வணிகேசர் வாழ்க!
தாரணியெ லாம்பணியும் சட்டைநா தையர்அருள்
பூரணம தாம்காஞ்சி புரம்வசியர் வாழ்க!
நாடெல்லாம் புகழ்நீலி நாடகத்தை இந்தவிதம்
பாடலாம் எனநினைந்து பாடினரும் வாழ்க!
மங்களம் -செய - மங்களம்
நித்திய -சுப - மங்களம்
மங்களம தடியார்கள் மனத்திலிருந் தருள்செய்யும்
இங்கிதம்சேர் காஞ்சிஏ கம்பருக்கு மங்களம்
மங்களம்ஏ காம்பரர் காமாட்சி யம்மையர்க்கு மங்களம்
மங்களம் காஞ்சிபுரம் வாழ்பவர்க்கு - மங்களம்
மங்களம் பரமகுருவான கருணாகரர்க்கு - மங்களம்
மங்களம் சிவபரி பூரணருக்கு - மங்களம்
மங்களம் திருவாலங்காட்டு வாழ்பவர்க்கு - மங்களம்
மங்களம் தர்மசிவ வள்ளல் தமக்கும் - மங்களம்
திங்களும் கங்கையும் செஞ்சடையின் மீதிலணி
எங்கள் பிரான் என்னும் ஏகாம் பரருக்கும்
சங்கரி நாதருக்கும் சங்கரியா ளர்தமக்கும் - புகழ்
தங்குகா மாட்சிசிவ சங்கரிக்கும் - மங்களம்
மங்களம் - செய - மங்களம்

சிறப்பானமுறையில் கலியாணத்தை முடித்துக்கொண்ட நாகந்தை தன் பாட்டனான நாகந்தையைப் போலவே பெருஞ்செல்வந்தனாக வாழ்ந்தான். பாட்டனைக்காட்டிலும் மிகுதியான தானதருமங்களைச் செய்தான். நாகந்தையாகிய தன்பாட்டன் வீட்டிலேயே மனைவியுடன் பெருவாழ்வு வாழ்ந்துவந்தான்.

மாதமும்மாரி பொழிந்து நாட்டுமக்களின் உள்ளமெல்லாம் மகிழ்ச்சி நிறைவதாக! மக்கள் நீதியும் நேர்மையும் கொண்டு வாழ்வார்களாக! இக்கதையைக் கேட்டவர்கள்,. கேட்டு எழுதியவர்கள், எழுதிப் படித்தவர்கள்,

கேட்டும் படித்தும் பிறருக்கு எடுத்துச் சொல்லியவர்கள் அனைவரும் புகழ்பெற்று வாழ்வார்களாக!

காஞ்சித் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் ஏகாம்பரநாதர், தேவியார் காமாட்சியம்மை ஆகியோரின் கருணையால் நாடு செழிப்படைவதாக! திருவாலங்காட்டில் உள்ள தருமசிவகுருவின் அருளால் காஞ்சி வணிககுலத்தோர் வாழ்வார்களாக! உலகமெல்லாம் வணங்கக்கூடிய சட்டைநாதையர் அருளால் காஞ்சிவணிகர்குலம் வாழ்வதாக! நாடுபுகழும் இந்த நீலி நாடகத்தை யட்சகானமாகப் பாடியவர்கள் வாழ்வார்களாக!

அடியார்கள் உள்ளத்திலே வீற்றிருந்து அருள்புரிபவராகிய அருள்நிறைந்த ஏகாம்பரநாதருக்கும், தேவி காமாட்சியம்மையாருக்கும், காஞ்சிபுர மக்களுக்கும், கருணாகரர் என்னும் குருவுக்கும், சைவ உள்ளம் நிறைந்த அடியவர்களுக்கும், திருவாலங்காட்டு மக்களுக்கும், சிவவள்ளல்களாகிய தர்மவான்களுக்கும் மங்களம் கூறி வாழ்த்தி வணங்குவோமாக !

பிறைச்சந்திரனையும் கங்கையையும் சடா முடியிலணிந்த எம்பெருமான் ஏகாம்பரேசுவரருக்கும், உமாதேவியாரின் தலைவராகிய இறைவனுக்கும், தேவியாரின் பக்தகோடிகளுக்கும், புகழ்மிக்க காமாட்சியம்மையாகிய சிவசங்கரியாருக்கும் மங்களம் கூறி வணங்குவோமாக !

பெருக-எல்லாச் செல்வமும் பெற்று. அகம் ஏற - உள்ளம் நிறைவடைய. மேதினி-நிலவுலகம். கச்சி-காஞ்சிபுரம். ஏகம்பர் - ஏகாம்பரநாதர் (இறைவன்) காமாட்சி - இறைவி பெயர். தாரணி- நிலவுலகம். சட்டைநாதையர் - சிவபிரான்; வசியர் - வைசியகுலத்தவர். கருணாகரர் -குருவின் பெயர். சிவபரிபூரணர் - சைவ உள்ளம் நிறைந்தவர். திங்கள் - சந்திரன். செஞ்சடை - சிவந்த சடாமுடி. சங்கரிநாதர் - உமையம்மையின் தலைவர்;சிவபெருமான்.

### சோபனம்

130. சோபனம் - செய - சோபனம் - சுப
சோபனம் - நித்திய - சோபனம்

மறவாத வர்க்கருள் வாரி யளித்திடும்
இறைவர்க் கீசர் சருவே சுரர்க்கும்
நறுமா மலர்க்குழல் நாரணி நாலெட்டு
அறமே செயுமெங்கள் அழகம் மைக்கும் (சோபனம்)

பவமகல் நீறுடன் பாக்கியருத்தி ராட்சமும்
சிவஉரு வாயணி தேசிகர்க்கும் எவருமகிழ்

சைவத்தில் எழில்கொள் வாழ்ப வர்க்கும்
தவமுறும் தர்மசிவா சாரி யர்க்கும் (சோபனம்)

மேதினி தனிற்சைவம் விளங்கவே வரும்சட்டை
நாதைய தேசிக நாயக ருக்கும்
மாதவம் புகழ்கச்சி மாளிகை தனவைசியர்
ஆதரவு ஆயிரவர்கள் அவர்தமக்கும் சோபனம்

சுபம் உண்டாவதாக! அச்சுபம் என்றும் நிலைபெறுவதாக! தம்மை என்றும் துதிப்போருக்கு அருள்புரியும் அருட்கடலாய் விளங்குபவரும், இறைவர்களுக்கெல்லாம் இறையாய் விளங்குபவருமாகிய சர்வேசுவரருக்கு சுபம் உண்டாவதாக!

மணம் மிக்க மலரணிந்த கூந்தலையுடையவரும், நாராயணி என்ற பெயரைப் பெற்றவரும் முப்பத்திரண்டு அறங்களைச் செய்து வருபவருமாகிய அழகம்மைக்குச் சுபம் உண்டாக வணங்குவோமாக.

பிறப்பை அறுக்கும் வெண்ணீற்றையும், பெரும்பேற்றை அளிக்கக்கூடிய உருத்திராட்சமாலையையும் அணிந்து சிவவடிவாகக் காட்சிதரும் சிவனடியார்களுக்கும், சைவசமயவாதிகளுக்கும், தர்ம சிவாசாரியர்களாக விளங்கும் யோகியருக்கும் சுபம் உண்டாவதாக!

நிலவுலகத்தில் சைவம் தழைக்கத் தொண்டுபுரியும் சட்டைநாதையருக்கும், தவவலி பெற்றவர்களாகிய காஞ்சிபுரத்து மாடமாளிகைகளில் வாழ்ந்துவரும் வைசியகுலத்தவர்களுக்கும் சுபம் உண்டாவதாக!

சோபனம் - செய - சோபனம். நித்திய - சோபனம்

**நீலியட்சகானம் எழுதி நிறைந்தது. முற்றும்.**

## ஓம்சாந்தி

சோபனம் - சுபம். அருள்வாரி - அருட்கடல். இறைவன்; சருவேசுரர் - சருவ + ஈசுவரர் - எல்லாம் நிறைந்தவன்; இறைவன். நறுமாமலர் - மணமிக்க மலர். குழல் - கூந்தல். நாரணி - உமாதேவி, துர்க்கை. நாலெட்டு அறம் - 32 வகைத் தருமங்கள். அழகம்மை - இறைவி. பவமகல் - பிறப்பை அகற்றும். நீறு - திருநீறு, வெண்ணீறு. ருத்திராட்சம் - உருத்திராட்சமணி. தேசிகர் - தலைவர், திருத்தொண்டர். எழில் கொள - வலிமை மிக; ஆர்வம்மிக.

# துணைநூல்கள்

## 1. சுவடிகள்

### நூலுக்குரிய சுவடி


| | | |
|---|---|---|
| 1. | நீலியட்சகானம், ஓலை. டி.505. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5. |


### ஒப்பிட உதவிய சுவடிகள்


| | | |
|---|---|---|
| 2. | நீலியட்சகானம், ஓலை. ஆர். 2665. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |
| 3. | நீலியட்சகானம், ஓலை. ஆர். 1967. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |
| 4. | நீலியட்சகானம், தாள். ஆர். 7436. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |
| 5. | நீலியட்சகானம், தாள். ஆர். 7431. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |
| 6. | நீலிவனேசுவர சுவாமி கோயில் சருவமானியம். ஓலை. டி. 3264. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |
| 7. | பழையனூர் வரலாறு. ஓலை. டி. 3443. | அரசினர் சுவடி நூலகம், சென்னை-5 |


### பிற சுவடிகள்


| | | |
|---|---|---|
| 8. | காட்டுக்கடை நீலியம்மன் வில்லுப்பாட்டு - தொகுதி - 2. தாள். | ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை-41. |
| 9. | காட்டுக்கடை நீலியம்மன் வில்லுப்பாட்டு - தொகுதி - 3. தாள். | ஆசியவியல் ஆய்வு நிறுவனம், சென்னை-41. |

## 2. அச்சு நூல்கள்.

1. இயக்கி வழிபாடு, வெ. வேதாசலம், அன்னம், மதுரை 1989

2. காப்பியம் படைத்த எண்ணங்கள், க.சுப்பிரமணியம், கேரளப் பல்கலைக் கழகம், காரிய வட்டம், திருவனந்தபுரம், 1985.

3. சிலப்பதிகாரம், உ.வே.சா., பதிப்பு தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1985.

4. சேக்கிழார் சுவாமிகள் புராணம், சபாபதி முதலியார், புரசை (பதி), வேதாந்த வித்தியா விலாச அச்சுக் கூடம், சென்னை, 1973.

5. தமிழ் இலக்கியத்தில் நாட்டார் பண்பாடு, பி.எல். சாமி, வானதி பதிப்பகம், சென்னை 1983

6. தமிழகக் கலைச் செல்வங்கள், Dr.துளசி இராமசாமி (பதி), உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, 1990.

7. திருக்குறள் கழக வெளியீடு, சென்னை-1 1937

8. திருத்தொண்டர் புராணம், C.K. சுப்பிரமணிய முதலியார் (பதி), கோவைத் தமிழ்ச் சங்கம், கோவை, 1968.

9. திருவாலங்காடு திருக்கோயில் திருக்குட முழுக்கு திருவிழா மடல், 15.7.1983.

10. தேவாரம், Institute of Franca..... D. indologic, Pondichery, 1984.

11. நீலகேசி, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1973.

12. பதினோராம் திருமுறை, திருப்பனந்தாள், 106 காசி மடம், —

13. பழையனூர் நீலி நாட்டுப் பாடல், முனைவர் சு.சண்முகசுந்தரம், கொடுமுடி சண்முக பிரகதம், — 1.1.1978.

14. மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை -1 1985

15. மதுரை நாயக்கர் வரலாறு, அ.கி. பரந்தாமனார், பாரி நிலையம், சென்னை 1981

16. மூதுரை, கழக வெளியீடு, சென்னை 1981

17. வல்லாள ராசன் இசைநாடகம் (யட்சகானம்), டாக்டர் எல்.ஏ.கே. துர்க்கா, (பதி), சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை -5, 1977

## 3. English - Books and Essays.

1. A History of Telugu Literature, Dr. Salva krishnamurthy, Institute of Asian Studies, Madras-41, 1994.

2. A note on Yakshagana Plays in Tamil (Essay), K. Nachimuthu, Kerala University, Trivandrum, (தமிழாய்வு, பல்கலைக்கழகத் தமிழாசிரியர் கழகம்) 1976.

3. Karnatak - Andra - Yakshagana, Dr. R.V. Sundaram, 1985.

4. Sangeet natak-11, Journal of the Sangeet Natak Akadami Rabindra Bhavan, New Delhi, 1969.

5. Tamil Yaksagaanas, Dr. Thulasi, Ramasamy, Vizhikal, Madurai, 1987

6. The cult of the Goddes Pattini, The University of Chicago press, Chicago, 1984.

7. The tunes of Divinity, Dr. Salva Krishnamurthy, Institute of Asian studies, Madras- 41, 1990.

8. Yakshagana, K. Shivarama Karanth, The Institute of Kannada Studies, University of Mysore-570006, 1974.

# இணைப்பு

## திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

**பண் - நட்டபாடை - காரைக்காலம்மையார்**

**திருச்சிற்றம்பலம்**

கொங்கை திரங்கி நரம்பெ ழுந்து
குண்டுகண் வெண்பற் குழிவ யிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கள் நீண்டு
பரடுயர் நீள்கணைக் காலோர் பெண்பேய்
தங்கி அலறி உலறு காட்டில்
தாழ்சடை எட்டுத் திசையும் வீசி
அங்கங் குளிர்ந்தனல் ஆடும் எங்கள்
அப்பன் இடந்திரு வாலங்காடே 1

கள்ளிக் கவட்டிடைக் காலை நீட்டிக்
கடைக் கொள்ளி வாங்கி மசித்து மையை
விள்ள எழுதி வெடுவெ டென்ன
நக்கு வெருண்டு விலங்கு பார்த்துத்
துள்ளிச் சுடலைச் சுடுபி ணத்தீச்
சுட்டிட முற்றுஞ் சுளிந்து பூழ்தி
அள்ளி அவிக்கநின் றாடும் எங்கள்
அப்பன் இடந்திரு வாலங் காடே 2

வாகை விரிந்து வெண் ணெற்றொ லிப்ப
மயங்கிருள் கூர்நடு நாளை யாங்கே
கூகையொ டாண்டலை பாட ஆந்தை
கோடதன் மேற்குதித் தோட வீசி
ஈகை படர்தொடர் கள்ளி நீழல்
ஈமம் இடுசுடு காட்ட கத்தே

ஆகங் குளிர்ந்தனல் ஆடும் எங்கள்
அப்பன் இடந்திரு ஆலங் காடே 3

குண்டிலோ மக்குழிச் சோற்றை வாங்கிக்
குறுநரி தின்ன அதனை முன்னே
கண்டிலோம் என்று கனன்று பேய்கள்
கையடித் தோடிடு காட ரங்கா
மண்டலம் நின்றங் குளாளம் இட்டு
வாதித்து வீசி எடுத்த பாதம்
அண்டம் உறநிமிர்ந் தாடும் எங்கள்
அப்பன் இடந்திரு வாலங் காடே. 4

விழுது நிணத்தை விழுங்கி விட்டு
வெண்டலை மாலை விரவப் பூட்டிக்
கழுதுதன் பிள்ளையைக் காளி யென்று
பேரிட்டுச் சீருடைத்தாவ ளர்த்துப்
புழுதி துடைத்து முலைகொ டுத்துப்
போயின தாயை வரவு காணா
தழுதுறங் கும்புறங் காட்டில் ஆடும்
அப்பன் இடந்திரு வாலங் காடே 5

பட்டடி நெட்டுகிர்ப் பாறு காற்பேய்
பருந்தொடு கூகை பகண்டை ஆந்தை
குட்டியி டமுட்டை கூகை பேய்கள்
குறுநரி சென்றணங் காடு காட்டில்
பிட்டடித் துப்புறங் காட்டில் இட்ட
பிணத்தினைப் பேரப் புரட்டி ஆங்கே
அட்டமே பாயநின் றாடும் எங்கள்
அப்பன் இடந்திரு வாலங் காடே 6

சுழலும் அழல்விழிக் கொள்ளி வாய்ப்பேய்
சூழ்ந்து துணங்கையிட் டோடி ஆடித்
தழலுள் எரியும் பிணத்தை வாங்கித்

தான்தடி தின்றணங் காடு காட்டில்
கழல்ஒலி ஓசைச் சிலம்பொ லிப்பக்
காலுயர் வட்டணை இட்டு நட்டம்
அழல் உமிழ்ந் தோரி கதிக்க ஆடும்
அப்பன் இடந்திரு வாலங் காடே 7

நாடும் நகரும் திரிந்து சென்று
நன்னெறி நாடி நயந்தவரை
மூடி முதுபிணத் திட்ட மாடே
முன்னிய பேய்க்கணம் சூழச் சூழக்
காடும் கடலும் மலையும் மண்ணும்
விண்ணுஞ் சுழல அனல்கை யேந்தி
ஆடும் அரவப் புயங்கன் எங்கள்
அப்பன் இடந்திரு ஆலங்காடே 8

துத்தங்கைக் கிள்ளை விளரி தாரம்
உழைஇளி ஓசைபண் கெழுமப் பாடிச்
சச்சரி கொக்கரை தக்கை யோடு
தகுணிதந் துந்துபி தாளம் வீணை
மத்தளங் கரடிகை வன்கை மென்றோல்
தமருகங் குடமுழா மொந்தை வாசித்
தத்தனை விரவினோ டாடும் எங்கள்
அப்பன் இடம்திரு ஆலங் காடே 9

புந்தி கலங்கி மதிம யங்கி
இறந்தவ ரைப்புறங் காட்டில் இட்டுச்
சந்தியில் வைத்துக் கடமை செய்து
தக்கவர் இட்டசெந் தீவி ளக்கா
முந்தி அமரர் முழவின் ஓசை
திரைகது வச்சிலம் பார்க்க ஆர்க்க
அந்தியில் மாநடம் ஆடும் எங்கள்
அப்பன்இடந் திருஆலங் காடே 10

ஒப்பினை இல்லவன் பேய்கள் கூடி
ஒன்றினை ஒன்றடித் தொக்க லித்துப்
பப்பினை யிட்டுப் பகண்டை யாடப்
பாடிருந் தந்நரி யாழ் அமைப்ப
அப்பனை அணிதிரு வாலங் காட்டுள்
அடிகளைச் செடிதலைக் காரைக் காற்பேய்
செப்பிய செந்தமிழ் பத்தும் வல்லார்
சிவகதி சேர்ந்தின்பம் எய்து வாரே 11

**திருச்சிற்றம்பலம்**

# மூத்த திருப்பதிகம்

**பண் - இந்தளம்** **காரைக்காலம்மையார்**

**திருச்சிற்றம்பலம்**

எட்டி இலவம் ஈகை சூரை
காரை படர்ந்தெங்கும்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி
சோர்ந்த குடர் கௌவப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற்
பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளியாடக்
குழகன் ஆடுமே 1

நிணந்தான் உருகி நிலந்தான் நனைப்ப
நெடும்பற் குழிகட்பேய்
துணங்கை எறிந்து சூழும் நோக்கிச்
சுடலை நவிழ்த் தெங்கும்
கணங்கள் கூடிப் பிணங்கள் மாந்திக்
களித்த மனத்தவாய்

அணங்கு காட்டில் அனல்கை ஏந்தி
அழகன் ஆடுமே 2

புட்கள் பொதுத்த புலால்வெண் டலையைப்
புறமே நரிகவ்வ
அட்கென் றழைப்ப ஆந்தை வீச
அருகே சிறுகூகை
உட்க விழிக்க ஊமன் வெருட்ட
ஓரிக தித்தெங்கும்
பிட்க நட்டம் பேணும் இறைவன்
பெயரும் பெருங் காடே 3

செத்த பிணத்தைத் தெளியா தொருபேய்
சென்று விரல்சுட்டிக்
கத்தி உறுமிக் கால்விட் டெறிந்து
கடக்கப் பாய்ந்துபோய்ப்
பத்தல் வயிற்றைப் பதைக்க மோதிப்
பலபேய் இரந்தோட
பித்த வேடங் கொண்டு நட்டம்
பெருமான் ஆடுமே 4

முள்ளி தீந்து முளரி கருகி
மூளை சொரிந்துக்குக்
கள்ளி வற்றி வெள்ளில் பிறங்குங்
கடுவெங் காட்டுள்ளே
புள்ளி உழைமான் தோலொன் றுடுத்துப்
புலித்தோல் பியற்கிட்டுப்
பள்ளி இடமும் அதுவே ஆகப்
பரமன் ஆடுமே. 5

வாளை கிளர வளைவாள் எயிற்று
வண்ணச் சிறுகூகை
மூளைத் தலையும் பிணமும் விழுங்கி

முரலும் முதுகாட்டில்
தாளிப் பனையின் இலைபோல் மயிர்க்கட்
டழல்வாய் அழல்கட் பேய்
கூளிக் கணங்கள் குழலோ டியம்பக்
குழகன் ஆடுமே 6

நொந்திக் கிடந்த சுடலை தடவி
நுகரும் புழுக்கின்றிச்
சிந்தித் திருந்தங் குறங்குஞ் சிறுபேய்
சிரமப் படு காட்டின்
முந்தி அமரர் முழவின் ஓசை
முறைமை வழுவாமே
அந்தி நிருத்தம் அனல்கை யேந்தி
அழகன் ஆடுமே 7

வேய்கள் ஓங்கி வெண்முத் துதிர
வெடிகொள் சுடலையுள்
ஓயும் உருவில் உலறு கூந்தல்
அலறு பகுவாய்
பேய்கள் கூடிப் பிணங்கள் மாந்தி
அணங்கும் பெருங்காட்டில்
மாயன் ஆட மலையான் மகளும்
மருண்டு நோக்குமே 8

கடுவன் உகளுங் கழைசூழ் பொதும்பிற்
கழுகும் பேயுமாய்
இடுவெண் டலையும் ஏமப் புகையும்
எழுந்த பெருங்காட்டிற்
கொடுவெண் டலையும் பிறையும் ததும்பக்
கொள்ளென் றிசைபாட
படுவெண் துடியும் பறையுங் கறங்கப்
பரமன் ஆடுமே 9

குண்டை வயிற்றுக் குறிய சிறிய
நெடிய பிறங்கற்பேய்
இண்டு படர்ந்த இருள்சூழ் மயானத்
தெரிவாய் எயிற்றுப்பேய்
கொண்டு குழவி தடவி வெருட்டிக்
கொள்ளென் றிசைபாட
மிண்டி மிளிர்ந்த சடைகள் தாழ
விமலன் ஆடுமே. 10

சூடும் மதியம் சடைமேல் உடையார்
சுழல்வார் திருநட்டம்
ஆடும் அரவம் அரையில் ஆர்த்த
அடிகள் அருளாலே
காடு மலிந்த கனல்வாய் எயிற்றுக்
காரைக்காற் பேய்தன்
பாடல் பத்தும் பாடி ஆடப்
பாவம் நாசமே 11

## சேக்கிழார் நாயனார் புராணம்

மாறுகொடு பழையனூர் நீலி செய்த
வஞ்சனையால் வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொற் பிழையாது துணிந்து செந்தீக்
குழியிலெழு பதுபேரு முழுகிக் கங்கை
யாறணிசெஞ் சடைத்-திருவா லங்காட் டப்ப
ரண்டமுற நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமை யெம்மாற்
பிறித்தளவிட் டிவளவெனப் பேச லாமோ (பா.15)

## திருத்தொண்டர் புராணம்

நற்றிறம்புரி பழையனூர்சிறு தொண்டர் தலைவர்
துற்றபோதுதம் முயிரை யும்வணி கனுக்கொருகால்

சொற்ற மெய்ம்மை யுந்தூக்கிச் சொல்லையே காக்கப்
பெற்ற மேன்மை யினிகழ்ந்தது பெருந்தொண்டை நாடு.
(பா. 1080)

### சம்பந்தர் தேவாரம் - திருவாலங்காடு

துஞ்ச வருவாரும் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரும் முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாழ்நாள் கொள்ளும் வகை கேட்டு
அஞ்சும் பழையனூர் ஆலங் காட்டெம் அடிகளே.
(பா. 45-481)

### திருஞானசம்பந்தர் புராணம்

துஞ்சவரு வாரென்றே எடுத்த வோசைச்
சுருதிமுறை வழுவாமல் தொகுத்த பாடல்
எஞ்சிலிலா வகைமுறையே பழைய னூரார்
இயம்புமொழி காத்தகதை சிறப்பித் தேத்தி
அஞ்சனமா கரியுரித்தார் அருளா மெனவே
அருளும்வகை திருக்கடைக்காப் பமையச் சாத்திப்
பஞ்சுரமாம் பழையதிறங் கிழமை கொள்ளப்
பாடினார் பாரெல்லா முய்ய வந்தார். (பா. 1010)

பழையனூர் திருவாலங்காட்டு வேளாளர் எழுபதின்மர் வணிகனுக்குத் தாம் அளித்த வாக்கினைப் புரக்கத் தீக்குழி பாய்ந்து உயிர் துறந்த புலத்தையும் வீரக் கல்லையும் கண்டு பாடியவை.

**சேரன்**

யாவரே காராளர் யாவர் இணையாவார்
நாவலோ நாவலோ நாவலோர் - கோவைப்
பொருப்பால் அழித்தார்க்குப் போதுமே உண்மை
நெருப்பால் அழித்தார்க்கு நேர்

***சோழன்***

*எல்லைப் பலகடந்திட் டெங்கும் புகழ்பூத்துத்*
*தொல்லை மனுக்காக்கத் தோன்றிற்றே - கொல்லை*
*வழியில்ஒரு பேய்நின்று வஞ்சனையால் செய்த*
*குழியில்எழு செந்தீக் கொழுந்து.*

***பாண்டியன்***

*பிழைத்தாரோ காராளர் பேய்மகள் சொற்கேட்டுப்*
*பிழைத்தார்கள் அல்லர் பிழை தீர்த்தார் - பிழைத்தார்கள்*
*எல்லோரும் காண எரியகத்தே மூழ்கினார்*
*எல்லோரும் இன்றும் உளர்.*

***சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி***
***உயர்திரு மா. அனந்த நாராயணன்,*** I.C.S.,
***அவர்கள் பாடியது.***

*பொய்யா முலகில் புகலரிய சொற்காத்த*
*வெய்தாமிக் காராளர் வேள்விதனை - அய்யாவோ*
*என்னென் றுரைப்பேன் எழில்கூத்தர் கால்கழலின்*
*பொன்னென் றுரைப்பேனிப் போது.*



# சொல்லடைவு

**எண் - பாடல் எண்.**

★ ★ ★

